# சுன்னத் வழி

ஆக்கம்: ஹுசைன் ஹில்மி இஸிக்

**ஹகீகத் நூலக வெளியீடு இல: 7**

# சுன்னத் வழி

## ஆக்கம்: ஹுசைன் ஹில்மி இஸிக்

23 ஆவது பதிப்பு

ஹகீகத் நூலகம்

Darüşşefeka Cad.53/A P.K.:35
**34083** Fatih-ISTANBUL/TURKEY
Tel:90.212.5234556–5325843 Fax:90.212.5233693
http://www.hakikatkitabevi.com
e-mail:info@ hakikatkitabevi.com

**JUNE-2016**

**தமிழ் மொழி பெயர்ப்பு ஆகஸ்ட் 2021**

# உள்ளடக்கம்

பிஸ்மில்லாஹிர்-ரஹ்மான்-இர்-ரஹீம்

# சுன்னத் வழி

## முன்னுரை

### அல்லாஹ்வின் பெயர்கொண்டு இந்நூலைத் தொடங்குவோம்!
### அல்லாஹ்வின் பெயர் மிகச் சிறந்த பாதுகாப்பு!
### அவனுடைய நிஃமத்துக்கள் எல்லா அளவிற்கும் அப்பாற்பட்டவை;
### அவன் கருணையுடையவன், மன்னிப்பபதில் இன்புறுபவன்

அல்லாஹுதஆலா, பூமியிலுள்ள எல்லா மனிதர்களிடமும் கருணை கொண்டு பயனுள்ள விஷயங்களை உருவாக்கி அவற்றை எங்களுக்கு தருகிறான். மறுமையில், நரகம் செல்ல வேண்டிய பாவிகளை (ஈமான் கொண்டவர்கள்) மன்னித்து அவர்களை சுவர்க்கத்திற்கு கொண்டு சேர்ப்பவன். எல்லா உயிரினங்களையும் அவனே படைக்கின்றான், அவற்றை ஒவ்வொரு கணமும் பரிபாலிக்கிறான், பயம் மற்றும் ஆபத்துகளிலிருந்து பாதுகாக்கிறான். அள்ளாஹுத்தஆலாவின் மேன்மையான நாமங்களில் நம்பிக்கை வைத்து இந்த நூலை எழுதத் தொடங்குகிறேன். ஹம்து[1] போற்றுதல் புகழ்ச்சி எல்லாம் அல்லாஹுத்தஆலாவுக்காக இருக்கும். சலவாத்தும் சலாமும் அவனுடைய தூதர் முஹம்மது ரசூல் சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்களுக்கும் அவர்களுடைய அருமை சஹாபாக்கள் மற்றும் அஹ்லுபைத்துக்கள் 'ரலியள்ளஹு தஆலா அன்ஹும்' அனைவர் மேலும் உண்டாகட்டும்.

**"இது போராட்டங்களின் உலகம்"** என்று ஒரு பழமொழி உண்டு. அதை ஒரு சாதாரண மான குறிப்பாக கருதக்கூடாது. வாழ்க்கையில் நாங்கள் பலவிதமான போராட்டங்களை சந்தித்து வருகின்றோம்; கோடை காலத்தின் சூடும் வியர்வையும், மற்றும் குளிர்காலத்தின் பனிப்பொழிவு பனி போன்ற இயற்கை சக்திகளுக்கு முகம் கொடுகின்றோம். மறுபக்கம், மார்க்கமற்ற தீய மக்களின் சூழ்ச்சிகள் மற்றும் அவதூறுகள், உளவியல் மற்றும் பௌதீக ஆயுதங்களைக் கொண்டு தாக்குகின்ற எதிரிகளுக்கு எதிராக நடத்தப்படும் போராட்டங்கள். இவ்விதமான பதில் போராட்டங்களை நடத்துவதற்கு முன் எதிரியைப் பற்றிய விரிவான அறிவைப் பெறுவது முதல் கடமையாகும். இல்லையெனில், நம்மை தற்காத்துக் கொள்வதற்காக மேற்கொள்ளப்படும் ஒவ்வொரு முயற்சியும் நம் அண்டை வீட்டாருக்கும் நண்பர்களுக்கும் ஏற்படுத்தும் காயமாக மாறக்கூடும்.

வசதியான வாழ்க்கைக்குத் தேவையான பொருட்களை **மால்** (சொத்து) அல்லது **முல்க்** (உடைமை) என்று அழைக்கின்றார்கள். வீட்டுக்கு தேவையான ஊசி நூல் தொடக்கம் அடுக்குமாடி வீடு வரை அனைத்தும் சொத்துகளாகும். அல்லாஹுதஆலா சில மனிதர்களுக்கும் மற்றும் சமூகத்தினருக்கும் இவற்றில் சிலவற்றை பயன்படுத்த அனுமதி கொடுத்துள்ளான். இந்த உடைமைகள் மற்றும் மனைவி, குழந்தைகள், அயலவர்கள் உறவினர்கள் எல்லாம் அல்லாஹ்வால் மனிதனுக்கு கொடுக்கப்பட்ட நி'ஃமத்துக்களாகும் (வரப்பிரசாதங்கள்). தங்கள் சொத்து

மற்றும் உடைமைகளை அல்லாஹுதஆலா அனுமதிக்கும் வரையறைக்குள் அனைவரும் பயன்படுத்தலாம். அவற்றை விட அதிகமாகவோ அல்லது வேறொருவரின் சொத்தை பயன்படுத்தவோ

---

[1] போற்றுதலும் நன்றியுனர்வும்.

ஒருபோதும் அனுமதிக்கப்படவில்லை. ஒரு பிரபலமான வாசகம் உள்ளது "உங்கள் சொத்தைப் பற்றி பெருமிதம் கொள்ளாதீர்கள், அதைவிட சிறந்தது இல்லை என்று ஒருபோதும் கூறாதீர்கள். ஒரு பாதகமான காற்று வீசக்கூடும், அது தானியங்களைத் துடைப்பதை போல் உங்களிடம் உள்ள அனைத்தையும் எடுத்துச் சென்றுவிடலாம்." தடைசெய்யப்பட்ட (ஹாராமான) வழிகளில் சம்பாதித்த சொத்துக்கள் உடைமைகள் என்பன **துனியா**(உலகம்) என்று அழைக்கப்படுகின்றது . துனியா என்பது ஹராம், மக்ரூஹு மற்றும் தீங்கு விளைவிப்பவைகளைக் கொண்டுள்ளது. பொருட்கள் அவை பயனுள்ளதா அல்லது தீங்கு விளைவிப்பதா என்பது குறித்து பல நூற்களில் பல்வேறு விளக்கங்கள் கூறப்பட்டுள்ளன. அல்லாஹுவினால் வகுக்கப் பட்டவைகள் வரையறை தான் அவற்றில் மிகச்சிறந்த வரைபாகும்.

அல்லாஹுதஆலாவின் கட்டளைகள் **பர்ளு**கள் என்றும், அவனால் தடுக்கப்படவைகள் **ஹராம்** என்றும் அழைக்கப்படுகின்றன. நபி 'சல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' அவர்களின் கட்டளைகள் **சுன்னத்** என்றும், அவர்கள் தடுத்தவை **மக்ரூஹ்** என்றும் அழைக்கப்படுகின்றன. இந்த நான்கு விஷயங்களும் ஒன்று சேர்ந்ததுதான் **இஸ்லாம்** என்று அழைக்கப்படுகின்றது. ஒருவரின் இதயத்தில் **ஈமான்** இருப்பதற்கான அடையாளம் **அஹ்காம்-அல்இஸ்லமியா** (இஸ்லாத்தின் கட்டளைகள், தடைகள்) என்பவற்றை விரும்பி ஏற்றுக்கொள்வதாகும். சுன்னத் ஒன்றை மறுப்பது ஈமானை இழந்து ஒரு **காபிர்** (நிராகரிப்பவர்) ஆக மாறுவதற்கு காரணமாகின்றது. ஒரு நபர் ஈமான் கொண்டு விட்டு இஸ்லாமிய கட்டளைகளுக்கு கீழ்ப்படிந்து நடக்காதவர் **fபாசிக்** (பாவி) ஆகின்றார். இஸ்லாத்துக்கு கீழ்ப்படியாமல் இருப்பது பாவம். ஒரு காபிர் நித்தியமாக நரகத்தில் எரிக்கப்படுவார். ஆனால் ஒரு fபாசிக் (அவர், அவள்) செய்த பாவத்தின் காரணமாக அவரது பாவத்துக்குரிய தண்டனையை உரிய காலம் வரை நரகில் தண்டனை அனுபவிப்பார், பின்னர் அவர் சொர்க்கத்திற்கு அழைத்துச் செல்லப்படுவார்கள். ஈமான் கொண்டு இஸ்லாத்திற்குக் முற்றிலும் கீழ்ப்படிந்த ஒரு நபர் **சாலிஹ்/சாலிஹா** என்று அழைக்கப்படுகிறார்.

மலைகளில் அல்லது காடுகளில் வாழும் இஸ்லாத்தைப்பற்றி அறிவதற்கு சந்தர்ப்பம் கிடைக்காத மனிதர்கள் காபிர்கள் என்றோ பாசிக் என்றோ முஸ்லிம் என்றோ அழைக்கப்படமாட்டர்கள். அவர்கள் நியாயத்தீர்ப்பு நாளில் கேள்வி கணக்குக்காக அழைக்கப்பட்ட பின்னர் சுவர்க்கத்திற்கோ நரகத்திற்கோ செல்ல மாட்டார்கள். அவர்களும் விலங்குகளைப் போலவே அழிக்கப்படுவார்கள். சுவர்க்கதுக்குரிய மதங்களில் ஒன்றான இஸ்லாம் ஒரு பெரிய நிஃ'மத்தாகும், இது மிகுந்த மகிழ்ச்சியை ஏற்படுத்துகிறது. இந்த நிஃமத்தின் மதிப்பைப் பாராட்டாத மக்கள் அதற்காக மறுமையில் பேரிழப்புகளுக்கு ஆளாகுவார்கள்.

ஒவ்வொரு முஸ்லிமும் தினமும் ஐந்து வேளை **தொழவேண்டும்**. ஒருவர் தொழுகையை நிறைவேற்றுவது அவர் இதயத்தில் ஈமான் உள்ளது என்பதற்கான அறிகுறியாகும். இந்த தொழுகையை மறுப்பவர் நிராகரிப்பவர்(காஃபிர்) ஆக மாறுவதற்கு காரணமாகிறது. தற்போது வழக்கத்தில் இல்லாத மதத்தில் நம்பிக்கை கொண்ட ஒரு காஃபிர் ஒரு **அஹ்லுல்-கித்தாப்** என்று அழைக்கப்படுகிறார். தற்போது வழக்கத்தில் இல்லாத மதத்தை மறுக்கும் மனிதன் முஷ்ரிக்(இணைவைப்பவர்) என்று அழைக்கப்படுகிறார். காஃபிர்களில் சில யூதர்களும் பெரும்பாலான கிறிஸ்தவர்களும் முஷ்ரிக் ஆகிறார்கள். இன்றைய உலகில், இணை வைப்பவர் (முஷ்ரிக்) ஆகாத ஒரு காஃபிர் கூட இல்லை.

முஹம்மது நபி 'சல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' அவர்களின் சில வார்த்தைகளை தவறாகப் புரிந்து கொண்டு அவற்றை பிழையாக பிரயோகிக்கும் வழி தவறிய சில முஸ்லீம்கள் புதுமை (**பித்அத்**)வாதிகள் என அழைக்கப்படுகிறார்கள். சீயாக்களும் வஹ்ஹாபிகளும் 'பித்அத்'தை கொண்டிருக்கும் முஸ்லிம்கள். அத்தகையவர்கள் நபி சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்களின் ஒரு கூற்றை (ஹதீதை) நிராகரித்தால் நம்பிக்கையற்ற (காபிர்களாக) மாறுவார்கள். முஹம்மது நபி சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்களின் கூற்றுக்கள் அனைத்தையும் அவற்றில் எந்த மாற்றமும் செய்யாமல் நம்பிக்கை வைக்கும் முஸ்லிம்கள் உண்மையான முஸ்லிம்கள் என்று அழைக்கப்படுகிறார்கள். அவர்கள் உண்மையான **அஹ்லுஸ்-சுன்னத்** இஸ்லாமிய அறிஞர்களைப் பின்பற்றுபவர்கள். இமாம் அல்-அஃலம் அபுஹனிஃபா, நுஃமான் பின் தாபித் (உண்மையான இஸ்லாமிய அறிஞர்கள்) அவர்கள் உண்மையான முஸ்லிம்களின் தலைவர்.

அஹ்லுஸ்-சுன்னத்தின் உண்மையான நம்பிக்கையை கொண்டுள்ள முஸ்லிம்கள் இஸ்லாமிய நடைமுறையில் மற்றும் வழிபாடுகள் சம்பந்தப்பட்ட விஷயங்களில் நான்கு சரியான மத்ஹப்களில் உள்ளனர். இந்த மத்ஹப்கள்: **ஹனஃபி, ஷாஃபீ, மாலிகி, மற்றும் ஹம்பலி**. இந்த நான்கு மத்ஹப்களை சேர்ந்தவர்கள் ஒருவரையொருவர் சகோதரர் மற்றும் சகோதரிகளாக பார்க்கிறார்கள். அவர்கள் ஒருவர் மற்றவருக்கு பின்னால் தொழுகையை மற்றும் வணக்கங்களை நிறைவேற்றுகிறார்கள். வேறுவிதமாகக் கூறினால், இந்த நான்கு மத்ஹப்களில் உள்ள யாரேனும் ஒரு முஸ்லீமினால் நடத்தப்படும் ஜமாஅத்து தொழுகைகளில் மற்றவர்களும் சேர்ந்து நிறைவேற்றுகிறார்கள். இந்த உண்மையான முஸ்லிம்களை மதவெறியர்களான பித்அத்துவாதிகளுடன் தவறாகக் கருதப்படக்கூடாது. அல்ஹம்து லில்லாஹ்! உலகெங்கிலும் உள்ள முஸ்லிம்கள் பெரும்பாலும் **அஹ்ல்-சுன்னத்** என்று அழைக்கப்படும் உண்மையான மத்ஹப்களில் உள்ளனர். தங்களைத் தாங்களே முஸ்லிம்கள் என்று அழைக்கும் வஹ்ஹாபிகளும், ஷீஆக்களும் (இரண்டு வித்தியாசமான வழிதவறியவர்கள்) அவர்களின் எண்ணிக்கை குறைந்து கொண்டு செல்கின்றது.

முக்கியமாக மூன்று பிரிவினரான மக்கள் அவர்களை தாங்கள் முஸ்லிம்கள் என்று கூறிக் கொள்கின்றனர். முதல் பிரிவினர் மதுகபுகளை பின்பற்றும்

உண்மையான முஸ்லிம்கள். முதலாவது, ஆஷ்ஹாபுல் கிராம்களின் அடிச்சுவடுகளில் இஸ்லாத்தை பின்பற்றும் முஸ்லிம்கள் அவர்கள் **அஹ்லுஸ்சுன்னத்** அல்லது **உண்மையான** முஸ்லிம்கள் அல்லது **ஃபிர்கா-இ-நாஜியா** என்று அழைக்கப்படுகின்றார்கள். இவர்கள் நரகத்தில் இருந்து காப்பாற்றப்பட்ட கூட்டத்தினர்.

இரண்டாவது கூட்டத்தினர் ஆஷ்ஹாபுல்-கிராம்களின் எதிரிகள். அவர்கள் ராபிதிகள் அல்லது **ஷியாக்**கள் அல்லது **ஃபிர்கா இ எல்லா**, அழைக்கப்படுகிறார்கள். அதாவது வழிதவறிய குழுவினர். மூன்றவது குழுவினர் சுன்னிகளுக்கும் ஷீ ஆக்களுக்கும் எதிரானவர்கள். இவர்கள் அவர்களின் பிறந்த இடத்தின் பெயரை கொண்டு **வஹ்ஹாபிகள்**, மற்றும் **நஜ்திகள்** என்று அழைக்கப்படுகிறார்கள். அவர்கள் **பிர்கா இல் மெஊனா**( சபிக்கப்பட்ட கூட்டத்தினர்) என்றும் அழைக்கப்படுவார்கள். அவர்கள் முஸ்லிம்களை பல தெய்வக்கொள்கை யுடையவர்கள் என்று கூறுவதின் காரணத்தால் அப்படி அழைக்கப்படுகிறார்கள். இது "இஸ்லாமிய வாழ்க்கை நெறி" **"Ethics of Islam"** எனும் நூலிலும் "**Endless Bliss"** இன் ௬ம் பாகத்தின் பல இடங்களிலும் எழுதப்பட்டுள்ளன. முஸ்லிம்களை நிராகரிப்பவர்கள் என்று அழைப்பவர்களைப்பற்றி நபி சல்லள்ளாஹு அலைஹிம் வசல்லம் அவர்கள் சபித்துள்ளார்கள். **யூதர்களும்** பிரிட்டிஷ் காரர்களும் சேர்ந்து இவ்வாறு முஸ்லிம்களை மூன்று குழுக்களாக பிரித்து ஒற்றுமையை நாசமாக்கியுள்ளார்கள்.

இஸ்லாமிய நம்பிக்கை கோட்பாடுகளை, ஏவல் விலக்கல்களை பற்றி ஆயிரக்கணக்கான நூல்கள் எழுதப்பட்டுள்ளன. அவைகளில் அநேகமானவை பிற மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டு உலகில் உள்ள அநேக முஸ்லிம் நாடுகளில் பிரசுரிக்கப்பட்டுள்ளன. அவற்றில் சரியான நூல்களை எழுதிய அறிஞர்கள் **அஹ்லுஸ் ஸுன்னா** அறிஞர்கள் 'ரஹ்மதுள்ளாஹி தஆலா அலைஹும் அஜ்மஈன்'கள். மறு பக்கம், குறுகிய அறிவு கொண்ட தனது சொந்த நலன்களையே குறிக்கோளாகக் கொண்டு பிரிட்டிஷ் துரோகிகளுக்கு அடிமை வேலை செய்த முட்டாள்கள் பதவிக்காகவும், பணம் மற்றும் வசதிகளுக்காகவும் இஸ்லாத்தினால் ஒளிமிகு ஆன்மீக ஆன்மிக வழிகளையும் அஹ்லுஸ் சுன்னா அறிஞர்களையும் தூசித்தார்கள். அவர்களால் தவறாக வழி நடததப்பட்ட அறிஞர்களைக் கொண்டு இஸ்லாத்தை புதிதாக வடிவமக்கவும் முஸ்லிம்களை வழி கெடுக்கவும் முயற்சி செய்தார்கள். முஸ்லிம்களுக்கு எதிரான மார்க்கம் அற்ற மடையர்களின் முன்னெடுப்புகள் பலநூற்றாண்டுகளாக தொடர்கின்றன, அது இறுதி நாள்வரை தொடரும். ஜனாப் அல்-ஹக் (அல்லாஹ்) இதை அவன் நித்திய காலத்தில் (eternal past) விரும்பி இருக்கிறான்.

அஹ்லுஸ் ஸுன்னா அறிஞர்கள் அவர்களது அறிவை புனித சஹாபாக்களிடமிருந்து பெற்றார்கள். சகாபாக்கள் இஸ்லாத்தை போதிப்பதற்காக அவர்களது தாய் நாட்டிலிருந்து வெளியேறி வெவ்வேறு தொலைதூர நாடுகளுக்கு குடிபெயர்ந்தார்கள் அதன் காரணத்தால் அவர்கள் கிதாபுகளை எழுதுவதற்கு நேரம் கிடைக்கவில்லை. இரண்டாம் இஸ்லாமிய நூற்றாண்டிற்குப் பிறகு வாழ்ந்த அறிஞர்களில் சிலர் இஸ்லாத்தின்

போதனைகளில் அவர்களின் தனிப்பட்ட கருத்துக்களாலும், அவர்கள் காலத்தின் விஞ்ஞான அறிவினாலும், தத்துவஞானிகளின் கூற்றுக்களாலும் மாசுபடுத்தி இருந்தனர். இது இஸ்லாத்தில் எழுபத்திரண்டு மாறுபட்ட 'பித்அத்' கூட்டத்தினர் உருவாகுவதற்கு வழி வகுத்தது. யூதர்கள் மற்றும் பிரிட்டிஷ் துரோகிகள் '**பித்அத்**' குழுக்களின் உருவாக்கத்தில் பெரும்பங்கு வகித்தனர். அவர்கள் எந்த கூட்டத்தை சேர்ந்தவர்களாக இருந்தாலும் தனது நப்ஸை பின்பற்றும் தீய உள்ளம் கொண்டவர்கள் நரகம் செல்வார்கள்.

ஒவ்வொரு விசுவாசியும் அவர்களுடைய நஃப்ஸின் தஸ்கியாவிற்காக, எப்பொழுதும், "**லா இலாஹ இல்லள்ளாஹ்** " என்று கூற வேண்டும், அது நப்ஸை அதன் அழுக்குகள், எதிர் தன்மைகள் மற்றும் பாவங்களிலிருந்து (அவை அவற்றில் இயற்கையாகவே அமைந்துள்ளன) அதை தூய்மைப்படுத்துகிறது. மேலும் "**அஸ்தஃபிருள்ளாஹ்**" என்று சொல்லுங்கள். அது அவர்களின் இதயத்திற்கு தஸ்ஃபியா வாகும். அதாவது தனது சொந்த நப்ஸ், இப்லீஸ், தீய தோழர்கள் மற்றும் தீய வழிகெடுக்கும் நூல்கலிலிருந்து பெற்றுக்கொண்ட ஏற்கமறுக்கும் தன்மை போன்ற பாவத்தின் நோய்களிலிருந்து இதயத்தை குணப்படுத்துகிறது. ஒரு முஸ்லீம் அஹ்காம்-இஸ்லாமியாவிற்கு கீழ்ப்படிந்து (அதாவது இஸ்லாத்தின் கட்டளைகளும் தடைகளும்,) நடக்கும்வரை அவர் அவர்களுடைய வணக்கங்கள் மற்றும் பிரார்த்தனைகள் நிச்சயமாக அல்லாஹுவால் ஏற்றுக்கொள்ளப்படும். ஒருநபர் தினமும் ஐவேளை தொழுகையை நிறைவேற்ற வில்லையானால், மற்றும் தங்களை சரியாக மறைக்காத பெண்களைப் பார்த்தால், அல்லது தனது அவ்ரத்தை வெளிக்காட்டும் (ஆண்/பெண்) மனிதர்களை பார்த்தால் மற்றும் ஹராமான வழியில் சம்பாதிக்கப்பட்டதை கொண்டு சாப்பிட்டால் குடித்தால் அவர் அஹ்காம்-இஸ்லாமியாவிற்கு கீழ்படியாதவர் என்று கொள்ளப்படும். அவர்களின் வணக்கங்கள் அல்லாஹ்வினால் ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது.

முஸ்லிம்கள் பிரதானமாக இரண்டு தரங்களில் உள்ளனர். ஒன்று 'கவாஸ்' [அறிஞர்கள்], மற்றது 'அவாம்' [பொதுமக்கள்]. இது இமாம் ஸாதா முஹம்மது பின் அப்துல்லா அஸஃத்' ரஹ்மத்துல்லாஹி தஆலா அலைஹி அவர்கள் (கொன்யா, டி. 1267 [1851 AD.])எழுதிய '**துர்ரி-யக்த்தா**' என்ற துருக்கிய கிதாபில் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது. "அவாம் என்பது சர்ஃப், நஹ்வ், அரபு இலக்கணம் மற்றும் தொடரியல் மற்றும் விதிகள் முறைகள் ஆகியவை கற்காத நபர்கள். இவர்கள் ஃபிக்ஹு மற்றும் ஃபத்வா கிதாபுகளை படிக்கவும் புரிந்துகொள்ளவும் முடியாதவர்கள். அஹ்லுஸ்-சுன்னத்தின் அறிஞர்களிடம் கேட்பதன் மூலம் இஸ்லாமிய நம்பிக்கை மற்றும் வழிபாட்டின் போதனைகளை இந்த மக்கள் கற்றுக்கொள்வது கட்டாய கடமை(ஃபர்ள்).

அறிவைப் கற்பிப்பது அறிஞர்களின் கடமையாகும். முதலில் ஈமானைப்பற்றிய அறிவையும் அடுத்ததாக ஐந்து வகை அடிப்படையான வணக்கங்கள் தொடர்பான போதனைகளையும் வாய்வழி மற்றும் எழுதப்பட்ட பாடங்கள் மூலமாகவும் கற்பிக்க வேண்டியது கடமையாகும். **zசஹீரா** மற்றும் **டாட்டார்ஹானிய்யா** என்ற தலைப்பில் எழுதப்பட்டுள்ள நூற்களில் ஈமானை பற்றிய பிரிவுகளை கற்பிப்பதும், **அஹ்ளுஸ்ஸுன்னா**

நம்பிக்கை பற்றியவைகளை கற்பிப்பதும் மற்ற எல்லா செயல்களையும் விட முன்னுரிமை அளிக்கப்பட வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது.

ளாஹிர் (வெளிப்படையான) மற்றும் பாதின் (இரகசிய) அறிவில் நிபுணருமான மிகச்சிறந்த இஸ்லாமிய அறிஞரும் செய்யித் அப்துல் ஹகீம் அர்வாசி ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களின் கடைசி காலத்தில் பின்வரும் அறிக்கையை வெளியிட்டார்கள். "நான் கிட்டத்தட்ட முப்பது ஆண்டுகளாக ஈமானைப்பற்றியும் அஹ்லுஸ்-சுன்னத்தின் கோட்பாடுகளுடன் இஸ்லாம் கற்பித்த அழகிய தார்மீக நடத்தை என்பவற்றை இஸ்தான்புல்லின் மஸ்ஜிதில் கற்பிதிருக்கிறேன். "அந்த விஷயத்தில், நாங்கள் அஹ்லுஸ்-சுன்னத்தின் கோட்பாடுகள், இஸ்லாத்தின் ஒழுக்கநெறிமுறைகள், மற்றவர்களுடன் சிறந்த முறையில் சேர்ந்து இருப்பது, நாட்டுக்கு சேவை செய்வது, ஒத்துழைப்பு வழங்குவது என்பவற்றின் முக்கியத்தும் பற்றி எங்கள் நூற்களில் கற்பித்து வருகிறோம். மத அறிவில்லாதவர்கள் மற்றும் லா-மத்ஹபினர் மற்றும் ஸிண்டிக்குகள் எழுதிய அரசுக்கு எதிராக மக்களைத் தூண்டும் மற்றும் சகோதரர்களிடையே கருத்து வேறுபாட்டை பரப்புகின்ற நாட்டுக்கு எதிராக தூண்டிவிடும் கட்டுரைகளை நாங்கள் ஏற்கவில்லை.

பெருமானார் நபி 'ஸல்லள்ளாஹு அலைஹி வஸல்லம்' அவர்கள்: **"மதம் வாள்களின் நிழலில் உள்ளது**,"என்று கூறியது அரசின் பாதுகாப்பிலும் அதன் சட்டங்களாலும் முஸ்லிம்கள் நிம்மதியாக வாழ்வார்கள் என்பதையே சுட்டிக் காட்டுகின்றது. அரசு எவ்வளவு சக்தி வாய்ந்ததாக மாறுகிறதோ, அவ்வளவு அதிகமாக அமைதியும் ஆறுதலும் அதிகரிக்கும். அதேபோல், முஸ்லிம் அல்லாத ஐரோப்பிய மற்றும் அமெரிக்க நாடுகளில் சுதந்திரமாக தங்கள் மதக் கடமைகளைச் செய்யும் முஸ்லிம்கள் தங்கள் அரசுக்கு எதிராகக் கிளர்ச்சி செய்யக்கூடாது. அந்த நாடுகள் அவர்களுக்கு சுதந்திரத்தை அனுமதிக்கின்றபோது அதன் சட்டங்களை முஸ்லிம்கள் மீறக்கூடாது. குழப்பங்கள் செய்வதற்கு தூண்டப்படலாம் என்பதால் அவர்கள் மிகவும் எச்சரிக்கையாக இருக்கவேண்டும் என்று அஹ்லுஸ்-சுன்னத்தின் அறிஞர்கள் எங்களுக்கு அறிவுறுத்தி இருக்கிறார்கள். நான்கு மதுஹபுகளில் உள்ள அறிஞர்கள் அஹ்லுஸ்ஸுன்ன அறிஞர் என்று அழைக்கப் படுகிறார்கள்.

**ஒரு முக்கியமான குறிப்பு**: உலகின் வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு காட்சிகள் உள்ளன. அவற்றைப் பார்த்து நீங்கள் ஒருபோதும் சோர்வடைவதில்லை. அந்த இடங்கள், அவற்றின் அழகு என்பன தானாகவே வந்தனவா? அவை ஒவ்வொன்றும் துல்லியமாக கணக்கிடப்பட்ட மற்றும் நன்கு விகிதாசாரமானது அவை ஒரு இயந்திரத்தின் துல்லியமான தயாரிப்பு என்பது போல் தெரிகிறதுஅல்லவா. எல்லாமே இயற்பியல், வேதியியல், உயிரியல் மற்றும் வானியல் விதிகளைச் சார்ந்தது. எல்லாவற்றிற்கும் மேலாக, மனிதனின் உருவாக்கத்தில் இணக்கம் மற்றும் சமச்சீர்மை! எங்கள் உறுப்புகளுக்கிடையே உள்ள ஒருங்கிணைப்பு என்பன அவை நன்றாக வடிவமைக்கப்பட்ட ஒரு முழுமையான இயந்திரத்தின் பாகங்கள் போன்று இருக்கின்றன. நன்கு அறியப்பட்ட முஸ்லீம் அல்லாத ஆங்கில அறிஞர் டார்வின் கூட, கண் உருவமைப்பில் தனது வியப்பை ஒப்புக் கொள்ள

வேண்டியிருந்தது[1]. ஒருபோதும் மாறாத மற்றும் ஒன்றுக்கொன்று சார்ந்த விதிகள் மூலம் அனைத்து உயிரினங்களும் ஒன்றுகொன்று தொடர்புடயவை. மத நம்பிக்கை கொண்டவர்கள் இந்த எல்லா உயிரினங்களையும் உருவாக்கும் ஒரு அறிவார்ந்த **காலிக்** (படைப்பாளன்) இருக்கிறான் என்று ஒப்புக்கொள்வார்கள்.

எல்லா மதங்களையும் மறுக்கும் நாத்திகர்கள், மறுபுறம், எல்லாமே தானாக ஒரு முறையற்ற வழியில் எழுமாறுதலாக வருவதாக கூறுகின்றனர். படைதத்தவனோ தனது தீர்க்கதரிசிகளை அனுப்பி : "**நான் அனைத்தையும் படைத்தேன். நான் ஒருவனே உங்கள் அனைவருக்கும் உரிமையாளன். நீங்கள் என்னை நம்பிக்கை கொண்டால், என் சொர்க்கத்தில் உங்களுக்கு இடமளிப்பேன். நான் உங்களுக்கு எண்ணற்ற நி'மத்துக்களை தருவேன். இன்பம் மற்றும் மகிழ்ச்சியின் முடிவில்லாத வாழ்க்கையை நீங்கள் நடத்துவீர்கள். என் தீர்க்கதரிசிகளை மறுப்பவர்களை சதாவும் நரகத்தின் நெருப்பினால் தண்டிப்பேன்.**" என்று ஒரு செய்தியை அனுப்புகிறான். சொர்க்கமும் நரகமும் இல்லை என்றும், விசுவாசிகள் நபிமார்களை நம்பியிருப்பது தவறு என்றும் நினைத்தால், அவர்கள் (விசுவாசிகள்)செய்த தவறினால் அவர்களுக்கு எந்தத் தீங்கும் ஏற்படாது. நபிமார்கள் உண்மையைச் சொன்னதிலிருந்து, அவர்களை நம்ப மறுக்கும் மக்களும் தங்கள் அறிக்கைகளை மாற்றியவர்களும் சதாவும் எரியத்தான் போகிறார்கள்.

ஏறக்குறைய அனைத்து முஸ்லீம் நாடுகளிலும் உள்ள மதம் சார்பான அதிகாரசபையினர் அஹ்லுஸ்-ஸுன்னாவின் இந்த சரியான வழியை அறிவிக்கவும் பாதுகாக்கவும் முயற்சி எடுக்கிறார்கள் என்பதை நன்றியுடன் காணலாம். இருப்பினும், சில அறியாத மக்கள் அஹ்லுஸ்-சுன்னாவின் அறிஞர்களால் எழுதப்பட்ட கிதாபுகள் படிக்காமல் அல்லது அதை புரிந்து கொள்ளாமல். சில அறியப்படாத, வாய்வழி மற்றும் எழுதப்பட்ட அறிக்கைகளை முன் வைத்து தங்கள் அறியாமை மற்றும் மோசமான தன்மையைக் வெளிக்காட்டுவதை தவிர, முஸ்லிம்கள் கொண்டிருக்கும் உறுதியான ஈமானிலும், ஒருவருக்கொருவர் வைத்திருக்கும் சகோதர அன்பிலும் ஒற்றுமையிலும், அவர்கள் எந்த மாற்றத்தையும் ஏற்படுத்தப் போவதில்லை.

---

[1] "வெவ்வேறு தூரங்களுக்கு தோற்றங்களை சரிசெய்வதற்கும், வெவ்வேறு ஒளியின் அளவுகளை ஏற்றுக்கொள்வதற்கும், மற்றும் கோள மற்றும் வர்ணத் தன்மையைத் திருத்துவதற்கும், இயற்கையான ஒரு முறையினால் எழுசார் முறையில் கண் உருவாகியிருக்கக் கூடும் என்று கருதுவது, மிகப்பெரிய அளவில் அபத்தமானது என்று நினைக்கிறேன். ஒப்புக் கொள்ளுகிறேன்.

சார்லஸ் டார்வினின் உயிரினங்களின் தோற்றம், ஜே. எம், டென்ட் @ சன்ஸ்எல்டிடி, லண்டன், 1971, ப. 167. (p.18of The Advised Quote Book).

முஸ்லிம்களுக்கிடையே தோன்றிய பிரிவினைவாத குழுக்கள் இல்முல்-ஹால் கிதாபுகளையும் தசவ்வுபுடைய அறிவுபெற்ற பெரும் அறிஞர்கள் 'ரஹீமஹுல்லாஹு தஆலா அலைஹும்அஜ்மஈன்'களையும் இழிவுபடுத்துகின்றனர். அஹ்லுஸ் சுன்னா வின் அறிஞர்களுடன், அஹமத் சவ்தத் பாஷாவும் மற்றும் எங்கள் விஞ்ஞான சபையும் சேர்ந்து அவர்களுக்கு

தக்க பதில்களை அளித்து வருவதன் மூலம் நபியவர்கள் குர்ஆனுன்க்கு கொடுத்த சரியான அர்த்தங்களைப் பாதுகாக்கின்றோம்.

எங்களுடைய தற்போதைய நூலில் சரியான வழிகளை வேறாகவும், பிழையானதை வேறாகவும் எடுதுக்காட்டுகின்றோம். எங்கள் மதிப்புமிக்க வாசகர்கள் இந்த நூலை அவர்களின் பொது அறிவு(common sense) மற்றும் தூய்மையான மனசாட்சியுடன் கவனமாகப் படிப்பதால் சரியானதை உணர்வார்கள். மேலும் அவர்கள் அஹ்லுஸ் ஸுன்னாவின் உண்மையான வழியில் ஒன்றிணைந்து பொய் மற்றும் அவதூறு பரப்பும் தீயமக்களைத் தவிர்க்க வேண்டும் என்று நாங்கள் அல்லாஹுு த ஆலாவிடம் மன்றாடுகின்றோம். அவ்வாறு செய்வதன் மூலம், அவர்கள்அல்லாஹுுவின் நிரந்தர தண்டனையிலிருந்து தப்பித்துக்கொள்வார்கள்.

எங்கள் நூற்களின் சில பகுதிகளுக்கு கீழ் சேர்க்கப்பட்டுள்ள மேலதிக விளக்கங்கள் அடைப்புக்குறிக்குள் எழுதப்பட்டுள்ளன [...]. இந்த விளக்கங்கள் அனைத்தும் உண்மையான கிதாபுகள், நூல்கள் களிலிருந்து பெறப்பட்டவைகளாகும்.

| Mîlâdî | Hijrî Shamsî | Hijrî Qamarî |
|---|---|---|
| 2001 | 1380 | 1422 |

## வெளியீட்டாளரின் குறிப்பு:

இந்த புத்தகத்தை அதன் அசல் வடிவத்தில் அச்சிட அல்லது வேறு எந்த மொழியிலும் மொழிபெயர்க்க விரும்பும் எவருக்கும் அவ்வாறு செய்ய எங்கள் அனுமதி முன்பே வழங்கப்படுகிறது; இந்த நன்மை பயக்கும் வேலையை மேற்கொள்ளும் நபர்களுக்கு அவர்கள் பேரில் நாங்கள் முன்கூட்டியே அல்லாஹுத்தஆலாவிடம் அவர்களின் பெயரில் அதற்கான சலுகைகளுக்கும் நன்மைகளையும் வழங்குமாறு வேண்டுகிறோம். எங்கள் நன்றி யுணர்வையும் வாழ்த்துக்களையும் அவர்களுக்கு தெரிவிக்கின்றோம். இருப்பினும், எங்கள் அனுமதி, அச்சிடலுக்குப் பயன்படுத்தப்படும் காகிதம் நல்ல தரம் வாய்ந்ததாக இருக்க வேண்டும், எழுத்து வடிவமைப்பு மற்றும் புத்தக அமைப்பை ஒழுங்காகவும் சுத்தமாகவும் தவறுகள் இல்லாமல் செய்து முடிக்க வேண்டும் என்ற நிபந்தனைக்கு உட்பட்டது.

______________________________

### ஒரு எச்சரிக்கை:

கிறிஸ்தவ மிசனரிகள் கிறிஸ்த்துவத்தை விளம்பரப்படுத்த பாரிய முயற்சி செய்கின்றனர். யூதர்கள் யூத ரப்பீகளின் பொய்யான கற்பனையான வார்த்தைகளை பரப்புவதற்கு வேலை செய்கின்றார்கள், இஸ்தான்புல்லில் உள்ள ஹகீகத் கிதாபேவி (புத்தக பிரசுரிப்பாளர்கள்) புனித இஸ்லாத்தை விளம்பரப்படுத்துவதற்காக போராடி வருகின்றது. மேலும் சுதந்திரவாதிகள் மதங்களை அழிக்க முயற்சிக்கின்றனர். ஞானம், அறிவு மற்றும் மனச்சாட்சி உள்ள ஒருவர் இவற்றில் சரியானதை புரிந்துகொள்வார்கள், ஒப்புக்கொள்வார். மேலும் அனைத்து மனிதகுலத்தின் இரட்சிப்புக்காக அவர்களின் முயற்சிகளுக்கு உதவுவார். அவ்வாறு செய்வதை விட மனிதகுலத்திற்கு சேவை செய்வதற்கு இதைவிட சிறந்த வழி அல்லது மதிப்புமிக்க விஷயம் எதுவுமில்லை

______________________________

### கலிமா-தன்சீ(z)ஹ்

“**சுப்ஹானள்ளாஹி வபி ஹம்திஹி சுப்ஹானள்ளாஹி இல்-அளீம்**”. காலையிலும் மாலையிலும் இந்த கலிமா-இ-தான்சீஹ்வை ஒரே தடவையில் நூறு தரம் கூறுபவரின் பாவங்கள் மன்னிக்கப்படும். இந்த பிரார்த்தனை **மக்தூபாத்**(துருக்கிய அசல் பதிப்பில்முதல் பாகம்) என்ற நூலின் 307 வது மற்றும் 308 வது பக்கங்களில் புத்தகத்திலும் எழுதப்பட்டுள்ளது. இது எல்லா வகையான கவலைகளையும் துன்பங்களையும் நீக்கும்.

# 1. நன்மை பயக்கும் தகவல்கள் (MA'LÛMÂT-I NÂFI'A)

இச்சிறு நூல் அஹமத் ஜௌதத் பாஷா ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களால் எழுதப்பட்டுள்ளது. அவர்கள் மஜல்ல என்னும் பெறுமதிமிக்க நுலில் குர்ஆனின் சட்டதிட்டங்களைத் தொகுத்து இஸ்லாத்திற்கு மிகப்பெரிய சேவையை செய்துள்ளார். 12 பாகங்கள் கொண்ட **ஓட்டமன்** வரலாறு என்னும் ஆதாரபூர்வமான நுலையும், **கஸஸுல் அன்பியா** எனும் நபிமார்களின் வரலாறு நுலையும் எழுதியுள்ளார். ஹிஜ்ரி 1238 இல் எலப்ஜா என்னும் ஊரில் பிறந்து ஹிஜ்ரி 1312 இல் காலமாகி இஸ்தாம்பிலுள்ள பத்தீஹ் பள்ளிவாசலின் மையவாடியில் நல்லடக்கம் செய்யப்பட்டுள்ளார்கள்.

சவ்தத் பாஷா கூறுகிறார்கள்: இந்த உலகமும் அதில் உள்ள எந்தப்பொருளும் இருக்கவில்லை. அல்லாஹ் அவற்றை ஒன்றுமில்லாத நிலையிலிருந்து படைத்தான். அவன் மனித இனத்தைக் கொண்டு இவ்வுலகம் முடியும் வரை அதைச் சிறப்பாக்க விரும்பினான். ஹஸ்ரத் ஆதம் (அலை) அவர்களை மண்ணினால் படைத்து அவர்களின் குழந்தைகளினால் இவ்வுலகை அலங்கரித்தான். அவர்களுக்கு இவ்வுலக, மறுவுலகுக்கு அவசியமானவைகளை விளக்குவதற்காக அவர்களில் சிலரை நபிமார்களாக்கி "அலைஹிஸ்ஸலாம்" கௌரவித்தான். அவர்களுக்கு உயந்த அந்தஸ்த்துகளை அளித்து மற்ற மனிதர்களிலிருந்து அவர்களை வேறுபடுத்தினான். வானவர் ஜிப்ரீல்(அலை) மூலம் அவனது கட்டளைகளை அந்த நபிமார்களுக்கு அறிவித்தான். அந்நபிமார்கள் ஜிப்ரீல்(அலை) கொண்டுவந்த கட்டளைகளைகளை அவர்களது உம்மத்துக்களுக்கு எடுத்துக் கூறினார்கள். அதில் முதலாவது ஹஸ்ரத் ஆதம் அலை ஹிஸ்ஸலாம் அவர்களும், கடைசி நபி ஹஸ்ரத் முஹம்மது ஸல்லள்ளாஹு அலைஹி வஸல்லம் அவர்களுமாவர். இவர்களுக்கிடையில் அநேக நபிமார்கள் தோன்றினர். அவர்களின் எண்ணிக்கை அல்லாஹ்வுக்கே தெரியும். அவர்களுள் பின்வருபவர்கள் அறியப் பட்டவர்கள்.

ஹஸ்ரத்களான ஆதம் , ஷீது ,இத்ரீஸ், நூஹ், ஹுத், ஸாலிஹ், இப்ராஹீம், இஸ்மாயீல், இஸ்ஹாக், யாகூப், யூசுப், ஐயூப், லூத் , ஸுஐப், மூஸா,ஹாரூன், தாவூத், சுலைமான், யூனுஸ், இல்யாஸ், அல்யசஃ, துல்கிப்ஸ், யஹ்யா, ஈஸா, முஹம்மது முஸ்தபா அலைஹிஸ்ஸலாத்து வஸ்ஸலாம். நபி ஷீஸ் அலைஹிஸ் சலாம் தவிர்ந்த இருபத்தைந்து நபிமார்களின் பெயர்கள் குர்ஆனில் கூறப்பட்டுள்ளன. ஹஸ்ரத் **உஸைர், லுக்மான், துல்கர்னைன்** ஆகிய பேர்களும் குர்ஆனில் கூறப்பட்டுள்ளன. சில அறிஞர்கள் இவர்களை நபிமார்கள் என்றும், சிலர் அவுலியாக்கள் என்றும் கூறுகின்றனர். சில அஹ்லுஸ் ஸுன்னா உலமாக்கள் இந்த மூன்று பேரும் துப்பாவும், ஹிள்ரு அலைஹிஸ் ஸலாமும் நபிமார்கள் என்று கூறுகிறார்கள்.

ஹஸ்ரத் முஹம்மது அலைஹிஸ் ஸலாம் அவர்கள் ஹபீபுல்லாஹ் (அல்லாஹ்வின் மிக்க அன்புக்கு உரியவர்) ஹஸ்ரத் இப்ராஹீம் அலைஹிஸ் சலாம் அவர்கள் கலீலுள்ளாஹ் (அல்லாஹ்வின் நேசர்), ஹஸ்ரத் மூஸா

அலைஹிஸ் சலாம் அவர்கள் கலீமுல்லாஹ் (அல்லாஹ்வுடன் வசனித்தவர்) ஹஸ்ரத் ஈஸா அலைஹிஸ் சலாம் அவர்கள் (ரூஹுல்லாஹ்) (தந்தையின்றி ரூகினாற் படைக்கப்பட்டவர்), ஹஸ்ரத் ஆதம் அலைஹிஸ் சலாம் அவர்கள் சபியள்ளாஹ் (பிழை பொறுக்கப்பட்டவர்) ஹஸ்ரத் நூஹ் அலைஹிஸ் சலாம் நஜியள்ளாஹ் (அபாயத்திலிருந்து காக்கப்பட்டவர்) எனப்படுவர். இவர்கள் ஆறுபேரும் ஏனயவர்களை விட உயந்த அந்தஸ்துடையவர்கள். இவர்கள் **உலுல்-அஸ்ம்கள்** என்று அழைக்கப்படுகின்றனர். இவர்களிலெல்லாம் மிக உன்னத மானவர்கள் ஹஸ்ரத் முஹம்மது ஸல்லள்ளாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஆவார்கள்.

அல்லாஹ் 100 சுஹுபுகளையும் 4 வேதங்களையும் பூமிக்கு அனுப்பினான். இது எல்லாவற்றையும் ஜிப்ரீல் அலைஹிஸ் சலாம் அவர்களே கொண்டுவந்தார்கள். ஆதம் அலைஹிஸ்ஸலாம் 10, ஷீது அலைஹிஸ்ஸலாம் 50, இத்ரீஸ் அலைஹிஸ்ஸலாம் 30, இப்றாஹீம் அலைஹிஸ்ஸலாம் 10 சுஹுபுகளும் அளிக்கப்பட்டன. [சஹீபா என்பது சிறிய வேதம்/நூல்]. நான்கு வேதங்களில் மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு **தௌறாத்** வேதமும், தவூத் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு **ஸபூர்** வேதமும், ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு **இன்ஜீல்** வேதமும், இறுதித் தூதர் எங்கள் தலைவர் ஹஸரத் முஹம்மது ஸல்லள்ளாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு **குர்ஆனுல் கரீம்** (புர்கான்வேதமும்) அருளப்பட்டன.

ஹஸரத் நூஹ் அலைஹிஸ்ஸலாம் காலத்தில் ஏற்பட்ட வெள்ளம் பூமியை மூழ்கடித்தது. பூமியிலிருந்து எல்லா மனிதர்களும், மிருகங்களும் மூழ்கி இறந்தன. ஆனால் ஹஸரத் நூஹ் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் கப்பலிலிருந்த சகல விசுவாசிகளும் காப்பாற்றப்பட்டனர். ஹஸரத் நூஹ் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் ஒவ்வொரு மிருகங்களிலும், பிராணிகளிலுமிருந்து ஒவ்வொரு சோடியைக் கப்பலில் எடுத்து வைத்திருந்தனர். அவைகளிலிருந்து மிருகங்கள் பெருகின.

ஹஸரத் நூஹ் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் கப்பலில் சாம், யாபாஸ், ஹாம் ஆகிய அவர்களின் மூன்று குழந்தைகளும் இருந்தனர். இப்பொழுதிருக்கும் மனிதர்கள் அனைவரும் அவர்களின் சந்ததியினரேயாகும். இக்காரனத்தினால் ஹஸரத் நூஹ் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் இரண்டாவது தந்தை என்று அழைக்கப்படுகின்றார்.

ஹஸரத் இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம்அவர்கள் ஹஸரத் இஸ்மாயீல், ஹஸரத் இஸ்ஹாக் அலைஹிஸ்ஸலாம் ஆகியவர்களின் தந்தையாவார்கள். ஹஸரத் யஃகூப் அலைஹிஸ்ஸலாம் அவர்கள், ஹஸரத் யூசுப் அலைஹிஸ்ஸலாம் அவர்களின் தந்தை. ஹஸரத் யஃகூப் அலைஹிஸ்ஸலாம் இஸ்ராயீல் என்று அழைக்கப்பட்டார்கள். இக்காரணத்தினால் அவருடைய பிள்ளைகள் சந்ததியினர் **பனிஇஸ்ராயீல்** என அழைக்கப்படுகின்றனர். பனி இஸ்ராயீல்களின் தொகை அதிகரித்தது. அவர்களுள் பலர் தீர்க்கதரிசிகளாயினர். உதாரணமாக மூஸா(அலை), ஹாரூன்(அலை), தாவூத், (அலை), சுலைமான்(அலை), ஸக்கரியா(அலை), யஹ்யா(அலை), ஈசா(அலை) ஆகிய வர்கள் இவர்களில் சிலர். சுலைமான்

அலைஹிஸ்ஸலாம் அவர்கள் தாவூத் அலைஹிஸ்ஸலாமின் குமாரர். யஹ்யா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் ஸக்கரியா (அலை)யின் குமாரர். ஹாரூன் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் மூஸா அலைஹிஸ்ஸலாமின் சகோதரர். அராபியர்கள் இஸ்மாயில் அலைஹிஸ்ஸலாமின் சந்ததியினர். எங்கள் தலைவர் ஹஸரத் முஹம்மது ஸல்லள்ளாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அராபியராவார்கள்.

ஹஸரத் ஹூத் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் ஆது சமூகத்தினருக்கும், ஹஸரத் ஸாலிஹ் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் தமூது சமூகத்தினருக்கும், ஹஸரத் மூஸா அலைஹிஸ்ஸலாம் பனூ இஸ்ராயீல் கூட்டத்தினருக்கும், ஹஸரத் ஹாரூன், தாவூத், சுலைமான், ஸக்கரியா அலைஹிஸ்ஸலாம் ஆகியவர்களும் பனூ இஸ்ராயீல் கூட்டத்தினருக்கும் நபிமார்களாக அனுப்பப்பட்டனர். எனினும் பின் கூறப்பட்டவர்கள் எவரும் புதிய ஷரீயத்தைக் கொண்டுவரவில்லை. இவர்கள் அனைவரும் பனூஇஸ்ராயீகளை மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களின் வழிக்கு அழைத்தனர். ஹஸரத் தாவூத் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு சபூர் வேதம் அருளப்பட்டது. அது கட்டுப்பாடுகளை விதிக்கவோ, இபாதத்துகளை கட்டளைகளையிடவோ இல்லை. அவை நிறைபோதனைகளும் அறிவுரைகளுமாகும். இக்காரணத்தினால் அது தௌராத்தை இரத்துச் செய்யவில்லை. அது தௌராத்தின் கருத்தை அழுத்தமாகக் கூறியது. இதன் காரணத்தினால் ஹஸரத் மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களுடைய மார்க்கம் ஹஸரத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களுடைய காலம்வரை நிலைத்திருந்தது. ஹஸரத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் வந்ததும் ஹஸரத் மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களுடைய ஷரீயத்தை இரத்துச்செய்தது. தௌராத்வேதம் செல்லுபடியாகாதவாறும் ஹஸரத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களுடைய மார்க்கத்தை ஏற்பது கடமையாகவும் ஆனது. இதிலிருந்து முஹம்மது ஸல்லள்ளாஹு அலைஹி வஸல்லம் அவர்களுடைய காலம்வரைக்கும் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அருளிய வேதம் கட்டாயம் பின்பற்றப்பட வேண்டியிருந்தது. ஆனால்' பனிஇஸ்ராயில்களின் அநேகர் ஹஸரத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களை நம்பாததுடன் தௌராத்தில் விடாப்பிடியாக இருந்தார்கள். இப்படி யூதர்களும், நஸாறாக்களும் பிரிந்தார்கள்.

ஹஸரத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களை நம்பியவர்கள் **நாஸாறாக்கள்** அவர்கள் இப்போது கிறிஸ்தவர்கள் என்று அழைக்கப்படுகின்றனர். ஹஸரத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களை நம்பாதவர்கள் காபிர்களாகி **யஹூதிகள்** (யூதர்கள்) என அழைக்கப்படுகின்றனர். யூதர்கள் இப்போது மூஸாவைப் பின்பற்றித் தௌராத்தையும், சபூர் தாவூதையும் ஓதுகின்றார்கள். நாஸாறாக்கள் ஈஸாவைப் பின்பற்றி இன்ஜீலை ஓதுகின்றார்கள் ஆயினும் எங்கள் தலைவர் ஹஸரத் முஹம்மது ஸல்லள்ளாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இருஉலகுக்கும் எல்லா நபிமார்களுக்கும், மனு ஜின்களுக்கும் தலைவராவார்கள். ஆலம் அடங்கலுக்கும் நபியாக அனுப்பப்பட்டவர்கள், அவர்களுடைய மார்க்கம் இஸ்லாம், அது முன்னிருந்த எல்லா வேதங்களையும் பின்பற்ற தகுதியற்றதாக்கிவிட்டது. இஸ்லாம், உலகம் அழியும்வரையும் நிலைத்து நிற்கும். ஹஸரத் முஹம்மது ஸல்லள்ளாஹு

அலைஹி வஸல்லம் அவர்களின் மார்க்கத்தைத்தவிர வேறு எந்த மதத்தையும் பின்பற்றுவது தடுக்கப் பட்டுள்ளது. ரஸூலுல்லாஹ் ஸல்லள்ளாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு பிறகு எந்த நபியும் வரமாட்டார்கள். நாங்கள் முஹம்மதுநபி ஸல்லள்ளாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் உம்மத்தாக ஆக்கியதற்காக அல்லாஹ்வுக்கு நன்றி(ஸுக்ர்) செய்கிறோம். நாங்கள் இஸ்லாம் மார்க்கத்தவர்கள்.

எங்கள் நபி முஹம்மது அலைஹிஸ்ஸலாம் அவர்கள் ரபியுல் அவ்வல் 12 திங்கட் கிழமை (ஏப்ரல் 20, 571 A.D.) மக்காவில் பிறந்தார்கள். அவர்கள் ஹிஜ்ரி 11ஆம் வருடம் 632 A.D) மதீனாவில் வபாத்தானார்கள். 40வது வயதில் ஜி**ப்ராஈல்** அலைஹிஸ்ஸலாம் மூலம் அவர்களுக்கு நபி பட்டம் வழங்கப்பட்டது. அவர்கள் மக்காவிலிருந்து மதீனாவுக்கு 622 **ஆ**வது **ஆ**ண்டில் ஹிஜ்ரத் சென்றார்கள். அவர்கள் மதீனாவில் உள்ள கூபா எனும் கிராமத்துக்கு செப்டம்பர் 20 திங்கட்கிழமை வருகை தந்தார்கள். ஹிஜ்ரி ஷம்ஷி (சூரிய)) வருடத்தின்[1] ஆரம்பத்தைக் குறிக்கிறது. அதே வருடத்தின் முஹர்ரம் 1 கமரி (சந்திர) கலண்டரை குறிக்கிறது.

நாங்கள் எல்லா நபிமார்களையும் நம்புகிறோம். அவர்கள் எல்லோரும் அல்லாஹ்வால் அனுப்பப்பட்ட நபிமார்கள். குர்ஆன் இறக்கபட்டதிலிருந்து மற்ற எல்லா மதங்களும் மீளப்பெறப்பட்டது. இதனால் மற்ற மதங்களைப் பின்பற்றுவது தடுக்கப்பட்டது. கிறிஸ்தவர்கள் கூட எல்லா நபிமார்களையும் நம்புகிறார்கள். ஆனால் அவர்கள் நபி ஸல்லள்ளாஹு அலைஹி வஸல்லம் அவர்களை சகல மனித ஜின் வர்க்கத்துக்கும் நபியானவர்கள் என்னும் உண்மையை நம்பாத காரணத்தினால் வழிதவறி காபிர் ஆகின்றார்கள். யூதர்கள் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களையும் நபி ஸல்லள்ளாஹு அலைஹி வஸல்லம் அவர்களையும் நம்பாததால் அவர்கள் இஸ்லாத்தைவிட்டும் வெகு தூரத்திற்கப்பால் உள்ளனர். யூதர்களும், கிறிஸ்தவர்களும் அவர்களிடமிருக்கும் களங்கமுள்ள வேதநூல்கள் அள்ளாஹ்விடமிருந்து வந்ததுபோலவே இப்போதும் இருக்கின்றது என்று நம்புகிறார்கள். இதனால் இவர்கள் **அஹ்லுல்-கிதாபுகள்** (வேதத்தை உடைய காபிர்கள்) என்று அழைக்கப்படுகின்றனர். அவர்கள் அல்லாஹ்வின் பெயரைச்சொல்லி அறுப்பார்களாயின் அதை உண்பதற்கும் அனுமதிக்கப்பட்டுள்ளது (ஆனால் மக்ரூஹ்). அவர்களின் பெண்களை மணப்பது அனுமதிக்கப்பட்டுள்ளது. [ஆனால் முஸ்லிம் பெண்கள் அவர்களின் ஆண்களை மணப்பதற்கு தடை விதிக்கப்பட்டுள்ளது. ஒரு முஸ்லிம் பெண் அவர்களை மணக்க விரும்பினால் அவள் அல்லாஹ்விடைய மார்க்கத்தை உதாசீனம் செய்கிறாள். மார்க்கத்தை உதாசீனம் செய்பவள் காபிர் அல்லது முர்த்தத் ஆகுவாள். ஆகவே அவ்விவாகம் இரண்டு காபிர்களுக்கிடைப்பட்டதாகும்].

இணை வைப்பவர்களும் எந்த நபியையும் மார்க்கத்தையும் நம்பாதவர்கள் எந்த வேதத்தையும் சாராத காபிர்கள் எனப்படுவார்கள். மு**ல்ஹித்** என அழைக்கப்படு பவர்களும் இந்த கூட்டத்தை சேர்ந்தவர்கள். அவர்கள் இஸ்லாத்தை விட்டும் வெகு தூரத்திலுள்ள காரணத்தினால் அவர்களின் பெண்களை மணப்பதும் அவர்கள் அறுத்த விலங்கின் இறைச்சியை உண்பதும் தடுக்கப்பட்டுள்ளது.

ஹஸ்ரத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு பிறகு அவர்களின் மார்க்க்கதை பரப்புவதற்காக பன்னிரண்டு சீடர்களை தெரிவு செய்தார்கள். அவர்கள் ஒவ்வொருவரும் ஹவாரீ (உபதேசி) என அழைக்கப்பட்டார்கள். அவர்கள்[ ஸம்ஊன் (சைமன்), பீட்டர்( பெட்ரோஸ்), ஜோஹன்னா(ஜோஹன்னஸ்), முதிய யாகுப், அன்றியாஸ்(அன்றூ, பீட்டரின் சகோதரன்), பிலிபஸ், தோமஸ், பாதலோமியு (பாதலோமஸ்), மடிய்யா(மத்தியு), இளைய யாகுப், பானபாஸ், யஹூதா(ஜூதாஸ்), தடீயஸ்(ஜகோபி) ஆகியோர். யஹூதாஸ் மத்த நிராகரித்தான் அதனால் மத்தியஸுக்கு அந்த இடம் கொடுக்கப்பட்டது. பெட்ரோஸ் என்பவர் சீடர்களின் தலைவர். ஹஸ்ரத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் 33 வது வயதில் விண்ணுலகுக்கு உயர்த்தப்பட்டபின் இப்பன்னிரெண்டு சீடர்களும் அவர்களின் மார்க்கத்தை பரப்பினார்கள்.

அல்லாஹ்வினால் அருளப்பட்ட இன்ஜீல் வேதத்தின் உண்மையான போதனை எண்பது வருடங்கள் மட்டுமே இருந்தது. அதற்கு பிறகு 'போல்' என்ற ஒரு யூதன் ஹஸ்ரத் ஈஸா(அலை) அவர்களை நம்பியவன் போல வேசம் தரித்துக்கொண்டு தான், ஒரு மார்க்க அறிஞன் என தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டதுடன் ஈஸா அல்லாஹ்வின் பிள்ளை என்று கூறினான். அவன் ஹஸ்ரத் ஈஸா(அலை) அவர்களை நம்பவில்லை. அத்துடன் பல பொய்களை கூறியதுடன் வைனும் பன்றி இறைச்சியும் ஹலால்(ஆகுமானது) என்று கூறினான். அவன் நஸாறாக்களின் கிப்லாவை கஃபாவிலிருந்து சூரியன் உதிக்கும் கிழக்கு திசைக்கு மாற்றினான். அல்லாஹ்வின் தாத்து ஒன்று என்றும் ஸிபத்துக்கள் மூன்று என்றும் கூறினான். இச்சிபத்துக்கள்

---

[1]பெர்சியன் சூரிய வருடம் ஆறு மாதங்கள் முந்தி மார்ச் 20ம் திகதி ஆரம்பிக்கின்றது. அது மகியான் பெருநாள் தினம்

உக்னும் என்றழைக்கப்பட்டன. இந்த யூத வேடதாரியின் பேச்சுக்கள் ஆரம்பகாலத்தில் நான்கு பைபிள்(கொஸ்பேல்) புத்தகங்களிலும் எழுதப்பட்டுள்ளன. விசேடமாக லூக்கின் பைபிளில் கூறப்பட்டுள்ளது. நஸாறாக்கள் 72 ஒன்றுக்கொன்று விரோதமான குழுவினராக பிரிந்தனர். அவர்களின் வேதநூல்களும் பிரிந்தன. காலகெதியில் அவர்களின் அநேககூட்டத்தினர் மறைந்து விட்டனர். இப்பொழுது மூன்று பிரிவினர்கள் மட்டும் மீதமுள்ளனர். அவர்களை மிக அதிகமானோர் பல கடவுள் கொள்கையுடையவர்கள்.

அப்துல்லாஹ் இப்னு அப்துல்லா அத்தர்ஜுமான் என்பவர் ஸ்பானியத் பலேறிக் தீவுகளில் ஒன்றான மஜோக்காவில் மதகுருவாக இருந்தார். அவர் இஸ்லாத்தைத் தழுவியதன் பின்னரே அவருக்கு இப்பெயர் வழங்கப்பட்டது. அவர் ஹிஜ்ரி 823 ல் இவர் "**துஹுபத்துல் அரிப் பிர்றத்தில் அலா அஹ்லி சாலிப்** என்னும் நூலை ஹிஜ்ரி 823 (1420A.D) இல் அரபியில் எழுதினார். இந்நூல் லண்டனில் (1872) இல் அரபியில் **அல்-முன்கிது அநித்தலால்** என்ற பெயரில் அச்சிடப்பட்டு தற்போது அது ஹகீகத் வெளியீட்டாளரினால் துருக்கி மொழியில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. அதில் பின்வருமாறு எழுதப்பட்டுள்ளது.

"பைபிளின் நான்கு ஆதாரங்களும் மத்தியூ, லூத், மார்க், ஜோன் என்னும் நால்வர்களால் எழுதப்பட்டன. முதன்முதல் இன்ஜீல் வேதத்தை மாற்றியவர்கள் இவர்கள். மத்தியூ ஒரு பாலஸ்தீனியர். இவர் ஹஸ்ரத் ஈஸா(அலை) உயர்த்தப்பட்ட வருடம் மட்டுமே ஈஸாவைச் சந்தித்தவர். இவர் எட்டு வருடங்களின் பின்னரே பைபிளை எழுதினார். அதில் இவர் பலஸ்தீனில் ஹஸ்ரத் ஈஸா(அலை) அவர்களின் பிறப்பு பற்றிய அதிசயிக்கத்தக்க நிகழ்ச்சிகளையும் குழந்தை ஈஸாவை யூத அரசன் கொல்ல எத்தனித்தபோது அவர் தாய் மரியா எப்படி எகிப்துக்குக் கொண்டு சென்றார் என்பது பற்றியும் விபரித்தார். ஹஸ்ரத் மரியம் (அலை) அவர்கள் ஹஸ்ரத் ஈஸா(அலை) வானுக்கு உயர்த்தப்பட்டு ஆறு வருடங்களின் பின்னரே இறையடி எய்தி ஜெரூசலத்தில் அடக்கம் செய்யப்பட்டார்.

அந்தகிய்யாவைச் சேர்ந்த லூக் என்பவர் ஹஸ்ரத் ஈஸா அலைஹிஸ்ஸலாத்தை ஒரு தடவையேனும் பார்க்கவில்லை. இவர் ஈஸா(அலை) அவர்கள் உயர்த்தப்பட்டு நீண்ட காலத்தின் பின், 'போல்' எனும் யூதனால் ஹஸ்ரத் ஈஸாவின் மார்க்கத்துக்கு மதமாற்றப்பட்டார். அதன்பின் போல் என்பவரின் நச்சுப்பொருந்திய யுக்திகளால் தூண்டப்பட்டு அல்லாஹ்வின் இன்ஜீல் வேதத்தை மாற்றி பைபிளை எழுதினார். இத்துடன் மார்க் என்பவரும் ஈஸா அலைஹிஸ்ஸலாம் வானுக்கு உயர்த்தப்பட்டு பின்னரே[1] ஈஸா அலைஹிஸ் ஸலாத்தை ஏற்றுக்கொண்டு ரோம் நகரில் பீற்றர் என்பவரிடம் தாம் கேழ்விப்பட்டதை இன்ஜீல் என்ற பெயரில் எழுதினார். ஜோன் என்பவன் ஈஸா வின் சிற்றன்னையின் மகன். அவன் ஈஸாவைப் பலமுறை சந்தித்தவன். இந்த நான்கு பைபில்களிலும் ஒன்றுக்கொன்று ஒவ்வாத கருத்துக்கள் அநேகமாகக் காணப்படுகின்றன.

ஹிஜ்ரி 1309(1892 A.D) இல் ஹர்புத் என்ற இடத்தில் மறைந்த இஸ்ஹாக் எபெந்தி என்பவரால் எழுதப்பட்ட **தியா அல்-குலூப், ஷம்ஸ் அல்-ஹக்கீகா** என்னும் இரு

---

[1] அப்ரோபோஸ், உயர்த்தப்படுதல், கிறிஸ்தவ நம்பிக்கைக்கு விரோதமானது ; ஹசரத் ஈசா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் 33வது வயதில் வானத்துக்கு உயர்த்தப்பட்டார்கள். இந்த சரித்திரம் இஸ்லாமிய ஆதாரங்களில் இருக்கின்றது. தயவு செய்து ஹகீகத் கிதபேவி யின் could not answer என்ற நூலை பார்க்கவும்.

நூல்களிலும், அரபியிலுள்ள ஹய்தாரி- சாதா இப்ராஹீம் பாஸிஹ்( ஹிஜ்ரி 1299 இல் மறைந்தவர்) எழுதிய **சிறாத்தல் முஸ்தகீம்**, மற்றும் பர்சியிலுள்ள நஜாப் அலி தப்ரீசி எழுதி இஸ்தான்புளில் அச்சிடப்பட **மீசான் அல்- மவாசீன்** மற்றும் அரபியில் 1959 பெய்ரூத்தில் இல் அச்சிடப்பட்ட இமாம் கஸ்ஸாலியின் **அர்-றத்-அல்-ஜமீல்** என்பன இப்பொழுது இருக்கும் பைபிள்கள் இடைச்செருகல் செய்யப்பட்டவை[1] என்பதை தெழிவாக நிரூபிக்கின்றன.

பனபாஸ் என்பவரால் எழுதப்பட்ட சுபிசேசத்தில் அவர் ஈஸாவிடமிருந்து பார்த்ததையும் கேட்டதையும் எவ்வித மாற்றமும் இல்லாமல் அப்படியே எழுதியுள்ளார். இது 1973இல் பாகிஸ்தானில் கண்டெடுக்கப்பட்டு ஆங்கிலத்தில் அச்சிடப்பட்டு வெளியிடப்படுள்ளது. **காமூஸ் அல் அஃலம்** எனும் நூலில் பனபாஸ் என்பவர் ஹஸ்ரத் ஈஸா அலைஹிஸ் ஸலாத்தின்

ஆரம்பச் சீடர்களிலொருவர். இவர் மார்க்கின் மாமாவின் மக்களிலொருவர். ஒரு சைபிரிட், இவர், போல் வந்தபின் ஈஸாவை நம்பியவர். போலுடன் அனட்போலியா , கிரீஸ் போன்ற இடங்களுக்கு பிரயாணம் செய்துள்ளார். தன் 63வது வயதில் சைப்பிரசில் மரணமானார். இவர் ஒரு பைபிளையும் இன்னும் பல புத்தகங்களையும் எழுதினார். அதனால் இவர் ஜூன் மாதம் 11 ஆந் திகதி கிறிஸ்தவர்களால் நினைவுகூரப்படுகிறார்.

கிறிஸ்தவ சமய அதிகாரிகள் மதகுருக்கள் என அழைக்கப்படுகிறார்கள். மதகுரு க்களில் உயர்ந்த தரத்தில் பழமைவாய்ந்தவர் (பற்றிஆச்) மேற்றரானியார் குடித்தலைவர் என்றும், இடைத் தரமானவர் போதகர்கள் என்றும் அழைக்கப்படுவர். பைபிளை வாசிப்பவர்கள் கிஸ்ஸீஸ் என அழைக்கப்படுவர். அவர்களுக்கு மேலானவர்கள் உஸ்குப்ஸ் எனப்படுவர் (முப்திகளைப் போலசெயலாற்றுபவர்கள்). அவர்களிற் உயர்ந்தவர்கள் பிசொப் என்றும் அவர்களிலும் மேலானவர்கள் ஆர்ச் பிசொப் என்றும் அழைக்கப்படுவர். இவர்கள் நீதிபதியைப் போன்றவர்கள். கோயில்களையும், சடங்குகளையும் நடத்துபவர்கள் ஜாஸ்லிக் என்றும் அவர்களுக்கு கீழுள்ளவர்கள் கியூரிஸ் அல்லது சம்மாஸ் என்றும் கோயிலில் விநியோகத்தில் இருப்பவர்கள் சமாமிசா என்றும் வணக்க வேலைகளுடன் தொடர்புள்ளவர்கள் மங்ஸ் என்றும் அழைக்கப்படுவர். கத்தோலிக்கர்களின் தலைவர் ரோமிலுள்ள போப் (பாதர் களுக்கு பாதர்) ஆவர். அவரின் ஆலோசகர்கள் கார்டினல் என அழைக்கப்படுகிறார்கள்.

கிறிஸ்தவ சமயத்தைச் சேர்ந்தவர்கள் எல்லோரும் அல்லாஹ் ஒருவன் என்பதை மறந்தனர். அவர்கள் முக்கடவுள்(trinity) கொள்கையை தோற்றுவித்தனர். அவர்கள் ஜீசஸ் கடவுளின் குமாரர் என்றனர். அதன்மூலம் அவர்கள் அனைவரும் இணைவைப்பவர்கள் ஆகினர். சிறிது காலத்தின் பின் ரோமச் சக்கவர்த்தி இரண்டாவது குலோடியஸ் காலத்தில்(215-271 A.D) யூனுஸ் சம்மாஸ் என்னும் அன்டிஓக் நகர பாதிரி அல்லாஹ் ஒருவன் என்பதை வன்மையாகக் கூறினார். இவர் அனேகமானவர்களை நேர்வழியில் ஆக்கினார். அவர்கள் இன்ஜீல் வேதத்தில் சேர்ந்தவர்கள் ஆகினர். ஆனால் பின்னர் பாதிரிகள் அதை விட்டு திரும்பவும் மூன்று கடவுள்களை வணங்கத்தொடங்கினர். கொன்ஸ்டைண்டிங் த கிரேட் என்பவன்( 274- 337) ஈஸா அலைஹிஸ்ஸலாமின் மார்க்கத்தில் விக்ரக ஆராதனையை அறிமுகப்படுத்தினான். இவன் நிசியா(இஸ்னிக்) என்ற இடத்தில் பரிசுத்த சபையைச் சேர்ந்த பாதிரிமார் 318 பேரை நிசியா என்ற இடத்திற்கு அழைத்து ஒரு புதிய கிறிஸ்தவ மதத்தை உருவாக்கினான். இந்த சபையை

---

[1] கடைசி மூன்று புத்தகங்களின் போட்டோ பிரதிகள்1986இல் ஹக்கீகத் பதிப்பகத்தால் எடுக்கப்பட்டு வைக்கப்பட்டுள்ளது.

சேர்ந்த ஏரியஸ் என்ற பெயருடையவர் அல்லாஹ் ஒருவன் என்றும் ஹசரத் ஈஸா அலைஹிஸ்ஸலாம் அவனது படைப்பு என்றும் கூறினார். இதனால் அலக்சாண்டிரியாவின் மேற்றிராணியாரும் கவுன்சிலின் தலைமைக் குருவுமான அலக்ஸாந்திரியஸ் அவரை இச்சபையிலிருந்தும் தேவாலயத்திலிருந்தும் வெளியேற்றினார். கொண்ஸ்டன்டின் த கிரேட்,

அரியஸ் ஒரு நம்பிக்கையற்றவன் என்று அறிவித்து அதன் பின் மலாக்கையா(மேல்சிட்) என்னும் பிரிவை உண்டாக்கினான். இந்த உண்மை **அல்மிலால் வல் நிஹால்** என்ற நூலிலும், ஜிர்ஜிஸ் இப்னு அல் அமீட் எனும் பைசாந்தின் கிரேக்க சரித்திர ஆசிரியர் (601-671)[1205-1273,டமஸ்கஸ்], என்பவரின் சரித்திர நூலிலும் எழுதப்பட்டுள்ளது. இவர் பைசாந்தின் கிரேக்க சரித்திர ஆசிரியர்.

381இல், இரண்டாவது கூட்டம் கொண்ஸ்டாண்டினோபில்(இஸ்தன்புளில்) கூடி மக்டோநியஸ் என்பவர் ஈஸா அலைஹிஸ்ஸலாம் என்பவர் பரிசுத்த ஆவியல்ல ஒரு படைப்பு என்று கூறியதற்காக குற்றஞ்சாட்டப்பட்டார். 395 இல் உரோமராச்சியம் இரண்டாகப் பிளவுபட்டது.

கொண்ஸ்டாண்டினோபிளின் மூன்றாவது கூட்டம் 421இல் நெஸ்டோரியஸ் என்பவரின் நூலை ஆரய்வதர்காகக் கூடிடது, அவர் ஹசரத் ஈஸா ஒரு மனிதர் என்றும் அவர் வணகுவதற்குத் தகுதியற்றவர் என்றும் கூறினார். இரண்டு பண்புகள்(உகுனும்) மட்டுமே உள்ளது. அல்லாஹ் ஒருவன். அவனின் பண்புகள்: இருப்பு உயிர், அறிவு அதில் உயிர் என்பது ரூஹுல் குத்ஸ் ஆகும், அறிவு எனும் பண்பு அறிவு என்னும் பண்பு ஈஸாவுக்கு செலுத்தப்பட்டது, அவர் கடவுள் ஆனார். மரியம் கடவுளின் தாயல்ல. அவர் ஒரு மனிதரின் தாய். ஈஸா என்பவர் அல்லாஹ்வின் மகன் என்றும் கூறினார். நெஸ்டோரியஸ் கூற்றுக்கள் ஏற்றுக்கொள்ளப்பட்டன. இக்கொள்கை கிழக்கு நாடுகளில் பரவியது. அந்தக்கொள்கையுடையவர்கள் நெஸ்ட்ரோரியஸ் என அழைக்கப்பட்டனர்.

431 இல் நாலாவது சபை இபஸசில் கூடியது, அங்கு டயஸ்கோஸ் என்பவரின் கொள்கை ஏற்றுக்கொள்ளப்பட்டது. நெஸ்ட்ரோரியஸ்[439,இல் எகிப்து] தெய்வ நிந்தனைக்காக குற்றஞ்சாட்டப் பட்டார். 20 வருடங்களின் பின்னர் ஐந்தாவது கவுன்சில் 734 பாதிரிகள் கடிகோய்வில் கூடி டயஸ்கொஸின் மற்றும் அலக்ஸ்சாந்திரியாவின் அதி மேற்றரானியாரின் கூற்றுகள் மறுக்கப்பட்டது. டயஸ்கொஸின் கூற்று ஈஸா கடவுள் என்பதை ஆதாரமாகக் கொண்டது. இது யாக்கூபிய்யா பிரிவு என அழைக்கப்பட்டது. டயஸ்கொஸின் உண்மைப் பெயர் யாக்கூப் என்பதாகும். பைசான்டின் சக்கரவர்த்தி மேர்சியானஸ் காலத்தில் டயஸ்கொஸின் கூற்றிற்கு எதிரான மறுப்பை எல்லா இடங்களுக்கும் பிரகடனப்படுத்தினர். டயஸ்கொஸ் தப்பியோடி தனது கொள்கையை ஜெரூசலத்திலும், எகிப்திலும் போதித்தான். அவனைப் பின்பற்றியவர்கள் ஹசரத் ஈஸாவை இன்றும் வணங்குகின்றார்கள். இப்போதிருக்கும் சுரியானிஸ் (சிரியக் மொழி பேசும் கிறிஸ்தவர்கள்) மற்றும் மரோனைட்கள்( இராக், சிறிய, லெபனானில் இருப்பவர்கள்) யாகுபிய்யா பிரிவை சேர்ந்தவர்கள்.

கடிகோய் கூட்டத்தில் ஏற்றுக்கொள்ளப்பட்ட மலாகிய்யா (மெல்சிட்) என அழைக்கப்பட்ட இக்கொள்கை மெர்சீயானசால் எனும் அரசனால் அங்கீகரிக்கப்பட்டது. இது முதன்முதல் நிசியா கூட்டத்தில் ஏற்றுக்கொள்ளப்பட்ட கொள்கையை ஒத்தது. அவர்களின் தலைவர் அந்தக்கிய்யாவில் அதி மேற்றரானியார். அவர்கள் கூருகிறார்கள் அறிவு, உயிர் என்னும் பண்புகள் சேர்ந்தது கலிமா. "ரூஹுல்-குத்ஸ்"(தூயஆத்மா) ஆகிய மூன்றும் மனிதனுடன் சேரும்போது **உக்னூம்** என்று

அழைக்கப்படும். அவர்களுக்கு மூன்று கடவுள்கள் உள்ளன: தகப்பன், இருப்பின் (existence) **உகுனும்** என்னும் பண்பு, , யேசு: பிள்ளையும் மேரி: தாயும் சேர்த்து. அவர்கள் ஈஸா அலைஹிஸ் ஸலாமை **இயேசு கிறிஸ்து** என அழைக்கிறார்கள்.

‘**இல்ஹாருள் ஹக்**’என்ற அரபு நூலில் (இது துருக்கிய மொழியில் ‘**தியா உல் குலுப்**’[1] கிறிஸ்தவர்களில் உள்ள 72 பிரிவினர்களை பற்றி விரிவாக கூறப்பட்டுள்ளது.

இதில் எல்லாப் பிரிவினரும் 446[1054A.D.] வரை ரோமிலுள்ள போப்’புக்கு விசுவாசமாக இருந்தனர். எல்லாரும் **கத்தோலிக்கர்** என அழைக்கப்பட்டனர் 1054 இல் மைக்கல் கிரோலேரயுஸ் என்ற கொன்ஸ்டண்டினோபல் மதத்தலைவர் போப் பிடமிருந்து பிரிந்து இஸ்தான்புளில் கிழக்கத்திய ஆலயங்களை தன்னுடைய நிருவாகத்தின் கீழ் கொண்டு வந்தார். இந்த ஆலயங்கள் **ஒதொடக்ஸ்** என்றழைக்கப்பட்டன. அவர்கள் யாக்கூப்பிய பிரிவைப் பின்பற்றினர். 923[1517] இல் ஜேர்மன் பாதரி லூதர், போப்பை எதிர்த்ததுடன் அநேக ஆலயங்களை (ஆலயஸ்தர்கள்) அவரைப் பின்பற்றினர் இவர்கள் **புரட்டஸ்தான்கள்** என அழைக்கப்பட்டனர்.

கிறிஸ்தவர்களின் தொகை யூதர்களின் தொகையைவிட கூடியது, மறுமையில் அவர்களுக்கு அமோக தண்டனை கிடைக்கும் ஏனனில் அவர்கள் ஹசரத் முஹம்மது அலைஹிஸ் ஸலாமை அவர்கள் நம்பாததுடன் உலுஹிய்யாவின் எல்லையை கடந்து விட்டார்கள். முக்கடவுளை(ட்ரினிட்டி) பல கடவுள்களை வணங்குவதன் மூலம் அதிகம் வழி தவறியவர்கள் ஆனார்கள். ஈஸா அலைஹிஸ் ஸலாம் , மரியம் அலைஹிஸ் ஸலாம் என்பவர்களைக் கடவுளாக வணங்குகிறார்கள். அவர்கள் செத்த, கொல்லப்பட்ட மிருகங்களின் இறைச்சியை[2] உண்கின்றார்கள். யூதர்கள் இரண்டு நபிமார்களையும் நம்புவதில்லை, ஆனால் அல்லாஹு தஆலா ஒருவன் என்பது தெரியும். பன்றி இறைச்சியை உண்பதில்லை. இருந்தும் அவர்கள் இஸ்லாத்துக்கு மிகவும் எதிரானவர்கள். யூதர்களிர் சிலர் கிரிஸ்தவர்களைப் போன்று ‘உஸைர்’ அல்லாஹ்வின் குமாரர் என்று சொல்லுவதால் இனைவைக்கின்றார்கள். இவ்விரு சாராரும் அஹ்லுல்கிதாபு என்று அழைக்கப்படுகின்றனர். ஓதோடொக்ஸ், கத்தோலிக்கர்களும் புரட்டஸ்தாந்தினரும் வெவ்வேறு பைபில்களை வாசிக்கிறார்கள் தாங்கள் ஈஸா அலைஹிஸ்ஸலாமை பின்பற்றுவதாகக் கூறி உரிமை கொண்டாடுகிறார்கள். அவர்களின் பைபிள்கள் ஒவ்வொன்றிலும் முரணான தத்துவங்களும் நம்பிக்கைகளும் காணப்படுகின்றன அவர்கள் எல்லோரும் நசாராக்கள் எனப்படுகின்றனர்.

---

[1] ‘**இல்ஹாருள் ஹக்**’ ரஹ்மத்துல்லாஹ் எபந்தி (இந்தியா) ‘ரஹ்மத்துல்லாஹ் அலைஹி’ என்பவரால் எழுதப்பட்டு 1280(1864 A.D.) இல் அரபியில் துருக்கி இஸ்தன்புளில் அச்சிடப்பட்டது. அவர் மக்காவில் 1306 A.H. இல் காலமானார்கள். இது அவர் 1270 இல் இந்தியாவிலும் பின்னர் இஸ்தன்புளில் கிறிஸ்தவ மதப்பெரியார்களுடன் செய்த கலந்துரையாடல்களையும், அத்துடன் அவர் எப்படி அவர்களை அடக்கினார் என்பதையும் விரிவாக விளக்குகிறது.

இந்த கலந்துரையாடலின் பிற்குறிப்புகள் **சைப்-அல்-அப்ரார். இஸ்ஹார்-அல்-ஹக்** எனும் இஸ்தன்புளில் பார்சிய பதிப்பிக்கப்பட்ட நூலில் சேர்க்கப்பட்டுள்ளன.

இது இரண்டு பாகங்களை கொண்டது. முதல்பாகம் துருக்கிய மொழியில் நூசத் எபந்தி என்பவரால் மொழிபெயர்க்கப்பட்டு **ஈதாஹ் அல் ஹக்** என்ற பெயரில் வெளியிடப்பட்டது. 2 வது பாகம் துருக்கிய மொழியில்செய்யித் ஓமர் பாஹ்மி என்பவரால் மொழிபெயர்க்கப்பட்டு இப்ராஸ் **அல் ஹக்** என்ற பெயில் பொஸ்னியாவில் 1293[1876A.D.] இல் அச்சடிக்கப்பட்டது. இஸ்ஹாக் எபெந்தியின் **தியா அல் குலுப்** ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டு **could not answer** என்ற பெயரில் 1990 இல் இஸ்தன்புளில் வெளியிடப்பட்டது.

[2] இஸ்லாம் உண்ணக்கூடிய விலங்குகளை எப்படி கொள்ளவேண்டும் என்று அறிவுறுத்துகிறது. அவை அறிவுருத்தள்படி கொல்லாவிட்டால் அதை உண்ண முடியாது.

யூதர்கள் மூசாவின் வேதத்தை [1] யுடையவர்கள் என எண்ணிக்கொள்கின்றனர்.

நமது நபி ஸல்லள்ளாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஹிஜ்ரி 11ஆம் வருடம் மறு உலகை அடைந்த சமயம் அபூபக்கர் சித்தீக் ரலியள்ளாஹு தஆலா அன்ஹு அவர்கள் கலீபாவானார்கள். அவர்கள் ஹிஜ்ரி 13 ஆம் வருடம் அவர்களின் 63ஆம் வயதில் மறைந்தார்கள். அவர்களுக்குப் பின்னர் உமறுல் பாருக் ரலியள்ளாஹு தஆலா அன்ஹு அவர்கள் கலீபாவானார்கள். இவர்கள் ஹிஜ்ரி 23 இல் அவர்களின் 63 வது வயதில் ஷஹீதாக்கப்பட்டார்கள். அவர்களின் மறைவிற்கு பின் உஸ்மான் துன்னுரைன் ரலியள்ளாஹு தஆலா அன்ஹு அவர்கள் கலீபாவானார்கள். இவர்கள் ஹிஜ்ரி 35 இல் அவர்களின் 82 வது வயதில் ஷஹீதாக்கப்பட்டார்கள். அவர்களின் மறைவிற்கு பின்னர் அலி ரலியள்ளாஹு தஆலா அன்ஹு அவர்கள் ஹிஜ்ரி 40 இல் அவர்களின் 63 வது வயதில் ஷஹீதாக்கப்பட்டார்கள். இந்நால்வரும் **குலபாவுர்ராஷிதீன்கள்** என அழைக்கப்படுவர். இந்த நான்கு கலீபாக்கள் ஆட்சியிலும் நீதி, நேர்மை, சுதந்திரம் ஆகியவை எல்லா இடங்களிலும் பரந்து காணப்பட்டன. ஷரீயத்தையுடைய சட்டதிட்டங்கள் முழுவதும் எவ்விதக்குறையுமின்றி நிறைவேற்றப்பட்டது. இந்த நான்கு கலீபாக்களும் ஏனைய எல்லா சஹாபாக்களை விட மிகவும் மேன்மைதங்கியவர்கள் அவர்களுடைய அந்தஸ்த்துக்கள் அவர்களின் அவர்களின் கிலாபாத்தின் ஒழுங்குப்படியும் அமைந்திருந்தது.

அபூபக்கர் ரலியள்ளாஹுதஆலா அன்ஹு அவர்களின் ஆட்சியில் முஸ்லிம்கள் அராபிய தீபகற்பத்திலிருந்து வெளியேறி சென்றார்கள். நாயகம் ஸல்லள்ளாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் மறைவிற்கு பின்னர் அராபிய தீபகற்பத்தில் புரட்சி செய்பவர்கள் தோன்றினார்கள். அபுபக்கர் ரலியள்ளாஹுதஆலா அன்ஹு புரட்சி செய்பவர்களை தீபகற்பத்திலிருந்து அடக்கினார்கள். முனாபிக்குகளை திருத்துவதற்கு கஷ்டப்பட்டார்கள். அவர்கள் கிலாபத்தில் முஸ்லிம்களுக்கிடையில் ஒற்றுமை திரும்பவும் நிலைபெறச் செய்தார்கள். ஹசரத் உமர் ரலியள்ளாஹு தஆலா அன்ஹு அவர்கள் கலீபாவாக பதவியேற்றதும் பின்வரும் உரையை நிகழ்த்தினார்கள்.

“ஓ அல்லாஹ்வின் தூதரின் சஹாபாக்களே ‘ரலியள்ளாஹு தஆலா அன்ஹும் அஜ்மஈன்’ அரேபியாவில் உண்டாகும் பார்லி உங்கள் குதிரைகளுக்கு மட்டும் போதுமானாதாகும். இருந்தும் அல்லாஹ் தனது உற்ற நண்பருக்கு (முஹம்மது ஸல்லள்ளாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு) அவர்களின் உம்மத்துக்களுக்காக உலகெங்கும் நிலத்தையும்,

வீடுகளையும் கொடுப்பதாக உறுதியளித்துள்ளான். அவர்களுடைய நாடுகள் வெற்றியடைவதற்கு உழைக்கும் வீரர்கள் எங்கே? மறுமைக்காகப் போரிட்டு உயிர் துறப்பதற்கும் கைப்பற்றிய பொருட்களைப் பெற்றுக்கொள்வதற்குமான வீரர்கள் எங்கே? இஸ்லாத்துக்காக வீட்டைவிட்டுப் புறப்பட்டு எதிரிகளுடன் யுத்தம் புரிந்து அவர்களை அடக்குவதற்காக தனது தலையையும் உயிரையும் தியாகம் செய்யும் வீரர்கள் எங்கே?" ஹசரத் உமர் ரலியள்ளாஹு தஆலா அன்ஹுஅவர்களின் இந்தப் பேச்சின் மூலம் சஹாபாக்களை ஜிஹாது செய்ய ஊக்குவித்தார்கள். அவர்களின் இந்த சொற்பொழிவினால் இஸ்லாம் மூன்று கண்டங்களிலும் தீவிரமாகப் பரவியதுடன் மில்லியன் கணக்கான மக்கள் நிரகரிப்பிலிருந்து விடுபடவும் அவர்களின் உள்ளங்களை சுத்தப்படுத்திக் கொள்ளவும்

---

[1] இரண்டு பாகங்களை கொண்ட மார்க்கத்திற்கு சம்பந்தமான என்சைக்ளோபிடியா. தற்கால நிலவரத்தின் 1995 இல் உலக சனத்தொகை 4.,550 பில்லியன். முஸ்லிம்கள் 1.06 பில்லியன் 1.87 பில்லியன் கிறிஸ்தர்களும் (அதில்1.042பில்லியன் கத்தோலிக்கர் 0.50பில்லியன் புட்டஸ்தாந்த 0.174 பில்லியன் ஓதோடொக்ஸ்) 0.140 பில்லியன் யுதர்களும் 1.660 பில்லியன் நாஸ்திகர்களும் நிராகரிப்பவர்களும் எந்த மதத்தையும் நம்பாதவர்கள்..

உதவியது. இந்தச் சொற்பொழிவின் பின்னர் சஹாபாக்கள் உயிருள்ளவரை இஸ்லாத்துக்காக போர்செய்ய சத்தியப்பிரமானம் செய்து கொண்டனர். கலீபாவின் கட்டளையை ஏற்று சஹாபாக்கள் படைதிரண்டனர் முஸ்லிம்கள் தங்கள் வீடுகளை விட்டும் அரேபியாவை விட்டும் புறப்பட்டனர். எல்லா இடங்களிலும் பரவினர். சென்ற இடங்களிலெல்லாம் உயிர்பிரியும்வரை யுத்தம் செய்தனர்.அவர்கள் திரும்பி வரவேயில்லை. அதனால் அநேக நாடுகள் சிறிது காலத்திலேயே வெற்றி கொள்ளப்பட்டன. பைசாந்தியன், பெர்சியன் ஆகிய இரு சக்கராதிபத்தியமும் இதில் அடங்கின. அவர்களின் எல்லா நிலங்களும் முஸ்லிம்களின் ஆட்சியின் கீழ் வந்தது. அந்நாடுகளில் வாழ்ந்த குடிமக்கள் முஸ்லிம்களாகும் பாக்கியத்தை பெற்றனர். இவ்வுலகிலும் சாந்தியையும் மறுவுலகிள் பேரின்பத்தையும் பெற்றுக்கொண்டனர்.

ஹசரத் உஸ்மான் ரலியள்ளாஹு தஆலா அன்ஹு அவர்களின் ஆட்சிக்காலத்திலும் முஸ்லிம்கள் யுத்தத்தில் தீவிரமாய் இருந்தார்கள். இருந்தும் ஹசரத் உஸ்மான் ரலியள்ளாஹு தஆலா அன்ஹு அவர்களுக்கெதிராக சிலர் தோன்றி அவர்களைக் கொன்றனர். ஹசரத் அலி ரலியள்ளாஹு தஆலா அன்ஹு அவர்கள் காலத்தில் காரிஜிகள் தோன்றி கலகங்களை ஏற்படுத்தினார்கள். முஸ்லிம்களுக்கிடையில் வேறுபாடுகள் உண்டாகத் தொடங்கியது. வெற்றியான உடன்படிக்கைகளும், ஒற்றுமையில்லாமையால் உமர் ரலியள்ளாஹு தஆலா அன்ஹு அவர்களைப்போன்று அதிக நாடுகளைப் பிடிக்கவில்லை.

குலபாஉர்ராஷிதீன்களின் ஆட்சிக்காலம் 30 வருடங்களாகும். இந்த முப்பது வருட காலமும் நாயகம் ஸல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்களின் காலத்தைப்போன்று இனிதே கழிந்தது. இந்த நான்கு கலீபாக்களுக்குப் பின்னர் அநேக பித்அத்துக்கள் (புதுமைகள்),பிளவுகள் தோன்றி அநேகர் வழிதவறினர். அந்த சஹாபாக்களை மட்டும் பின்பற்றியவர்கள் காப்பாற்றப்பட்டனர். அவர்கள் அஹ்லுஸ்ஸுன்னத் வல்ஜமாஅத் என்று அழைக்கப்படுகின்றனர். இந்தவழியே சரியான வழியாகும்.

நபியவர்களினதும் அவர்களைப் பின்பற்றியவர்களினதுமான இந்தவழி அஹ்லுஸ் ஸுன்னத் அறிஞர்களால் வலியுறுத்தப்படுகின்றது. காலப்போக்கில் பிழையான வழிகள் மறக்கப்பட்டு பல முஸ்லிம் நாடுகளும் இந்தத் தூய வழியையே பின்பற்றுகின்றனர்.

சீயாக்களின் வழி அஹ்லுஸ் ஸுன்னத்துடன் முரண்பட்டது. சீயாக்கள் மாறுபட்ட வழி தவறிய ராபிதிகளின் கொள்கைகளை நம்புகிறார்கள். ஹசரத் அலி ரலியள்ளாஹு தஆலா அன்ஹு அவர்களுக்குரிய ஆட்சி உரிமையை அபுபக்கர் மற்றும் உமர் ரலியள்ளாஹு தஆலாஅன்ஹும் என்பவர்கள் சொந்த பலத்தைக் கொண்டு பெற்றுக்கொண்டனர் என்று கூறுகின்றனர். அவர்கள் அநேக சஹாபா கிராம்கள் மீது அபாண்டங்களையும் படுதூறுகளையும் கூறுகின்றனர். [இன்றைய உம்மத்துல் முகம்மதியா என்று அழைக்கப்படும் முஸ்லிம்கள் அஹ்லுஸ்சுன்னா சீயா, மற்றும் வஹ்ஹாபிகளையும் உள்ளடக்கியது.][1]. அஹ்லுஸ்ஸுன்னா நடைமுறைகளிலும் வணக்க வழிபாடுகளிலும் நான்கு மத்ஹபுக்களைக் கொண்டது. முதலாவது **ஹனபி** மத்ஹபு இது இமாமுல் அஃலம் அபூஹனிபா நுஃமான் இப்னு தாபித் ரஹ்மாதுல்லாஹி அலைஹி அவர்களால் ஹிஜ்ரி (80 – 150) இல் ஸ்தாபிக்கப்பட்டது.

---

[1] சிந்தீக்குகள்: இவர்கள் அஹமதிய்யா(காதியானிகள்)களும்,பஹாயிகலும் இந்த இரண்டு வழிகெட்ட கூட்டங்கள் இந்தியாவில் ஆங்கிலேய துரோகிகளால் உருவாக்கப்பட்டவர்கள். அடுத்தது லா-மத்ஹபிகளும் வழிகெட்ட தப்லிக் ஜமாஅத்தினரும். இவர்களுக்கும் இஸ்லாத்துக்கும் தொடர்பு இல்லை. இம்மூன்று கூட்டத்தினரும் அஹுளுஸ் ஸுன்னாவிலிருந்து பிரிந்தவர்கள். (Endless Bliss 2ஆம் பாகம் 36

"ஹனிப்" என்பது முற்றாகச் சரியானதை நம்புபவர். என்று பொருள்படும். இவர் இஸ்லாத்தை பற்றியிருப்பவர். "அபூஹனிபா" என்பது விசுவாசம் கொண்ட முஸ்லிம்களின் தந்தை என்றும் பொருபடும். இமாமுல் அஃலத்திற்கு ஹனிபா என்ற மகன் இருந்ததில்லை. இரண்டாவது **மாலிக்கி** மதுஹபு இமாம் மாலிக் இப்னு அனஸ் ரஹ்மதுல்லாஹி அலைஹி (ஹிஜ்ரி 90–179) என்பவரால் தோற்றுவிக்கப்பட்டது ஆகும். முன்றாவது **ஷாபியி** மதுஹபு இமாம் முஹம்மதிப்னு இத்ரீசுல் ஷாபிஈ ரஹ்மதுல்லாஹி அலைஹி (ஹிஜ்ரி 150-204) என்பவரால் ஸ்தாபிக்க ப்பட்டது ஆகும். இவர்களின் பாட்டனின் பாட்டனாரான ஷாபிஈ ஒரு சஹாபி யாவார். இதனாலேயே இது சாபிஈ என அழைக்கப் படுகிறது. நான்காவது இமாம் அஹமதிப்னு ஹம்பல் ரஹ்மதுல்லாஹி அலைஹி (ஹிஜ்ரி 164 – 241) இல் ஸ்தாபிக்கப்பட்ட **ஹம்பலி மதுஹபு** ஆகும். [இப்னு ஆபிதீன் இன் **ரத்துல்முஹ்தார்**]இன்படி இந்த நான்கு இமாம்களும் ஹிஜ்ரி 80, 90,150, 164 இல் பிறந்து ஹிஜ்ரி 150,179,204 ,241 இல் மறைந்தார்கள்.

கொள்கைகளின் ஒழுங்கில் இந்த நான்கு மதுஹபுகளுக்கிடையில் வித்தியாசம் இல்லை இவைகள் எல்லாம் அஹ்லுஸ் ஸுன்னத்தைச் சேர்த்தது அத்துடன் இவற்றின் நம்பிக்கைகளும் ஒரே அடிப்படையில் அமைந்தது. இந்நான்கு இமாம்களும் சிறந்த முஜ்தஹிதுகள் என எல்லோராலும் ஏற்றுக்கொள்ளபட்டவர்கள். அவர்களுக்கிடையில்

நடைமுறை செயலளவில் (அஹ்காமுல் இஸ்லாமியாவில்) சிறிய வித்தியாசங்கள் காணப்படுகின்றன.

அல்லாஹ்வும் அவனது தூதர்களும் முஸ்லிம்களின்மேல் இரக்கம் கொண்டதால் குர்ஆனிலும் ஹதீஸிலும் சில செயல்கள் வழிபாடுகளை எப்படிச் செய்ய வேண்டும் என்பதைத் திட்டமாக தெளிவுபடுத்தவில்லை[1]. இந்த செயல்களை இவ்வாறுதான் செய்யவேண்டும் என்று வலியுறுத்தப்பட்ட செயல்களுடன் ஒப்பிடுவதன் மூலம் செய்யப்படவேண்டும். இஸ்லாமிய அறிஞர்களில் இவ்வாறான செயல்களை ஒப்பிட்டு விளங்கிக்கொள்ளும் திறமையுள்ளவர்கள் **முஜீதஹ்துகள்** என அழைக்கப்பட்டனர். முஜீதஹ்துகள் என்பவர்கள் உய்த்தறிதல் மற்றும் தெரிவுசெய்தல் (**இஜ்திஹாத்**) என்பவற்றின்படி அவர்களின் முழு திறமைகளையும் பாவித்து அவர்களுக்காகவும் அவர்களை பின்பற்றுபவர்களுக்காகவும் ஒரு செயல் எப்படி செய்யப்படவேண்டும் என்பற்கு மிகச்சரியான முறையை கண்டறிவது அவர்களின் கடமையாகும் என திருக்குர்ஆனிலும் ஹதீது ஷரீபிலும் வலியுறுத்தப்பட்டுள்ளது. அது அவர்களுக்கு வாஜிப் ஆக இருக்கும். ஒரு முஜ்தஹிது ஒரு செயல் சம்பந்தமாக இஜ்திஹாது செய்யும்போது ஒரு தவறை விட்டுவிடுவாரானால் அது பாவமாகாது அவர் குற்றவாளியாகார். ஆனால் இஜ்திஹாது செய்வதில் அவரின் முயற்சிக்காக மறுமையில் சன்மானமளிக்கப்படுவார். ஏனெனில் அவர் அவரால் முடிந்தளவு முயற்சி செய்யுமாறு கட்டளை இடப்பட்டுள்ளார். அவர் அதில் தவறு விடுவாராயின் அவரின் முயற்சிக்கு ஒரு நன்மை கொடுக்கப்படும். அவர் அதில் சரியான முடிவை கண்டுபிடித்தால் அவருக்கு பத்து மடங்கு நன்மையும் கொடுக்கப்படும்.

சஹாபத்-அல்கிராம் ரலியல்லாஹுதஆலா அன்ஹும் அஜ்மஈன் அனைவரும் மிக சிறந்த அறிஞர்களாகும், அதாவது முஜ்தகிதுகள். அவர்களுக்கு அடுத்து வந்தவர்களில் பெரும் பாலானோர் இஜ்திஹாது செய்யும் திறமை பெற்ற அறிஞர்களாகும். அவர்கள்

---

[1] அவ்வாறு தெளிவாக குறிப்பிடப்பட்டிருந்தால் அவை பர்லாகவும் அல்லது சுன்னதகவும் ஆக்கப்பட்டிருக்கும் அதன் படி செய்யாதவர்கள் பாவிகளாகவும் உதாசீனம் செய்பவர்கள் இஸ்லாத்தை விட்டவர்களாகும் நிலை ஏற்பட்டிருக்கும். முஸ்லிம்களுக்கு அவர்களின் கடமைகள் மிகக் கஷ்டமாக இருந்திருக்கும்

அனைவரும் அநேகமான மக்களால் பின்பற்றப்பட்டனர். நாளடைவில் அவைகளில் அநேகமானவை மறக்கடிக்கப்பட்டு அஹ்லுஸ்ஸுன்னாவின் நான்கு மத்ஹப்கள் மட்டும் எஞ்சியுள்ளன. அதன் பிறகு யாராவது ஒருவர் தானொரு முஜிதஹிது என நடித்து ஒரு பிழையான மதுஹபைக் கொண்டுவந்து வழிகெட்ட கூடங்களை உருவாக்கலாம் என்ற காரணத்தால் அஹ்லுஸ் ஸுன்னாக்கள் இந்த நான்கு மதுஹபுகளையும் விட எந்த மதுஹபையும் பின்பற்றுவதில்லை.

பல மில்லியன் அஹ்லுஸ்ஸுன்னா முஸ்லிம்கள் இந்த நான்கில் ஏதாவதொரு மதுஹபைப் பின்பற்றுகின்றனர். எல்லா மதுஹபுகளும் சமனானவை என்ற காரணத்தினால் மற்றது பிழை என்றோ பித்அத் என்றோ வழி தவறியது என்றோ கருதுவதில்லை. இந்நான்கு மதுஹபுகளும் சரியான வழி எனக்கூறும் ஒரு முஸ்லிம் தான் பின்பற்றும் மதுஹபு நிச்சயமாக சரியானது

என்று நம்புகிறான். ஒரு விடயம்  எப்படித் தீர்க்கப்படவேண்டும் அல்லது செய்யப்படவேண்டும் என்பது இஸ்லாத்தில் தெளிவாக விளக்கப்படாதபோது அச்செயல் இஜ்திஹாதின் மூலம் தீர்மானிக்கப்பட்டு அதன்படி செய்யப்பட வேண்டும். இந்நிலையில், குறிப்பிட இஜ்திஹாதில் ஒருவரின் மதுஹபு தவறு  என்றும் மற்றய மூன்றும்  சரி என்றும் இருக்கக்கூடும். ஆகவே, எல்லோரும் தான் பின்பற்றும் மத்ஹபு சரியானது சில வேளைகளில் தவறுகளும் இருக்கலாம், மற்றைய மூன்று மத்ஹப்களும் தவறானது, ஆனால் அவற்றில் ஒன்று சரியாக இருக்கலாம் என்று நினைக்கவேண்டும். இவ்வாறு, **ஹரஜ்** (கஷ்டங்கள், சிக்கல்கள்) இல்லாதபோது ஒருசெயலை ஒருமதுஹபின் படியும் மற்ற செயலை இன்னொரு மதுஹபின் படியும் நான்கு மத்ஹபுகளையும் இணைப்பதற்கோ அல்லது கலப்பதற்கோ அனுமதிக்கப்படவில்லை.

ஒரு மனிதன் தான் பின்பற்றும் மதுஹபை நன்கு கற்று  சிக்கல்கள்[1] ஏற்படாத போது அதன்படியே செயலாற்ற வேண்டும்.  ஒருவர் தனது மதுஹபில் கூறியபடி நடப்பது கடமையாகும். (எனினும் அவசிய தேவைக்காக வேறு மதுஹபை பின்பற்றலாம் அவர் இதற்குப்பல நிபந்தனைகள் உண்டு. அவர் அம்மதுஹபின் விவகாரங்களை நன்கு அறிந்திருத்தல் வேண்டும்.) அநேக அறிஞர்கள் ஹனபிமதுஹபு சரியானது என்று கூறியுள்ளனர். பல இஸ்லாமிய நாடுகளில் இது ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது. அநேகமாக துருக்கிய உள்ள எல்லா முஸ்லிம்களும், இந்தியா, அனோடோலியா ஆகிய இடங்களில் உள்ளவர்களில் அநேகரும்  ஹனபிகளாவர். மேற்கு ஆபிரிக்கர் எல்லோரும் மாலிக்கி மதுஹபினர். இந்தியாவில் சிலர் கரையோர பகுதிகளில் உள்ளனர். குருதிஸ்களுக்கிடையிலும், எகிப்து, அரேபியா, தாகிஸ்தான் ஆகிய இடங்களிலும் ஷாபிஈக்கள் அதிகம் உள்ளனர். ஹம்பலிகள் சிலராவர். ஆனால் ஒரு காலத்தில் டமாஸ்கஸிலும், பஹ்தாதிலும், அநேகர் இருந்தனர்.

**அல் அதில்லத் அஸ் ஷரிய்யா** (இஸ்லாத்தின் மூலாதாரங்கள்  நான்கு) குர்ஆன்  ஹதீஸ், கியாசுல் புக்கஹா , இஜ்மா அல் உம்மா  என்பனவாகும். முஜ்தஹீதுகள் ஒரு விவகாரம் எப்படிச் செய்யப்படவேண்டும் என்று குர்ஆனில் தெழிவாக கூறப்படாத போது ஹதீஸின் உதவியை நாடுவர். ஹதீஸிலும் நன்கு  தெழிவாக்கப்படாவிடின் அவர்கள்

___

[1]  ஒருவர் தனது மதுஹபின் படி ஒரு செயலை செய்யும் போது **ஹரஜ்** (சிக்கல்கள், கஷ்டங்கள்) சந்தித்தால் அவர் மற்றொரு மதுஹபை பின்பற்றி அந்த செயலை செய்வதற்கு அனுமதி இருக்கின்றது. அது சில நிபந்தனைகளை பின்பற்ற வேண்டும். அவர் அந்த செயலுக்கு இந்த தெரிவை பாவிப்பதற்கு அவர் பிந்திய மதுஹபின் நிபந்தனைகளை  கடைப்பிடிக்க வேண்டும். இப்னு ஆபிதீன் தனது **நிக்காஹ்-இ-ரிஜ்யி** என்ற அத்தியாயத்தில் எழுதுகிறார்கள். ஹனபி மதுஹபின் உலமாக்கள் மாலிக்கி மதுஹபை இந்த விடயத்தில்  பின்பற்றலாம் என்று கூறியுள்ளார்கள்.

அவ்விவகாரத்தை இஜ்மாவின்படி தீக்கவேண்டும் என முடிவு செய்வார்கள். அந்த  செயலுக்குரிய இஜ்மா[1] ஏதாவது முந்தி செய்து இருந்திருந்தால் அதை பின்பற்றுவார்கள்.

அந்த விவகாரம் இஜ்மாவில் முந்தி கண்டு பிடிக்கப்படா விட்டிருந்தால் அப்பொழுது முஜ்தஹீதுகளின் கியாசைப் பின்பற்றுவது அவசியமாகிறது. இமாம் மாலிக் ரஹ்மாதுல்லாஹி அலைஹி அவர்கள் இந்த நாலு மதுஹபுகளையும் தவிர மதீனா வாழ்மக்களின் மன ஒற்றுமை (அது ஒரு

மதுஹபாக இருந்துள்ளது) ஆதாரமாகுமெனக் கூறியுள்ளார்கள். அந்த மனஒற்றுமை அவர்களின் தந்தைமார்களிடமிருந்து வந்துள்ளது என்றும் அவர்களின் தந்தையர் பாட்டன் மார்களிலிருந்தும் அவர்கள் ரஸூல் ஸல்லள்ளாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடமிருந்தும் பெற்றனர். அதனாலேயே மதீனாவாழ் மக்களின் மன ஒற்றுமை கியாசை விடவும் சிறந்தது என்று கூறினார்கள். ஆயினும் மற்ற மூன்று மதுஹபுகளின் இமாம்களும் மதீனா மக்களின் மன ஒற்றுமையை எடுக்கவில்லை.

இஜ்திஹாதுக்கு இரண்டு முறைகள் உண்டு. அவற்றில் ஒன்று ஈராக்கியப் அறிஞர்களின் வழியான றா'யி(தெரிவு) அல்லது கியாஸ் முறை. ஒரு விவகாரதை எப்படி செய்வது என்று குர்ஆனில் அல்லது ஹதீஸில் தெளிவாக இல்லாவிட்டால், அதேபோன்ற வேறொரு விடயத்தில் குர்ஆன் ஹதீஸில் கூறப்பட்டுள்ளதா என்று பார்க்கப்படும். அப்படியொரு விவகாரம் கண்டு பிடிக்கப்பட்டால் கேள்வியிலுள்ள விவகாரத்தை இருப்பதுடன் ஒப்பீடு செய்து அது போன்று செய்யப்படும். சஹாபாக்களுக்குப் பிறகு இவ்விடயத்தில் முஜ்தஹீதுக்களுக்குத் தலைவராக இமாமுல் அஃலம் அபூ ஹனிபா ரஹ்மாதுல்லாஹி அலைஹி இருந்தார்கள்.

இரண்டாவது முறை; ஹிஜாஸ் உலமாக்களுடய **ரிவாயா** (வழக்கம்) என்று அழைக்கப்பட்டது. இவர்கள் மதீனா மக்களின் மன ஒற்றுமையை கியாசைவிட பெரிதாக மதித்தனர். இதன்படி ஆகவும் பெரிய முஜ்தஹீதாக இமாம் மாலிக் ரஹ்மாதுல்லாஹி அலைஹி அவர்கள் விளங்கினார்கள். இவர்கள் மதீனாவில் வாழ்ந்தார்கள். இமாம் சாபிஈ ரஹ்மாதுல்லாஹி அலைஹி இமாம் ஹம்பலி ரஹ்மாதுல்லாஹி அலைஹி ஆகியவர்கள் இமாம் மாலி ரஹ்மாதுல்லாஹி அலைஹி வின் மாணவர்கள். இமாம் மாலிக்கின் வழியை இமாம் சாபிஈ ரஹ்மாதுல்லாஹி அலைஹி அவர்கள் கற்றபின், ஈராக் சென்று இமாமுல் அஃலத்தின் முறையை அவர்களின் சீடரிடம் கற்று இரண்டையும் ஒன்றினைத்தார்கள். அவர்கள் இஜ்திஹாதுக்கு ஒரு புதிய முறையை ஏற்படுத்தினார்கள். இவர்கள் மிகச்சிறந்த கல்விமானானதால். குர்ஆனுக்கும் ஹதீசுக்குமுள்ள நெருங்கிய ஒற்றுமையை விளங்கி ஒவ்வொரு செயலுக்கும் திருத்தமான ஒவ்வொரு முறையையும் கையாண்டார்கள். அவர்கள் மிகப்பொருத்தமான மாற்றுவழி கண்டுபிடிக்கபடாதபோது, கியாசுக்கு ஏற்ற முறையில் அவர் தன்னுடைய இஜ்திஹாதைப் பிரயோகித்தார்கள். அஹமத் இப்னு ஹம்பல் ரஹ்மாதுல்லாஹி அலைஹி அவர்களும் இமாம் மாலிக் ரஹ்மாதுல்லாஹி அலைஹியிடம் கற்ற பிறகு ஈராக் சென்றார்கள். அங்கே அவர்கள் இமாமுல் அஃலத்தின் சீடர்களிடமிருந்து கியாசை கற்றுக்கொண்டார்கள். அவர்கள் அநேக ஹதீதுகளை

---

[1] இஜ்மா என்பது ஏகோபித்தது, ஏகமனதானது. எல்லா சஹாபாக்களும் ஒரேமாதிரி சரிகண்டது செயல்படுத்தியது. சஹாபாக்களுக்கு பின்னர் வந்த தாபிஊன்களின் இஜ்மா'ஃ என்பதும் ஒரு மதுஹபை போன்றது. அவர்களுக்கு பின்னர் வந்தவர்கள் செய்ததும் சொல்லியதும் இஜ்மா'ஃ இல்லை. குறிப்பாக இப்போதுள்ள மத சீர்திருத்தவாதிகள், மார்க்கத்தை அறியாதவர்கள் சொல்வதும், செய்வதும்.

மனனம் செய்திருந்ததனால் இவர்கள் முதலில் ஹதீஸில் அழுத்தமாகக் கூறப்பட்ட கருத்தை அவதானித்து இஜ்திஹாத் செய்தார்கள். இவர்கள்

அஹ்காமில் இஸ்லாமிய்யாவில் மற்ற மூன்று மதுஹபுகளுடன் பல விடயங்களில் ஒத்திருக்கவில்லை.

இந்த நான்கு மதுஹபுகள் ஒரு நகரில் நிலையாக வசிக்கும் மக்களைப்போன்றது. இதில் கவனிக்கவேண்டியது, ஒரு புதிய விடயத்தில் இருக்கும் சட்டங்களில் காணப்படாத பிரச்சினை ஒன்று எழுமாயின் அவர்கள் ஒன்றுகூடி இதை ஒத்த வேறு பிரச்சினையுடைய சட்டத்துக்கு இணங்க ஒரு முடிவுக்கு வருவர். சிலநேரம் அவர்கள் பரஸ்பர உடன்பாட்டுக்கு வரமுடியாமலிருக்கும். அவர்களில் சிலர் மக்களுக்கு வசதியாக நகரங்களைத் திருத்துவதே அரசாங்கத்தின் கடமையெனக் கூறுவார்கள். தர்க்கிப்பதாலும், அவதானிப்பதாலும் அவர்கள் ஏற்பட்டிருக்கும் புதிய பிரச்சனையை ஏற்கனவே சட்டத்திலுள்ள சமனான விடயங்களுடன் ஒப்பீட்டு அதற்கான முடிவைப்பெறுவர். அவர்கள் ஹனபி மதுஹபின் வழியைப் போன்றது. இன்னும் சிலர் தலை நகரிலிருந்துவரும் உத்தியோகத்தர்களின் நடத்தைகளைக் கவனித்து விட்டு அவர்களிடம் இதை அறிவிப்பர். அவர்களின் நடவடிக்கைகளை கவனித்து அரசாங்கதின் நோக்கம் இப்படியானதென்று கூறுவர். இது மாலிக் மதுஹபைப் போன்றது. இன்னும் இன்னும் சிலர் ஒரு விவகாரத்தைச் செய்யும் வழியை சட்டத்தில் கூறப்பட்டுள்ள வார்த்தைகளையும் சந்தர்ப்பங்களையும் படிப்பதன் மூலமும் அவதானிப்பதன் மூலமும் கண்டுபிடிக்கிறார்கள். இது ஷாபிஈ மதுஹபைப் போன்றது. இன்னும் சிலர் சரியாகச் செய்துமுடிக்க பிறரின் சட்டத்தில் உள்ள குறிப்புகளை ஒன்று சேர்ப்பதாலும் அவற்றை ஒப்பிடுவதன் மூலமும் கண்டுகொள்கின்றனர். இது ஹம்பலி மதுஹபைப் போன்றது.

இவ்வாறு நகரத்திலுள்ள பிரதானிகள் ஒவ்வொரு பிரச்சினைக்கும் தீர்வு காண்கின்றனர். அவர்களுடைய தீர்வு சரி என்றும் அவை சட்டத்துடன் உடன்பட்டவை என்றும் கூறுகின்றனர். ஆனால் சட்டம் அவற்றில் நான்கில் ஒன்றை தான் சரி என்றும் மற்றைய மூன்றும் பிழை என்றும் சொல்கிறது. இருந்தும், சட்டத்துக்கு எதிரான அவர்களுடைய முரண்பாடு அவர்கள் சட்டத்தை எதிர்க்கும் நோக்கத்தை கொண்டது அல்லாமல் இல்லை. அவர்கள் நாட்டின் கட்டளையை செய்து முடிக்க முயற்சிக்கின்றனர். எனவே, அவர்கள் யாரும் குற்றவாளி எனக்கருத முடியாது. அவர்களின் கடுமையாக உழைப்புக்கு அவர்கள் போற்றப்படுவார்கள். அவர்களில் சரியானதைக் கண்டுபிடித்தவர்கள் மிகவும் போற்றப்படுவதுடன் சன்மானமும் அளிக்கப்படுவார்கள்.

நான்கு மதுஹபுகளும் இவ்விதமேயாகும். அல்லாஹுத்த ஆலா நிச்சயமாக அதில் ஒரு வழியை மட்டுமே விரும்புகிறான். நான்கு மதுஹபுகள் ஒரு நடவடிக்கை விசயத்தில் ஒன்றுகொன்று முரண்பட்டால் ஒன்று மட்டும் சரியாகவும் மற்றைய மூன்றும் பிழையாக இருக்கும். ஆனால் ஒவ்வொரு மதுஹபுடைய இமாம்களும் சரியான வழியைக்ககண்டு பிடிப்பதற்கு கஷ்டப்பட்டதால் அவர்களின் தவறுகள் மன்னிக்கப்படும். அவர்கள் சன்மானம் அளிக்கப்படுவார்கள். ஏனெனில் நபி ஸல்லள்ளாஹு அலைஹி வசல்லம்) அவர்கள் **“எனது உம்மத்தில் ஏற்படும் தவறுகளுக்கும் மறதிகளுக்கும் தண்டனையில்லை”** என்று கூறினார்கள்.

இவர்களுக்கிடையே இருந்த கருத்து வேறுபாடுகள் சில முக்கிமற்ற விடயங்களிலேயே இருந்தன. ஆனால் சமய நம்பிக்கையிலும், அநேக வணக்க வழிபாடுகளிலும் முற்றான உடன்பாடுகள் காணப்படுகின்றன. அதாவது குர்ஆனிலும் ஹதீதுகளிலும் வெளிப்படையாக கூறப்பட்ட விதிகளைபற்றி எவரும் மற்றவரைப்பற்றி குறை கூறவில்லை.

**(கேள்வி)**: பிரிட்டிஸ்காரர்களால் உருவாக்கபட்ட வழி தவறிய கூட்டத்தினரான வஹ்ஹாபிகளும், அவர்களின் நூற்களை வாசிப்பவர்களும்; மதுஹபுகள் ஹிஜ்ரி இரண்டாம் நூற்றாண்டில் தோன்றியவை, சஹாபாக்களும் தாபிஊன்களும் எந்த மதுஹபை சேர்ந்தவர்கள்? என்று கேட்கிறார்கள்.

**(விடை)**: மதுஹபுடைய இமாம்கள் பிரசித்திபெற்ற மிகத்தரமான கல்விமான்கள். இவர்கள் சஹாபக்களிடமிருந்து குஆன், ஹதீதுக்குரிய மார்க்க அறிவைப் பெற்று அவற்றை தொகுத்தவர்கள். கல்வியை கற்றுக்கொடுப்பதற்காக குர்ஆன், ஹதீதில் தெழிவாக கூறப்படாத விடயங்களை தெளிவாக கூறப்பட்ட ஒத்த விடயங்களுடன் ஒப்பிடுவதன் மூலம் இவர்கள் தெழிவாக்கிக் காட்டினர்கள். நான்கு மதுஹபுடைய இமாம்களின் காலத்திலேயே அநேக மதுஹபைக்கொண்ட இமாம்கள் இருந்தனர். ஆனால் அவர்களைப் பின்பற்றியவர்கள் ஒவ்வொரு நூற்றாண்டிலும் குறைந்து தற்போது ஒருவருமில்லை [1]. ஒவ்வொரு சஹாபியும் முஜ்தஹீதாவார். அவர்கள் ஆழ்ந்த அறிவுள்ள மார்க்க அறிஞர்கள். அத்துடன் மதுஹபுடைய இமாம்களுமாவர். அவர்கள் ஒவ்வொருவரும் மிகச் சிறந்ததும் ஆழ்ந்த கல்விஞானமும் கொண்டவர்கள் நான்கு மதுஹபுகளுடைய இமாம்களை விட கல்வியறிவில் சிறந்தவர்கள். அவர்களுடைய மதுஹபுகள் இப்போதிருக்கும் நான்கு மதுஹபுகளையும் விட உயர்ந்தவை. அவர்கள் கிதாபுகள் எழுதாமல் இருந்ததால் அவை மறைந்துவிட்டன. அதனால் இந்த நான்கு மதுஹபுகளையும் விட மற்றவைகளை பின்பற்றும் சாத்தியம் இல்லாமலாகிவிட்டது.

சஹாபாக்கள் எந்த மதுஹபுவை பின்பற்றினார்கள் என்று கேட்பது ஒரு சேனையின் தளபதி எந்தப் பிரிவுக்குத் தலைவன் என்று கேற்பதுபோலவும், ஒரு பாடசாலையின் பௌதீக ஆசிரியன் எந்த வகுப்புக்கு ஆசிரியன் என்று கேற்பதுபோலவும் ஆகும். அநேக நூல்களில் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது. ஹிஜ்ரி 4 ஆம் நூற்றாண்டுக்குப் பிறகு இஜ்திஹாதுல்-முத்தலக்கை (முழுமையான இஜ்திஹாத்) திறமையுடன் செய்யக் கூடியவர் எவரும் இருக்கவில்லை. அல்ஹதீகா என்ற நூலில் 318 பக்கத்தில் கூறப்படுள்ள ஒரு ஹதீஸ் ஷரீப் "பிழையான வழிதவறிய மார்க்கவாதிகள் அதிகரிப்பார்கள் என அறிவிக்கிறது. இக்காரணத்தால் ஒவ்வொரு சுன்னி முஸ்லிமும் இன்று அந்த நான்கு மதுஹபுகளில் ஒன்றை பின்பற்ற வேண்டும் (தக்லீது). நான்கில் ஒரு மதுஹபின் இல்முல் ஹால் என்ற நூற்களையே வாசித்து ஈமானுடன் அதன்படியே ஒழுகவேண்டும் என்பது கட்டாயமாகிறது. இவ்வாறு ஒருவர் இந்த மதுஹபுகளில் ஒன்றைச் சேர்ந்தவராகிறார். இவற்றில் ஒன்றைப்பின்பற்றாதவர் சுன்னி முஸ்லிம் ஆகமாட்டார் ஆனால் இவர் 72 தவறான வழியிலுள்ள கூட்டத்தைச் சேர்ந்த லா-மத்ஹபி ஆகுவார் அல்லது ஒரு முஸ்லிமல்லாதவர்[2]ஆகுவார் . ஹஸரத் அப்துல் வஹ்ஹாப் அஸ்

ஸரானி அவர்கள் ஒரு பெரிய அறிஞர். இவர்கள் எழுதிய **மீசான் அல் குப்ரா** என்ற நூலில் எல்லா மறக்கப்பட்ட மதுஹபுகளும் இன்றிருக்கின்ற நான்கு மதுஹபுகளும் சஹீஹானது (உண்மையானது) என்றும், ஒன்று ஒன்றைவிட மேலானதல்ல, ஏனனில்

[1] அல் ஹதீகா பக்கம் 318
[2] இந்த உண்மை பஹ்ர் இலும் ஹிந்தியாஇலும், அத்-தஹ்தாவி யில் "zசbபாயிஹ்" என்ற பகுதிஇலும், ரத்துல் முஹ்த்தார் இன் bபாகிஹ்ஸ் என்ற பகுதியிலும் எழுதப்பட்டுள்ளன. இன்னும், அல்-bபசாயிர் இன்52 ஆம் பக்கத்தில் அஹமத் சாவி எழுதிய தப்சீரில் சூறதுல் கஹ்ப் விரிவுரையிலும் எழுதப்பட்டுள்ளதாக குறிப்பிடப்பட்டுள்ளது

அவை எல்லாம் ஒரு அடிப்படை தத்துவத்தில் அமைந்தவை என்று கூறியுள்ளார்கள். ஒவ்வொரு மதுஹபும் செய்வதற்கு **ருக்ஷா**(இலகுவானதையும்), **அzஜிமா** (கஸ்டமானதையும்) கொண்டிருக்கின்றது. அஜிzமா செய்ய வேண்டிய ஒருவர் பதிலாக ருக்ஷா செய்வாராயின் அவர் இஸ்லாத்தை விளையாட்டாக்கி விட்டார். விதிவிலக்குள்ள ஒருவர் (அzஜிமா செய்ய இயலாதவர்) ருக்ஸா செய்யமுயும். அவர் ருக்ஷா செய்வது அவருக்கு அzஜிமா செய்த நன்மை கொடுக்கப்படும். இயலுமை உள்ள ஒருவர் அவரின் மதுஹபின் படி ருக்ஹ்சாவுக்கு பதிலாக அzஜிமா செய்வது வாஜிப் ஆகும். மேலும் அரு குறித்த செயல் தனது மதுஹபில் இலகுவான வழி (ருக்ஷா ) மட்டும் இருந்து மற்ற மத்ஹபில் கஷ்டமான வழி (அzஜிமா) இருப்பின் அவர் அzஜிமா செய்வது வாஜிப் ஆகும்.

ஒருவர் **அ'இம்மத்-அல்-மதாஹிப்** (மதுஹபுகளுடைய இமாம்கள்) உடைய கூற்றுகளை விரும்பாமல் இருப்பதிலிருந்து ஆகக்கூடியவரை தவிர்ந்து கொள்ளவேண்டும் அல்லது மத்ஹபுகளை விட தனது அபிப்பிராயம் சிறந்தது என்று கூறுவதை தவிர்க்கவேண்டும். முஜ்தஹிதுகளுடைய[1] அறிவுடன் ஒப்பிடும் போது மற்றயவர்களின் அறிவு பூச்சியம் என்று கூறலாம். ஒருவர் தனது சொந்த மதுஹபின்படி றுக்சா செய்வதற்கு அனுமதியும் விதிவிலக்கும்[2] இல்லாத ஒருவர் வேறு மதுஹபில் ருக்சா தேடுவது ஒரு பொழுதும் அனுமதிக்கப்படவில்லை. இது **தல்பிக்** மதுஹபுகளை ஒன்றிணைத்தல் எனத் தெழிவாகிறது. இது அலாஉத்தீன் ஹஸ்கபி ரஹ்மாதுல்லாஹிஅலைஹி 1021-1088[1677 A.D] அவர்களின் துர்ருல் முக்தார் என்னும் நூலின் முகவுரையிலும், செய்யித் முகம்மது அமின் பின் உமர் பின் அப்துல் அஸீஸ் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் அதற்கு எழுதிய விரிவுரை ரத்துல் முஹ்த்தார், (அது இப்னுஆபிதீன் என்றும் அழைக்கப்படும்) விரிவுரையிலும் உள்ளது. மதுஹபில் ருக்சா தேடுவதும் (நான்கு மதுஹபுகளையும் இணைப்பதும்) அதன்படி வணக்கம் செய்வதும் சஹீஹ் அல்ல எனக் கூறப்பட்டுள்ளது.

உதாரணமாக சாபிஈ மதுஹபைச் சேர்ந்த ஒருவர் தான் வுழுவுடன்(சுத்தமாக) இருக்கும்போது இரத்தம் வடிந்தால் வுழு முறியாது. ஆனால்,ஹனபி மதுஹபின்படி வுழு முறியும். சாபிஈ மதுஹபைச் சேர்ந்த ஒருவருக்கு அவருக்குச் சொந்தமில்லாத[நா-மஹரம்] பெண்ணின் உடம்பு படுமாயின் வுழுமுறியும். ஆனால், ஹனபி மதுஹபின் படி[3] வுழு முறியாது. ஆகவே, வுளுவின் பின்னர் ஒருவரின் தோலில் இரத்தம் வடிந்து நா-மஹரம் பெண்ணின் உடலை தொட்டால் அதன்மூலம் அவர் நிறை வேற்றும்

தொளுகை ஸஹீஹ் அல்ல. இதே போல், ஒரு மதுஹபின் படி ஒரு செயலை செய்யும் போது இன்னொரு மதுஹபை பின்பற்றுதல் செல்லுபடியாகாது. இவ்வாறே இஸ்லாமிய அறிஞர்களின் ஏகோபித்த மன உடன்பாட்டின்படி ஒரு மதுஹபின்படி ஒரு காரியத்தை நிறைவேற்றும் ஒருவர் மற்ற மதுஹபையும் கைக்கொள்ளுவது பிழையாகும். உதாரணமாக சாபிஈ மதுஹபைச் சேர்ந்த ஒருவரின் உடம்பில் நாய் பட்டதுடன். (உடம்பில் நாய்பட்ட பகுதியை கழுவாமல்), ஷாபி'ஈ மதுஹபின்படி வுழு செய்யும்போது தலையில் அவரின் நனைந்த கையினால் சிறிய முடிகள் உள்ள பகுதியை மஷ்ஹு செய்து, மாலிக்கி மதுஹபை பின்பற்றி தொழுவது ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது. ஒருவர் நாய் பட்டதுடன் தொழுகையை நிறை வேற்றுவது ஷாபி'ஈ மதுஹபின்படி ஸஹிஹ் அல்ல ஏற்றுக்கொள்ளப்படாது. ஆனால், மாலிக்கி

______________________________

[1] அல் மீசான் அல் குப்ரா, முகவுரை

[2] 'உத்ர்' technical word துருக்கிய மொழிபெயர்ப்பில் பாவிக்கப்பட்டுள்ளது.

[3] Endless bliss இன் 5ஆம் பாகம் 12வது அத்தியாயத்தை பார்க்கவும்

மதுஹபின்படி நாய் ஆனது நஜிஸ் அல்ல. (ஆனால் மாலிக்கி மதுஹபின் படி வுழு செய்யும் போது தலையின் முடியுள்ள முழுப்பகுதிகளையும் ஈரமான கையினால் மஸ்ஹு செய்ய வேண்டும்.

இதேபோல், ஹனபி மதுஹபின்படி கட்டாயத்தின் கீழ் தலாக்(விவாகரத்து) கொடுப்பது ஏற்றுக்கொள்ளப்பட்டது. ஆனால் மற்ற மூன்று மதுஹபுகளிலும் அனுமதியில்லை. தான் விவாக ரத்துக் கொடுத்த பெண்ணின் சகோதரியை ஹனபி மதுஹபை[1] பின்பற்றி விவாகம் செய்து கொண்டுள்ள ஒரு நபர் அவர் அந்த விவாகத்துடன் இருக்கும்போது தான் விவாகரத்து கொடுத்த பெண்ணை ஷாபிஈ மதுஹபின் படி திரும்பவும் விவாகம் செய்ய அனுமதி இல்லை.

இஸ்லாமிய அறிஞர்களின் ஏகோபித்த தீர்ப்பின் பிரகாரம்,ஒரு செயலை செய்வதற்கு **தல்பிக்** செய்வது அனுமதிக்கப்படவில்லை. அதாவது; மதுஹபுகளுக்கிடையில் ருக்சாவைத் தேடி அதன் படி செயலாற்றுவதற்கு (பரந்துபட்ட கொள்கை) அனுமதி இல்லை. ஏதாவதொரு மதுஹபை பின்பற்றாமல்[2] எதனையும் செய்வதையும் இஸ்லாம் அனுமதிக்கவில்லை. மேலும் ஷாபிஈ மதுஹபின்படி நீண்ட பிரயாணத்திலும் கடும் மழை காலத்திலும் [விதிவிலக்கு (உதுர்) உள்ளபோது] அஸர் தொழுகையை லுஹருடன் தொழுவதும், இசாத் தொழுகையை மகரிபுடன் தொழுவதும் ஆகுமானதாகும். ஆனால் ஹனபி மதுஹபில் இது அனுமதிக்கப்படவில்லை. ஏதும் கஷ்ட காரணமில்லாதிருக்கும் போது பிரயாணத்தில் லுஹர் தொழுகையை அஸர் தொழுகையுடன் தொழுவது ஒரு ஹனபிக்கு ஹராமாகும். அஸர் தொழுகையை லுஹருடன் தொழுவது ஒருபொழுதும் சஹீஹல்ல. ஆனால் இரண்டும் ஷாபிஈ மதுஹபில் சஹீஹாகும்.

ஒருவரின் சொந்த மதுஹபில் ஒரு இபாதத்தை செய்வது மிகக்கடினமாய்(ஹரஜ், மஷக்கா) இருக்கும்போது தனது மதுஹபில் இலகுவான வழியை(ருக்ஸா) பின்பற்றுவது அனுமதிக்கப்பட்டதாகும். ருக்ஸா செய்வதும் கஷ்டமாக இருப்பின் மற்றைய மதுஹபைப் பின்பற்றுவதும் அந்த குறித்த அமலை நிறைவேற்றுவதற்கு

அனுமதிக்கப்பட்டதாகும். ஆனால் அவர் குறித்த அமலுக்குரிய பர்ளு வாஜிப் என்பன 2வது மதுஹபின்படி[3] நிறைவேற்ற வேண்டும். ஒரு அமலை செய்யும் போது இன்னொரு மதுஹபை பின்பற்றும் நபர் தனது மதுஹபை விட்டு வெளியேறாது விட்டால் அவர் தனது மதுஹபை மாற்றவில்லை. அவர் அந்த குறித்த அமலை செய்யும்போது மட்டும் மற்றைய மதுஹபின் சட்டங்களை பின்பற்ற வேண்டும்.

இமாம் இப்னு ஆபிதீன் ரஹுமத்துல்லாஹி அலைஹி அவர்கள் தன்னுடைய **ரத்துல் முக்தாத்** இரண்டாம் பாகம் 542 ஆம் பக்கத்தில் இவ்வாறு கூறுகின்றார்கள். 'ஒரு ஹனபி வழக்கமான வுழுச்செய்யும் நோக்கத்துடன் இல்லாமல் வுழுசெய்து ளுகர் தொளுகையை செய்து முடித்தால் அது ஏற்றுக்கொள்ளப்படும். பின்னர் அவர் ஷாபிஈ ஆகமாறி அசர் நேரம் வந்ததும் அவ்வுளுவுடன் ஷாபிஈ முறைப்படி அஸர் தொழுவாராயின் அது சஹீஹாகாது அவர் முறைப்படி திரும்பவும் வுழுச்செய்வது அவசியமாகும்"[4]. ஒருவர் உலக விவகாரங்களுக்காக மார்க்கத்தில் அவசியம் இல்லாமலும், அறிவு சம்பந்தப்பட்ட அவசியமில்லாமலும் மதுஹபை மாற்றினால் இஸ்லாத்தை ஒரு விளையாட்டாக ஆக்குகிறார். அவர் தண்டிக்கப்பட வேண்டியவர். இவர் ஈமானற்று மரணிக்கலாம் என்று அஞ்சப்படுகிறது.

________________________

[1] **Endless bliss** இன் 6ஆம் பாகம் 15வது அத்தியாயத்தை பார்க்கவும்
[2] **துர்ருல் முக்தார்** முகவுரை மற்றும் **ரத்துல் முஹ்த்தார்** விவுரையை பார்க்கவும்
[3] ibid, தொழுகையின் நேரம் பற்றி
[4] ரத்துல் முஹ்த்தார் V II, p 542. ஷாபிஈ மதுஹபில் ஒரு அடிப்படையான

அல்லாஹு தஆலா **"அறிந்தவர்களிடம் கேட்டுக்கொள்"** என்று கூறுகிறான். இக்காரணத்தினால் முஜ்தஹீதுகளிடம் கேட்பதும் மதுஹபுகளைப் பின்பற்றுவதும் வாஜிபாகிறது. ஒரு மதுஹபைப் பின்பற்றுவதற்கு அம்மதுஹபைப் பின் பற்றுவதாகச் சொல்வதாலும், மனதால் நினைப்பதாலும் சாத்தியமாகும். மதுஹபைப் பின்பற்றுவதற்கு அதை கற்பதும் அதன்படி செயல் படுவதும் அவசியமாகும். ஒருவர் அதை கற்றுக்கொள்ளாமல் நான் ஹனபி, நான் ஷாபிஈ என்று சொல்வதால் மட்டும் மதுஹபைச் சேர்ந்துவிட முடியாது. ஆலிம்களிடம் கேட்பதன் மூலமும் இல்முல் ஹால் நூல்களை [1] வாசிப்பதன் மூலமும் கற்றுக்கொள்ளவேண்டும். மதுஹபை உதாசீனம் செய்பவரும் இலகுவான வழிக்காக மதுஹபுகளை மாற்றுபவரும் (மதுஹபுகளை இணைத்து தெரிந்து அவற்றின் இலகுவான முறைகளைக் தேடுபவரும் எந்தச் செயலுக்கும் சாட்சியாக மார்க்கத்தில் அனுமதிக்கப்படவில்லை.[2].

இப்னு ஆபிதீன் அவர்கள் தனது முகவுரையில் சொல்லுகிறார் "கலீபா ஹாறுன் ரஷீத் இமாம் மாலிக் ரஹ்மாதுல்லாஹி அலைஹி அவர்களிடம் கூறினார். நான் உமது நூல்களை எல்லா முஸ்லிம் நாடுகளுக்கும் பரவச்செய்ய விரும்புகிறேன் அத்துடன் நான் எல்லோரையும் உங்களையே பின்பற்றுமாறு கட்டளையிடப்போகிறேன் என்றார். அதற்கு இமாம் மாலிக் அவர்கள் "ஓ கலிபாவே! அப்படி செய்யாதீர்கள். இமாம்கள் மதுஹபுக்குள் வித்தியாசமாக இருப்பது அல்லாஹ் உம்மத்துக்களின் மேல் உள்ள கருணையால் ஆகும் எல்லா மதுஹபுக்களும் சரியானது. உம்மத்துக்கள் விரும்பி யதைப் பின்பற்றட்டும் என்று கூறினார்கள்".

அல்லாஹ்வினால் நபி ஸல்லள்ளாஹு அலைஹி வசல்லம் மூலம் உலகம் முழுவதும் உள்ள மனித இனத்துக்கு அறிவிக்கப்பட்ட இஸ்லாமிய போதனைகளை விசுவாசித்து ஏற்றுக்கொள்பவர் முஃமின் அல்லது முஸ்லிம் ஆவார். குர்ஆனில் கூறப்பட்டும் ஆயிரக்கணக்கான ஹதீஸ்களின் மூலம் விளங்கபடுத்தப்பட்டும் உள்ள இந்த இஸ்லாமிய போதனைகளை, சஹாபா கிராம்கள் நபி சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்களிடம் நேரடியாக கேட்டறிந்தார்கள். இரண்டாம் மற்றும் மூன்றாம் நூற்றாண்டில் சஹாபாக்களை தொடர்ந்து வந்த சலபுஸ்ஸாலிஹீன்கள் அதாவது; இஸ்லாமிய அறிஞர்கள் சஹாபாக்களிடமிருந்து நேரடியாக கேட்டதையும் மற்றைய அறிஞர்களிடம் இருந்து பெற்ற கல்வியையும் நூல் வடிவாக எழுதினார்கள். அதன் பின்னர் வந்த இஸ்லாமிய அறிஞர்கள் சலபுஸ்ஸாலிஹின்களிடம் இருந்து பெற்ற அறிவை விளங்குவதில் ஒருவரிடம் இருந்து இன்னொருவர் வேறுபட்டார்கள். இதனால் ஒன்றிலிருந்து ஒன்று முரண்பட்டதாக 73 கூட்டம் வித்தியாசமான நம்பிக்கையின் அடிப்படையில் உருவாகியது. அவற்றில் ஒரு குழுவினரே தமது சொந்த அபிப்பிராயங்களையும், எண்ணங்களையும் பின்பற்றாமலும் மார்க்கத்தில் எதையும் மாற்றாமலும் புதிதாகச் சேர்க்காமலும் இருந்தனர். இந்த சரியான ஈமானையுடைய கூட்டத்தினர் அஹ்லுஸ் சுன்னா அல்லது சுன்னிகள் என அழைக்கப்படுகின்றனர். மற்ற 72 கூட்டத்தினரும் தனது பிழையான விளக்கங்களின் காரணமாகவும், புரியாத குர்ஆன் ஆயத்துகளுக்கு, ஹதீதுகளுக்கு தனது விருப்பத்திற்கு ஏற்ப பிழையான விளக்கங்கள் கொடுப்பதாலும் வழிதவறினார்கள். அவர்கள் வழி தவறிய பித்'அத் கூட்டம் (அல்லது ளலாலா, வழிதவறியவர்கள்,) அல்லது லா-மதுஹபிகள் என்று அழைக்கப்படுகிறார்கள். இவர்களும் முஸ்லிம்கள் ஆனால் அவர்கள் வழிதவறியவர்கள்.

---

[1] ரத்துல் முஹ்த்தார் த'ஸீர் பிரிவு

[2] ibid சாட்சிகள் பிரிவு

சிலர் சலபுஸ்ஸாலிஹீன்களின் நூல்களில் இருந்து ஈமானின் அறிவை பெறுவதற்கு மாறாக குர்ஆனுக்கும் ஹதீதுக்கும் தனது சொந்த அபிப்பிராயப்படி விளக்கத்தைக் கொடுப்பவர்கள் அகீதாவில் அவர்கள் முற்றாக வழி தவறி **முல்ஹித்** காபிர்களாக மாறுகிறார்கள். **முல்ஹித்** என்பவர்கள் தங்களை முஹம்மதுர் ரசூளுல்லாஹ்வின் உண்மையான உம்மத் என்று நினைப்பவர்கள். **முனாபிக்கு**கள் முஸ்லிம்கள் என்று நடிப்பவர்கள் ஆனால் வேறு மதத்தில் இருப்பவர்கள். Z**ஜின்தீக்** என்பவர்கள் நாத்திகர்கள் எந்த மதத்தையும் நம்பாதவர்கள் ஆனால் முஸ்லிமென்று நடிப்பவர்கள். இவர்கள் முஸ்லிம்களை ஏமாற்றி மதத்திலிருந்து வெளியேற்றுவதும் அவர்களை நாஸ்திகர்களாக மாற்றுவதுதான் இவர்களின் நோக்கம். இவர்கள் இஸ்லாத்தில் மாற்றங்களை உருவாக்கி அதை இல்லாமல் அழித்துவிடுவதற்கு முயற்சிக்கின்றார்கள். இவர்களுக்கு உதாரணம் ப்ரீ மேஸன்ஸ் இஸ்லாத்தின் எதிரிகள் அவர்கள் மார்க்கம் இல்லாதவர்கள் மற்றும் பிரிட்டிஸ் உளவாளிகள்.[1]

ஒருவர் முஸ்லிமாக இருப்பதற்கு ஈமானின் ஆறு கடமையான பர்ளுகளை நம்புவது மட்டும் போதாது, ஒருவர் கடமையாக்கபட்ட பர்ளானவற்றை நிறைவேற்றுவதையும் தடுக்கப்பட்ட ஹராம்களை தவிர்க்க வேண்டிய

அவசியத்தையும் நம்ப வேண்டும். கடமையான் பர்லுகளை நிறைவேற்றவேண்டும் என்பதையும்,ஹராமானவைகளை தவிர்க்க வேண்டும் என்பதையும் ஏற்றுக்கொள்ளாத ஒருவர் **முர்த்தத்** (மதம் விலகியவன்) ஆக மாறுவார். இவைகளை நம்பும் ஒருவர் அவைகளில் ஒன்று அல்லது பல பர்ளுகளை செய்யாமல் விட்டாலும் ஹராமனவைகளில் சிலவற்றை செய்தாலும் அவர் முஸ்லிமேயாவர். ஆனால் அவர் குற்றமுள்ளவர், பாவி முஸ்லிமாவார். இவர் **பாசிக்** என அழைக்கப்படுவார். பர்ளுகளை செய்வதும் , ஹராமை விலக்கி நடப்பதும் “இபாதா” என்று கூறப்படும். ஒரு முஸ்லிம் இபாதா செய்வதுடன் குற்றம் செய்தவுடன் பட்சாதாபப்பட்டு பாவமன்னிபுக்கோரும் முஸ்லிம் **ஸாலிஹ்** என அழைக்கப்படுவார்.

ஈமானின் ஆறு பர்ளுகளை அறியாமலும் இஸ்லாத்தின் கடமையான பர்ளுகள் , ஹராம்கள் எவை எனத்தெரியாமலும் அவற்றை அறிய முயற்சிக்காமலும் ஒரு நகரில் இன்று வசிக்கும் ஒருவருக்கு மன்னிப்பு இல்லை. அவர் மார்க்கத்தைக் கற்காமல் இருப்பது மிகக் கொடிய பாவமாகும். அவர் சுருக்கமாகக் கற்று அவரின் பிள்ளைகளுக்கும் கற்பிப்பது அவசியமாகும். ஒருவர் மார்க்கத்தைக் கற்காதுவிட்டால் அவர் **காபிராக** மாறிவிடலாம் “**அஸ்ஹது அன் லாயிலாஹ இல்லல்லாஹு வ அஸ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹு வறசூலுஹு**” என்பதை கருத்தை அறிந்து ஒருவர் சொல்லு வதன் மூலம் விசுவாசம் கொள்வதன் மூலம் அச்சமயமே அவர் முஸ்லிமாவார். பின்னர் அவர் இன்னும் எவற்றை கற்க வேண்டும், நம்பவேண்டும் என்பதைப் படிப்படியாக செய்ய வேண்டும் அவற்றை அறிந்த முஸ்லிம்கள் அவருக்குச் சொல்லிக்கொடுக்க வேண்டும் அவர் அதை கற்காவிட்டால் இஸ்லாத்திலிருந்து வெளியாகி முர்த்ததாகிவிடுவார். அஹ்லுஸ் சுன்னத் இமாம்களின் கிதா புகளிலுமிருந்து **இல்முல் ஹால்** ஐ கற்பது மிக அவசியமாகும். (அவர் சுன்னி போதனைகளை அறியாத பேராசிரியர்களின் பேச்சை கேட்கக்கூடாது, எழுத்துக்களை வசிக்கக்கூடாது.)

---

[1] “ஒரு பிரிட்டிஷ் உளவாளியின் வாக்குமூலம்” என்ற நூலை வாசிக்கவும். ஹக்கீக்கத் பிரசுரம், இஸ்தான்புல் , துருக்கி.

P-31

# பல்வேறு தகவல்கள்

## பிரிவினைவாதிகளும் வழிதவறிய மதுஹபுகளும்

முஸ்லிம்களில் இரண்டு முக்கிய பிரிவினர்கள் உள்ளனர். அதில் ஒன்று **அஹ்லுஸ் ஸுன்னத்.** இந்த பிரிவினர் மட்டுமே முஸ்லிம்களில் முக்கியமானதும் மிக சரியானதுமான பிரிவினர். இவர்கள் ஒரே விதமான நம்பிக்கையைக் (ஈமான்) கொண்ட அஹ்லுஸ் ஸுன்னாவின் நான்கு மதுஹபுகளை சேர்ந்தவர்கள். அவர்களுக்கிடையில் வேறுபாடுகள் இல்லை. அவர்கள் அனைவரும் அஹ்லுஸ் ஸுன்னாவைப் பின்பற்றிய நம்பிக்கையை கொண்டவர்கள்.

இரண்டாவது பெரிய பிரிவினர் அஹ்லுஸ் ஸுன்னா பிரிவினரைப்போன்று எல்லோரும் ஒரே விதமான நிம்பிக்கை கொண்டவர்களல்ல. இவர்கள் **பித்'ஆ** மற்றும் **லா மதுஹபி** என்று அழைக்கப்படுகிறார்கள். இவர்களுக்கு உதாரணம் ஷீயாக்களும் வஹ்ஹாபிகளும்.

இப்னு தைமிய்யா ,ஜமாலுத்தீன் ஆப்கானி , முஹம்மது அப்துஹ், செய்யித் குத்துப், மவ்தூதி போன்றவர்களை பின்பற்றுபவர்களும் தங்களை தப்லீக் ஜமாஅத், வஹ்ஹாபிகள் என்று அழைப்பவர்களை (வழிதவறியவர்கள்) பின்பற்றுபவர்களும் **அஹ்லுல் பித்அத்** என்று அழைக்கப் படுகின்றனர். வஹ்ஹாபிகள் தங்களை **ஐந்தாவது மதுஹபு** என்று கூறுகின்றனர். அவர்களின் இந்த கூற்று உண்மையல்ல. ஐந்தாவது மதுஹபு என்பது ஒன்றும் இல்லை. தற்பொழுது எங்களுக்கு நான்கு மதுஹபுகளில் ஒன்றின் இல்முல் ஹால் எனும் இஸ்லாமிய அறிவைத்தவிர கற்பதற்கு வேறு வழி இல்லை. பின்பற்றுவதற்கு மிக இலகு என்பதால் எல்லோரும் மதுஹபை பின்பற்றுகிறார்கள். அவர்கள் அதன் நூல்களை கற்கிறார்கள். அதன்படி வழிபாடுகளை அமைத்துக்கொள்கிறார்கள். அவர்கள் மதுஹபை பின்பற்றுவதால் (தக்லீது) செய்பவராகின்றனர். அவர்கள் தங்கள் மதுஹபை சேர்ந்த பெற்றோர்களிடம் பார்ப்பது கேட்பது மூலம் இஸ்லாத்தின் நடைமுறைகளை கற்றுக்கொள்வது மிகவும் இலகுவானது. ஒன்று அல்லாமல் நான்கு மதுஹபுகள் இருப்பது முஸ்லிம்களுக்கு மிகவும் வசதியானது. ஒருவர் விரும்பினால் அவரது மதுஹபை விட்டு இன்னொரு மதுஹபை பின்பற்றமுடியும். ஆனால், புதிய மதுஹபை கற்றுக்கொள்வதற்கு காலம் எடுக்கும். இன்னும், தான் இருந்த மதுஹபில் கஷ்டப்பட்டு கற்றவைகள் பிரயோசனமில்லாமல் போகும். புதியதில் வணக்க வழிபாடுகளை செய்யும்போது குழப்பமான நிலை தோன்றும். ஒருவர் தனது மதுஹபை வெறுத்து இன்னொன்றுக்கு செல்வதற்கு அனுமதியில்லை.

இஸ்லாமிய அறிஞர்களின் (உலமாக்கள்) படி மதுஹபை வெறுப்பது சலபுஸ் ஸாலிஹீன்களை வெறுப்பது மற்றும் அவர்களை மடையர்கள் அறியாதவர்கள் என்ற எண்ணம் குப்ரை உண்டாக்கும். அண்மையில் பாகிஸ்தானில் மவ்தூதி, எகிப்தில் செய்யத் குத்தப், ரஷித் ரிதா போன்றவர்கள் தோன்றினர். அவர்களும் அவர்களின் வழிதவறிய தலைவர்களும் இஸ்லாத்தில் மிக இலகுவான சட்டவிதிகளை தெரிவு செய்வதற்காக மதுஹபுகள் ஒன்றிணைக்கப்பட வேண்டும்என்று கூறி வந்தனர். இது அவர்களின் அறிவீனமும், குறுகிய பார்வையும் ஆகும். அவர்களின் நூல்களை ஒரு முறை நோட்டமிடும்போது அவர்களுக்கு தப்சீர், ஹதீது, உஸூல் பிக்ஹு ஒன்றுமே தெரியாது என்பது விளங்கும். அவர்களின் வாதங்களை நோக்கும்போது அவர்கள் அறிவில் குறைந்தவர்கள் என்பதும் பிழைகளை புகுத்துபவர்கள் என்பதும் தெளிவாகும். பின்வருபவற்றை உற்று நோக்குங்கள்.

(1) நான்கு மதுஹபுடைய இமாம்களும் சொல்லுகின்றார்கள், முல்பிக்கின் உய்த்துணர்வு சரியானதல்ல ஒரு இபாதத்தை ஒரே நேரத்தில் பல மதுஹபுகளின்படி செய்வது பாத்தில் ஆகும் (பிழையாகும்), ஏற்கப்படக் கூடியதல்ல. இந்த நான்கு மதுஹபுடைய இமாம்களின் ஏகோபித்த

ஒற்றுமைக்குக் கீழ்படியாதவன் ஒரு மதுஹபையும் சேர்ந்தவனல்ல. அவன் லா மதுஹபி ஆவான். மதுஹபற்றவனின் செயல்கள் அனைத்தும் இஸ்லாத்துக்கு ஏற்றதல்ல அவைகள் எல்லாம் பிரயோசனமற்றவை. அவன் இஸ்லாத்தில் விளையாடுகிறான்.

(2) மதுஹபுகளின் இணைப்பானது, முஸ்லிம்களை ஒரு வழிக்குள்ளாக்கி அவர்களின் இபாதத்தை கடினமாக்கும். அல்லாஹ்வும் அவனது தூதரும் ஒரே வழியில் ஆக்கவேண்டுமென்று விரும்பியிருந்தால், ஒவ்வொன்றையும் மிகத் தெழிவாகப் பிரகடனப்படுத்தியிருப்பார்கள். ஆனால் அல்லாஹ்வும் அவனது தூதரும் மனித இனத்தின்மேல் அளவிலா அன்புகொண்டதனால் அவர்கள் தெழிவாக்கவில்லை. அஹ்லுஸ் சுன்னத் இமாம்களின் வேறுபட்ட விளக்கத்தினால் பல்வேறு மதுஹபுகள் உண்டாயின ஒருவர் ஒரு கஷ்டமான விவகாரத்தைச் சந்திக்கும்போது அவர் தனது மதுஹபிலுள்ள இலகுவான வழியைப்பின்பற்றுவார். அதிலும் பெரிய கஷ்டமான செயல் எனின் அவர் மற்றைய மதுஹபுவைப் பின்பற்றி இலகுவாகச் செய்து முடிப்பார். ஒரு தனி மதுஹபில் சிலதைப் பெறமுடியாமல் இருக்கலாம். மதுஹபற்றவர்கள் தங்கள் இலகுவான வழியில் சேர்வதாகக் கருதுகிறார்கள் ஆனால் உண்மையில் அவர்கள் என்ன செய்கிறார்கள் என்பதை அறியாமல் முஸ்லிம்களின் கடமையைக் கடுமையாக்குகின்றனர்.

(3) ஒரு இபாதத்தைச் செய்ய முயற்சிக்கும்போது ஒரு வணக்கத்தின் ஒரு பகுதியை ஒரு மதுஹபின் படியும் மறு பகுதியை வேறு மதுஹபின்படி செய்ய முயற்சிக்கும்போது முந்திய இமாமின் அறிவை இவர் விரும்பாமல் புறக்கணிக்கின்றனர். இது ஆரம்பத்திலேயே கூறப்பட்டதுபோல சலபுஸ்-சாலிஹீன்களை ரஹ்மதுல்லாஹிதஆலா அலைஹிம் அஜ்மஈன்களை அறிவற்றவர்கள் என்று கருவதுபோல் ஆவதால் குபிருக்குள்ளாகின்றனர். அஹ்லுஸ் சுன்னத் இமாம்களை ரஹ்மதுல்லாஹிதஆலா அலைஹிம் அஜ்மஈன்களை நிந்தித்த வர்களினதும், இபாதத்தை மாற்ற நினைத்த வர்களினதும் நிலைமையை சரித்திரம் சொல்லி நிற்கின்றது. நான்கு மதுஹபுகளிளிருந்து ருக்சாவை (இலகுவான வழியை எடுப்பது) அவசியம் என்று கூறுபவர்கள் நான்கு மதுஹபுகளை அழித்துவிட நினைத்தவர்களுக்கும் மதுஹபுடைய இமாம்களின் நூல்களில் ஒரு பக்கத்தையேனும் சரியாக வசிக்கவோ விளங்கவோ முடியாதுபோனது என்பது வெளிப்படை. மதுஹபுகளை விளக்கும் இமாம்களின் கண்ணியத்தை அறிந்துகொள்ளவும் ஆழ்ந்த அறிவு பெற்றிருப்பது மிக அவசியம்.

ஆழமாகக் கல்விகற்ற ஒருவர் மடமையான ஒரு வழியை தோற்றுவித்து மக்களின் நாசத்துக்கு தலைமைதாங்க மாட்டார். அவ்வப்போது தோன்றிய மடையர்களை நம்பியே வழிதவறிய மக்கள் பேராபத்தில் போய் விழுந்தார்கள் என்று சரித்திரத்தில் காண்கின்றோம். அதேநேரம், ஹதீஸில் புகழப்பட்ட 14 நூற்றாண்டு காலமாகத் தோன்றிய அஹ்லுஸ் சுன்னத் இமாம்களைப் பின்பற்றியவர்கள் வெற்றியையும் பெரும் இன்பத்தையும் அடைந்தனர் என்று அறிகின்றோம். நாங்கள் அல்லாஹ்வின் நேசத்திலும் தூய இஸ்லாத்தைப் பரப்பவும் வாழ்ந்த மேன்மைதங்கிய கண்ணியமான தூய முஸ்லிம்களாகிய எமது மூதாதையர்களின் வழியைப்

பின்பற்றவேண்டும். திடீரென முளைத்த நச்சுத்தன்மையுள்ள பேராபத்தான புதுமைக்கரர்களின் கூற்றுக்களை நம்பக்கூடாது.

ஆனால் துரதிஸ்டவசமாக கெய்ரோ மேசனிக் லொஜ் தலைவர் அப்துல்லாவின் நச்சுத்தன்மை பொருந்திய கொள்கைகள் எகிப்த்தில் உள்ள ஜாமியுல் அஸ்ஹரில் ஒரு பக்கம் பரப்பப்படுகிறது. இவ்வாறு எகிப்தின் பல **சமய சீர்திருத்தவாதிகளான** ரசீத் ரிதா; முஸ்தபா அல் மராக்கி( ஜாமி உல் அஸ்கர்) இயக்குனர்; அப்துல் மஜீத் அஸ் ஸாலிம் ,கெய்ரோவின் முப்தி; மஹ்மூது அஷ்ஷல்துத்;, தந்தாவி அல் ஜவஹரி;, அப்துல் ராசிக் பாஸா; ஸக்கி அல் முபாரக்; பரீத் அல் வாஜிதி; அப்பாஸ் அக்காத்; அஹமத் அமீன்; டாக்டர் தாஹர் ஹுசைன் பாஸா; காசிம் அமீன், ஹசன் அல் பன்னா ஆகியவர்கள். மிகவும் கவலைக்குரியது என்னவென்றால் அவர்களின் தலைவன் அப்துவைப்போல் இவர்களும் நவ இஸ்லாமிய மேதைகளாக மதிக்கப்படுகிறார்கள். இவர்களின் நூல்கள் பல மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டு வெளியிடப்பட்டுள்ளன. அவர்கள் அநேக முஸ்லிம்களும் அறியாதவர்களும் உண்மையான வழியிலிருந்து வெளியேறுவதற்கு காரணமானவர்.

ஹிஜ்ரி 14 ஆம் நூற்றாண்டில் இஸ்லாமிய அறிஞரான முஜ்தஹிது செய்யிது அப்துல் ஹக்கீம் அர்வாசி கூறுகின்றார்கள். கெய்ரோவின் முப்தி அப்து இஸ்லாமியப் அறிஞர்களின் மேன்மையை விளங்கிக்கொள்ளவில்லை. தன்னை இஸ்லாத்தின் எதிரிகளுக்கு விற்று மார்க்கத்திலிருந்து வெளியேறியது மட்டுமல்லாமல் இஸ்லாத்துக்குள் இருந்து இரகசியமாக அழிக்கும் பயங்கரமான ஈமானற்றவனாக ஆகிவிட்டார்.

அப்துவைப் போன்று தவறான வழியில் போட்டிபோட்டு தலைமை தாங்கும் மக்களை தீய வழிக்கு வழிநடத்தும் இளம் சமயவாதிகளும் ஈமானற்று வழிதவறிவிட்டனர். “**எனது உம்மத்துக்களுக்கு வழிதவறிய அதிகாரம்பெற்ற சமயவாதிகளால் பேராபத்து உண்டாகும்**”. என்ற ஹதீதின் தீர்க்கதரிசனப்படி “அவர்கள் அந்த நாசத்திற்கு வழிகாட்டினர். அப்துஹ்வின் மரணத்தின்1323(1905A.D.)பின்னர் எகிப்தில் அப்துவிடம் பயிற்றப்பட்டவர்கள் ஒருவரும் சும்மா இருக்கவில்லை. அவர்கள் எண்ணற்ற தீங்கு விளைவிக்கும் நூல்களை வெளியிட்டனர். அது அல்லாஹ்வின் கடும் கோபத்துக்கும் சாபத்துக்கும் காரணமானது. அவற்றுள் ஒன்று ரசீத் ரிதாவின் **முஹாவராத்** என்னும் நூலாகும். அதில் அவர் தனது குருவைப் போல் அஹ்லுஸ் சுன்னத்தின் நான்கு மதுஹபுகளையும் சாடியுள்ளார். மதுஹபுகள் கொள்கை வேற்றுமைகளை கொண்டது என்றும், இஜ்திஹாதுடைய முறைகளையும், நிபந்தனைகளையும் பிழையாக பிரயோகித்து எதிரான முரண்பாடுகளால் வழிதவறி இஸ்லாமிய ஒற்றுமையை உடைத்துள்ளார்கள் என்று குற்றம் சட்டியுள்ளார். ஆயிரம் வருடங்களுக்கு மேலாக அந்த மதுஹபில் ஒன்றைப் பின்பற்றும் பல கோடி உண்மை முஸ்லிம்களை அவர் மிகவும் இலகுவாக கேலி செய்கிறார். இவர் இஸ்லாத்தில் மாற்றங்களை உண்டுபண்னு வதர்காக வழிகளைத்தேடி இஸ்லாத்திலிருந்து வெகுதூரம் சென்றுவிட்டார்.

இஸ்லாத்தை மாற்றியமைக்க முயற்சி செய்பவர்களின் பொதுவான லட்சணம் அவர்கள் தங்களை உண்மையான முஸ்லிம் என்றும் இஸ்லாமிய

அறிவுடன் தற்கால தேவைகளுக்கு ஈடுகொடுக்கும் மிகவிரிவான அறிவு படைத்த அறிஞர்கள் என்று தங்களை அறிமுகப்படுத்துவதாகும். ஆனால், இஸ்லாமிய நூல்களை வாசித்து, விளங்கி அஹ்லுஸ் ஸுன்ன அறிஞர்களின் பாதையில் அடிமேல் அடியெடுத்து தங்களை நடத்தி வரும் முஸ்லிம்களை பொறுத்தவரையில், அஹ்லுஸ்ஸுன்னா அறிஞர்கள் அல்லாஹ்வுடைய ரசூல் சல்லலள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்கள் தன்னுடைய வாரிசு என்றும் **"அவர்களின் காலம் மிகச்சிறந்த காலம்"** என்று நன்மாராயம் கூறப்பட்டவர்கள். ஆனால் அந்த உண்மையான புனிதர்களை இந்த சீர்த்திருத்த வாதிகள் சிந்திக்கத் தெரியாமல் பின்பற்றுபவர்கள் எனக்கூறுகிறார்கள். இந்த சீர்திருத்தவாதிகளுடைய பேச்சுக்கள் கட்டுரைகளிளிருந்து இவர்களுக்கு ஷரீஅத்தின் சட்டதிட்டங்கள் பிக்ஹுக் கல்வி என்னவென்றும் தெரியாதென்பதை தெழிவாகப் புரிந்து கொள்ளலாம். அவர்கள் (பிக்ஹுக் கல்வி) மார்க்கக் கல்வி அறவே இல்லாதவர்கள். அநாகரீகமான மடையர்கள்.

ஒரு ஹதீது "**மனித இனத்தில் மிக உயந்தவர்கள் ஈமானுடைய அறிஞர்களாவார்**". **"மார்க்க அறிஞர்கள் நாயகத்தின் வாரிசுகள்"; "இதயத்தின் அறிவானது அல்லாஹ்வின் அந்தரங்க இரகசியம்**"; **"இஸ்லாமிய அறிஞரது தூக்கம் வணக்கமாகும்"; அவர்களுக்கு எனது உம்மத்தில் உள்ள அறிஞர்களுக்கு மரியாதை செய்யுங்கள்"; "அவர்கள் பூமியிலுள்ள விண்மீன்களாவர்"; "அறிஞர்கள் இறுதித்தீர்ப்பு நாளில் மற்றவர்களுக்காக பரிந்துரை செய்வார்கள்"; "பிக்ஹுடைய அறிஞர்கள் அளவிட முடியாத மதிப்புக்குரியவர்கள்"; அவர்களின் கூட்டத்தில் இருப்பது வணக்கமாகும்";** அத்துடன், **"ஒரு அறிஞர் அவரின் சீடர்களுக்கிடையில் ஒரு உம்மத்தில் நபியைப் போன்றவர்".**

ரசூலுள்ளாஹ் சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்கள் 13 ஆம் நூற்றாண்டு காலமாக் அஹ்லுஸ் சுன்னத் அறிஞர்களை புகழ்ந்துரைத்தனரா அல்லது அதன் பின்னர் வந்த அப்துஹ் வையும் அவர் சீடர்களையும் புகழ்ந்தார்களா? என்பதை சிந்தியுங்கள்.

இந்தக் கேள்விக்கும் நமது நாயகம் சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்கள் விடையளித்தார்கள். "**ஒவ்வொரு நூற்றாண்டும் அதற்கு முந்திய நூற்றாண்டைவிட மோசமானது**".**இது இறுதித்தீர்ப்பு நாள்வரை மோசமாகி க்கொண்டு போகும், நியாயத் தீர்ப்பு நாள் அருகில் வந்ததும் மார்க்கவாதிகள் அழுகிய கழுதை மாமிசத்தைவிட கெட்டுவிடுவர்**". (நேர்மைற்றுப்போவர் )இந்த ஹதீது **முக்த்தசறு தத்கிரத் அல்-குர்துபி** இல் எழுதப்படுள்ளது. நமது நாயகம் சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்கள் பெருமையாகவும் புகழ்ந்தும் உரைத்த எல்லா இஸ்லாமிய அறிஞர்களும், ஆயிரக்கணக்கான அவுலியாக்களும் '**அஹ்லுஸ் சுன்னத் வல் ஜமா அத்** என்னும் அந்த அறிஞர்களின் வழியானது நரகத்தை விட்டும் காப்பாற்றும் என்ற நற்செய்தியையும் அஹ்லுஸ் சுன்னத் இல்லாதவர்கள் நரகத்தில் விழுவார்கள்' என்ற செய்தியையும் ஏகமனதாக அறிவித்துள்ளார்கள். நான்கு மதுஹபுகளிளிருந்து (ருக்ஸா) இலகுவான வழியை எடுத்து சேர்த்து ஒன்றிணைத்து**(தல்பிக்)** ஒரு பிழையான மதுஹபுவைக் கொண்டுவருவது பிழையானதும், மடத்தனமானது எனவும் ஏகமனதாக கூறியுள்ளார்கள்.

ஒரு நியாயமாக சிந்திக்ககூடிய மனிதன் அஹ்லுஸ் சுன்னத் அறிஞர்களால் ஆயிரம் வருடங்களாக ஏகமனதாக புகழ்ந்துரைக்கபட்ட வழியைப் பின்பற்றுவார்களா அல்லது நாகரீகமடைந்தவர்கள், முற்போக்குவாதிகள் என தம்மைக் கூறிக்கொள்ளும் அண்மைய நூற்றாண்டில் தோன்றிய இஸ்லாத்தின் அறிவு குறைந்தவர்களான இவர்களை நம்புவார்களா ?

அவர்கள் நரகத்தையே அடைவார்கள் என ஹதீது ஷரீபில் கூறப்பட்டுள்ள பிரபலமான பேச்சாளர்களான 72 கூட்டத்திலுள்ளவர்கள் அஹ்லுஸ் சுன்னத் அறிஞர்களை எப்போதும் தாக்கி அவமதித்து உண்மையான முஸ்லிம்களை களங்கப்படுத்த முயற்சிக்கின்றனர். இருந்தும், அவர்கள் குர் ஆனின் ஆயத்துகளை கொண்டும் ஹதீதுகளை கொண்டும் பதில் கொடுக்கப்பட்டு அடக்கி வைக்கப்படுகிறார்கள். ஒவ்வொரு நூற்றாண்டிலும், அவர்கள் தங்களால் அஹ்லுஸ் சுன்னத் அறிஞர்களை அறிவால் வெல்லமுடியாது என்று கண்டபொழுது ஆயிரக்கணக்கான முஸ்லிம்களை பலாத்காரத்தால் கொள்ளையடித்தும் கொலைசெய்தும் வருகின்றனர். ஆனால் மறுபுறம், நான்கு மதுஹபுகளை சேர்ந்தவர்கள் ஒன்றுக்கொன்று பரஸ்பர ஒற்றுமையுடன் வாழ்ந்து வருகின்றனர்.

ரஸூல் ஸல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்கள், "**எனது உம்மத்துக் களுக்கிடையில் (நடைமுறைகளில்) முரன்டுவது அல்லாஹ்வின் கருணையாகும்**" என்று கூறியுள்ளார்கள். ஆனால் ரசீத் ரிதா போன்ற சில சமய சீர்திருத்தவாதிகள் (இவர் 1865 இல் பிறந்து 1935 A.D. இல் கெய்ரோவில் திடீரெனக் காலமானார்.) நான்கு மதுஹபையும் ஒன்றிணைப்பதன் மூலம் இஸ்லாமிய ஒற்றுமையை உண்டாக்க விரும்புவதாக கூறுகிறார். ஆனால் மறுபுறம், நபிகள் நாயகம் 'சல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' அவர்கள் ஒரே ஈமானின் வழியான நான்கு கலிபாக்களின் வழியிலும் இணையும்படி உலக முஸ்லிம்கள் எல்லோருக்கும் கட்டளை யிட்டார்கள். இஸ்லாமிய அறிஞர்கள் நான்கு கலிபாக்களின் வழியைக்கண்டு பிடித்து நூல் வடிவமாக்கினர்கள் நபி (ஸல்) அவர்கள் காட்டிய இந்த வழியை **அஹ்லுஸ் சுன்னத் வல் ஜமாஅத்** எனப் பெயரிட்டனர்.

அகில உலக முஸ்லிம்கள் அனைவரும் இந்த அஹ்லுஸ் சுன்னத்தில் சேரவேண்டும். உண்மையாகச் சொன்னால் இஸ்லாத்தை ஒன்றிணைக்க முயல்பவர்கள் அவர்கள் நேர்மையுள்ளவர்களாயின் இந்த **அஹ்லுஸ் சுன்னா** வழியில் சேரவேண்டும். ஆனால் சிந்திக்குகளும் இஸ்லாத்தை அழிக்கப் பாடுபடும் வழிதவறியவர்களும் இஸ்லாமிய ஒற்றுமை கலைக்கப்பட்டு விட்டது எனவும் தாங்கள் இஸ்லாமிய ஒற்றுமையை வழங்குவதாகவும் கூறி ஒற்றுமை என்ற போர்வையின் கீழ் வஞ்சகமாக அவர்களின் பிழையான வாதங்களைக் கொண்டு முஸ்லிம்களை ஏமாற்றுகின்றனர்.

இஸ்லாத்தின் எதிரிகள் முதலாம் நூற்றாண்டிலிருந்தே இஸ்லாத்தை அழித்துவிட முயற்சிக்கின்றனர். இன்றைய நிலையில் மார்க்கமில்லாதவர்கள் நாஸ்திகர்களும், யூதர் கிறிஸ்தவர்களும் இஸ்லாத்தை அழிப்பதற்காக திட்டமிட்டு முயற்சிக்கின்றனர். நரகம் செல்பவர்கள் எனக்கூறப்பட்ட வழிதவறிய முஸ்லிம்களும் பல சூழ்ச்சிககளையும் செய்து அஹ்லுஸ் சுன்னத்தைக் களங்கப்படுத்தி சத்திய

வழி நடக்கும் முஸ்லிம்களை பிழையான முறையில் வழிநடத்துகின்றனர். அவர்கள் இஸ்லாத்தின் எதிரிகளுடன் சேர்ந்து அஹ்லுஸ் ஸுன்னாவை தகர்ப்பதற்கு ஒன்றுபடுகின்றனர். இந்த தக்குதலுக்கெல்லாம் **பிரிட்ட்டிசார்** முன்னோடியாக இருந்தனர். அவர்கள் தங்கள் வளங்களையும் படைகளையும் தரைப்படை, கடற்படை நிபுணர்கள், அரசியல் விற்பன்னர்கள், எழுத்தாளர்கள் எல்லாம் இந்த நேர்மையற்ற யுத்தத்துக்கு உபயோகித்தனர். அவர்கள் அஹ்லுஸ் சுன்னாவின் பாதுகாவலர்களாக இருந்த இந்தியாவில் குர்காநிய்யா[1] மற்றது மூன்று கண்டங்களில் வியாபித்திருந்த இருந்த ஒட்டமான் இஸ்லாமிய சாம்ராஜ்யம் ஆகிய இரண்டு மிகப்பெரிய முஸ்லிம் நாடுகளை சீர்குலைப்பதில் வெற்றி கண்டனர். அவர்கள் இஸ்லாத்தின் பெறுமதிமிக்க நூல்களையெல்லாம் இல்லாமற்செய்ததுடன் சில நாடுகளில் இஸ்லாமியக் கல்வியையும் இல்லாமலாக்கினர். இரண்டாம் உலக மகா யுத்தத்தில் கம்மியுனிச

---

[1]பாபர்களின் திமுறித் ஸ்டேட் அல்லது பாபர் சாம்ராஜ்யம் 1526 இல் ஜாஹிருத்தீன் முஹம்மத் பாபர் 'ரஹ்மாதுல்லாஹி அலைஹி' அவர்களால் ஸ்தாபிக்கப்பட்டது. இவர் திமோர் கான் ( தமலைன்) , அமீர் குர்கான்'ரஹ்மாதுல்லாஹி அலைஹி' என்றும் அழைக்கப்படுகிறார்.736[1336A.D.]- 807[1405]). Confessions of A British Spy என்ற நூலை பார்க்கவும்.

நாடுகள் முற்றாக அழியும் நிலையில் இருந்தன. பிரிட்டிஷாரிடம் இருந்து அவர்களுக்கு கிடைத்த உதவி மற்றும் ஒத்துழைப்பு மூலம் அவர்கள் இழந்த பலத்தை திரும்ப பெற்றதுடன் உலகம் முழுவதும் பரவியது.

1917 இல் பிரிடிஸ் பிரதமர் ஜேம்ஸ் வெல்போர் **சியோனிஸ்டு**களின் ஸ்தாபனத்தை நிறுவினார். அது முஸ்லிம்களின் புனித பூமியான பலஸ்தீனில் இஸ்ரேல் இராச்சியம் உருவாவதற்கு வேலை செய்தது. பிரிட்டிஷாரின் தொடர்ந்த உதவிகள் மூலம் 1947 இல் இஸ்ரேல் இராச்சியம் உருவானது. அதே பிரிட்டிஷ் அரசாங்கம் 1932இல் அரேபிய பெநின்சுலாவை ஒட்டமன்களிடம் இருந்து கைப்பற்றி வஹ்ஹாபிச தேசத்தை உருவாக்கி ஸஊதின் மக்களுக்கு கையளித்தது. இவ்வாறு பிரிட்டிஷ்காரர்கள் முஸ்லிம்களுக்கு பெரியளவு அழிவுகளை ஏற்படுத்தினார்கள்.

அப்துர்ரஷித் இப்ராஹீம் எபந்தி அவரின் The Hostility of the British Towards Islam"என்ற நூலின் 2ஆம் பாகத்தில் ஆலமல் இஸ்லாம் எனும் துருக்கிய நூல் 1910 A.D. இல் இஸ்தான்புல்லில்அச்சிடப்பட்டது. பிரிட்டிஷ் ஆட்சியாளர்களின் மிக முக்கியமான நோக்கம் முஸ்லிம் கிலாபத்தை நீக்குவது. எவ்வளவு கதியாக செய்ய முடியுமோ அவ்வளவு துரிதமாக செய்துமுடிப்பது. இதற்காக, கிரீமியன் துருக்கியர்களைடு ஒட்டோமன்களுக்கு எதிராக கிளர்ச்சி செய்யும்படி தூண்டி விட்டு கிலாபத்தை அழித்துவிடுவது. பாரிஸ் உடன்படிக்கையின் போது அவர்களின் இரகசிய ஏமாற்று நோக்கங்கள் தெரிய வந்தன. அவர்களின் இதயங்களில் இருந்த வெறுப்பு 1923இல் லோசன்ன உடன்படிக்கையின் அவர்களின் திட்டங்களை முன்வைக்கும் போது வெளிப்பட்டது. மாறுவேடம் எதுவாக இருந்தாலும் துருக்கி மீது விழுந்த எல்லா விதமான பேரிழப்புகளும் பிரிட்டிஷ் ஆல்தான் ஏற்பட்டது. பிரிட்டிஸ் அரசியல்வாதிகள் எப்போதும் இஸ்லாத்திற்கு அஞ்சுகிறார்கள். இஸ்லாத்தை அழிப்பதுதான் பிரிட்டிஸ் அரசியல்வாதிகளின் பிரதான அரசியல் நோக்கமாக இருந்தது. அவர்கள் முஸ்லிம்களை ஏமாற்றுவதற்காக கூலிப்படைகளை பயன்படுத்தி வருகின்றனர். ஆங்கிலேயர்கள் இந்த

துரோகத்தனமான மற்றும் முனாபிக் தனமானவர்களை இஸ்லாமிய அறிஞர்களாக முன் வைக்கின்றனர். சுருக்கமாக கூறினால் , இஸ்லாத்தின் மிகப்பெரிய எதிரி ஆங்கிலேயர்கள்தான்.

முஸ்லீம் நாடுகள் நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக ஆங்கிலேயர்களால் இரத்தக் கறைபட்டுள்ளன என்பது மட்டுமல்ல, ஆனால் ஸ்காட்ச் கூலிப்படையினர் ஆயிரக்கணக்கான முஸ்லிம் மக்களையும் அறிஞர்களையும் ஏமாற்றி, அவர்களை கூலிப்படையினராக உருவாக்கியது. "மனிதகுலத்திற்கு உதவுதல், சகோதரத்துவம் " போன்ற பொய்களை முன்வைத்து அவர்களை இஸ்லாத்தில் இருந்து விலக்கி அவர்களின் சொந்த விருப்பத்துடனே இஸ்லாத்தை விட்டும் வெளியேற்றினர். இஸ்லாத்தை முற்றிலுமாக அழிப்பதற்காக அவர்கள் இந்த கூலிப்படையினரை கருவிகளாகப் பயன்படுத்தினர். முஸ்தபா ரஷீத் பாஷா, அலி பாஷா, ஃபுவாட் பாஷா, மிதாத் பாஷா, தல்அத் பாஷா போன்ற கூலிப்படையினர் இஸ்லாமிய நாடுகளை நாசப்படுத்த இவ்வாறு பயன் படுத்தப்பட்டனர்.

ஜமாலுத்தீன் அல்-ஆப்கானி, முஹம்மதுஅப்து மற்றும் அவர்களால் பயிற்றுவிக்கப்பட்ட கற்றுக்குட்டிகள் இஸ்லாமிய அறிவைத் களங்கப்படுத்துவதற்கும் அழிப்பதற்கும் பயன்படுத்தப்பட்டனர். இஸ்லாமிய பதவிகளை ஆக்கிரமித்த இந்த கூலிப்படையினர் எழுதிய நூற்றுக்கணக்கான நாசகார அழிவுகரமான நூல்களில் ஒன்று எகிப்திய ரஷீத்ரிதா எழுதிய '**முஹாவறாத்**' எனும் நூல் பல மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டு இஸ்லாமிய நாடுகளில் விநியோகிக்கப்பட்டது; இந்த முறையால் அவர்கள் முஸ்லிம்களின் மத நம்பிக்கையையும் களங்கப்படுத்த முயற்சித்து வருகின்றனர். அஹ்லுஸ்-சுன்னா அறிஞர்களின்'ரஹ்மத்துல்லாஹி தஆலா அலைஹிம் அஜ்மஈன்' புத்தகங்களைப் படிக்காத புரிந்துகொள்ளாத இளைஞர்கள் இந்த நீரோட்டத்தால் கைப்பற்றப்பட்டு அழிவுக்குள் தள்ளப்பட்டு மற்றவர்களையும் அழிவைக் கொண்டு வந்துள்ளனர். **முஹாவறாத்** எனும் நூல் அஹ்லுஸ்-சுன்னாவின் நான்கு மத்ஹப்களையும் விமர்சிக்கின்றது. இஸ்லாமிய அறிவின் நான்கு ஆதாரங்களில் ஒன்றான **இஜ்மா-அல்-உம்மாவை** மறுக்கின்றது. மேலும் ஒவ்வொருவரும் குர்ஆன் மற்றும் சுன்னா (ஹதீது) வையும் விளங்கி நடக்க வேண்டும் என அறிவுறுத்துவதன் மூலம் இஸ்லாமிய போதனைகளை அழித்துவிட முயற்சிக்கின்றது.[1]

**குலாசத்-உத்-தஹ்கீக்** எனும் நூலின் முடிவில் ஒரு முஸ்லீம் ஒரு முஜ்தஹித் ஆகிவிட்டாலும் இஜ்திஹாட்டின் தரத்தை எட்டவில்லை என்று கூறப்பட்டுள்ளது. ஒரு முஜ்தஹித் ஒருவர் **முத்லக்**(பூரண) அல்லது **முகய்யத்** (ஒரு மதுஹபுடன் சேர்ந்தவர்). ஒரு முஜ்தாஹிது **முத்லக்** என்பவர் மற்றொரு முஜ்தஹித்தை பின்பற்ற அனுமதிக்கப்படவில்லை. அவர் தனது சொந்த இஜ்திஹாதை பின்பற்ற வேண்டும். இருப்பினும், ஒரு முஜ்தஹித் **முகய்யத்** என்பவர் முஜ்தஹிது முத்லக்கின் மதுஹபு முறைகளைப் பின்பற்றி தனது சொந்த இஜ்திஹாதின் படி நடப்பது வாஜீப் ஆகும். ஒரு முஜ்தாஹித் முத்லக்கின் மதுஹபில்; இந்த முறைகளுக்கு இணங்க அவர் பயன்படுத்தும் தனது சொந்த இஜ்திஹாத்தில் அவர் செயல்படுகிறார்.

முஜ்தஹித் அல்லாதவர்கள் நான்கு மதுஹப்களில் ஒன்றை தெரிவு செய்து அதை பின்பற்றுதல் அவசியமானது. இருப்பினும், ஒரு குறிப்பிட்ட மதுஹபிற்கு இணங்க ஒரு செயலைச் செய்யும்போது அச்செயல் (ஸஹீஹ்) ஏற்றுக்கொள்ளப்பட அந்த மதுஹபில் தேவையான எல்லா நிபந்தனைகளையும் அவர்கள் கடைபிடிக்க வேண்டும். அதில் ஒன்றைக் கூட அவர்கள் கடைபிடிக்கவில்லை என்றால், அவர்களின் வணக்கம் ஸஹீஹ் ஆகாது. அத்தகைய செயல் வீண் (பாத்தில் ) என்று ஏகமனதாக கூறப்பட்டுள்ளது. தங்கள் மதுஹபு உயர்ந்தது என்று ஒருவர் நம்ப வேண்டியதில்லை என்றாலும், அவர்கள் அவ்வாறு நம்புவதே சிறந்தது. **தல்ஃபிக்**, அதாவது, ஒன்றுக்கொன்று உடன்படாத ஒன்றுக்கு மேற்பட்ட மதுஹபுகளின் விதிகளின்படி எந்தவொரு வழிபாட்டையும் அல்லது எந்தவொரு செயலையும் செய்ய அனுமதியில்லை. இதை இன்னும் தெளிவாகக் கூறப்போனால் ஒன்றுக்கொன்று உடன்படாத மதுஹபுகளின் விதிகளைத் தேர்ந்து எடுப்பது நான்கு மத்ஹப்களில் இருந்து வெளியேறி ஐந்தாவது மத்ஹபை உருவாக்குவது என்று பொருள். இந்த வழிபாடு ஒன்றோடு ஒன்று கலந்து எந்த மத்ஹப்களிலும் சஹிஹாக இருக்காது; அது வீணாகிவிடும், மேலும் இஸ்லாத்தில் விளையாடுவதைக் குறிக்கும். எடுத்துக்காட்டாக, சில நஜீஸ்கள் ஒரு குறிப்பிட்ட அளவு

---

[1] முஸ்லீம் சகோதரர்களுக்கு இந்த நூலின் தந்திரங்களையும் தீங்குகளையும் தெரிவிக்க, இஸ்லாத்தின் எதிரிகளுக்கு எங்கள் பதில் (Answer to an Enemy of Islam) என்ற நூலை நாங்கள் 1394( 1974A.D.)இல் தயார் செய்து துருக்கியிலும் ஆங்கிலத்திலும் வெளியிட்டோம். இஸ்லாமிய அறிஞர் அப்துல்-கானி-அன் நபுலுஸ்'ரஹ்மத்துல்லாஹி அலைஹி எழுதிய குலாசத் அத்-தஹ்க்கீக் பி-பாயனி ஹுக்மித்-தக்லீத் வத்-தல்பீக் நூலையும், யூசுப் அன்-நபஹானி 'ரஹ்மத்துல்லாஹி தஆலாஅலைஹி எழுதிய ஹுஜ்ஜத்-அல்லாஹிஅலல் ஆலமீன் மற்றும் இந்தியாவின் உலமாக்களில் ஒருவரான முஹம்மது' அப்தர்-ரஹ்மான் அஸ்-சில்ஹாதி 'ரஹ்மத்துல்லாஹிதஆலா அலைஹி எழுதிய சைஃப் அல்-அப்ரார் என்னும் நூற்கள் மேற்கூறப்பட்ட இந்த தீங்கு விளைவிக்கும் நூலிற்கு தகுந்த மறுப்பை தெரிவிக்கின்றது. இந்த நூற்கள் ஆஃப்செட் செயல்முறை மூலம் மீண்டும் உருவாக்கி வெளியிட்டுள்ளன. (அவை துருக்கியின் இஸ்தான்புல்லில் உள்ள ஹக்கீகத் கிதாபேவியில் கிடைக்கின்றன.)

தண்ணீரில் **ஹவ்து கபீர்ருக்**குக் குறைவான அளவில் **குல்லத்தைனை**[1] விட கூடுதலாக விடப்பட்டு , தண்ணீரின் நிறம், சுவை அல்லது வாசனை மாறாத பொது ஒரு நபர் இந்த நீரைக் கொண்டு (நிய்யா) நோக்கம் இல்லாமல் வுளு செய்தால், மேலும் நிபந்தனையில் உள்ள சில உறுப்புகளை அவர் பரிந்துரைக்கப்பட்டவாறு கழுவ வில்லை என்றால், அடுத்தடுத்து அவரது உடலின் சில பாகங்களை அவர் மெதுவாக கைகளைத் தேய்க்காவிட்டால் , அவர் அவற்றை ஒன்றன் பின் ஒன்றாகக் கழுவவில்லை என்றால், அவர் பிஸ்மில்லாஹ் என்று சொல்லாமல் தொடங்கினால், அவரது வுளு நான்கு ஆயிம்மத்தல் மத்ஹப்படி சஹிஹ் ஆகாது. அது சஹிஹ் என்று சொல்பவர் ஐந்தாவது மதுஹபை உருவாக்கிவிட்டார்.

ஒரு முஜ்தாஹித் கூட நான்கு மத்ஹப்களின் ஒருமித்த கருத்தை ஏற்காது ஐந்தாவது கருத்தை ஒரு பரிந்துரைக்க முடியாது. [ஒரு குல்லத்தைனுக்கு சமமான நீரின் அளவு முடிவில்லாத பேரின்பம் என்ற புத்தகத்தின் நான்காவது பாசிக்கலின் ஏழாவது அத்தியாயத்தில் விரிவாக விளக்கப்பட்டுள்ளது.] சத்ருஷ்-ஷரியா என்பவர் தனது **தவ்தீஹ்** என்ற நூலில் எழுதுகிறார்: “ஏதாவது ஒன்றைப் பற்றிய இரண்டு வெவ்வேறு அறிக்கைகள்

சஹாபத்துல்-கிராமிடம் இருந்து கிடைக்கப்பெற்றால் பிந்தைய அறிஞர்கள் மூன்றாவது ஒரு ஏகோபித்த கருத்தை முன்மொழிய அனுமதிக்கப் படவில்லை.

ஒவ்வொரு நூற்றாண்டின் அறிஞர்களும் சஹாபத்துல்-கிராம் போல இருப்பார்கள் என்று கூறிய அறிஞர்களும் உள்ளனர். முல்லா க்ஹுஸ்ரோ ரஹ்மத்துல்லாஹி அலைஹி தனது **மிர் அத்துல் உசூல்** எனும் நூலில் எழுதுகிறார், முதலாம் நூற்றாண்டின் அறிஞர்களிடமிருந்து ஒரு விடயத்தில் இரண்டு வெவ்வேறு அறிக்கைகள் பெறப்பட்டால். பிந்தைய அறிஞர்கள் மூன்றாவது ஒரு ஏகோபித்த கருத்தை கூறுவதற்கு அனுமதிக்கப் படவில்லை. ஒவ்வொரு நூற்றாண்டின் அறிஞர்களும் சஹாபத்துல்-கிராம் போன்றவர்கள் என்று சொல்வது சஹிஹ் தான் என்று "**தஃப்ஸீர் அல் ஜலாலைனின்** ஆசிரியர் ஜலாலுத்தீன் அல் மிஹால்லி ரஹ்மத்துல்லாஹி அலைஹி இமாம் சுயூத்தியின் '**ஜம்ஆல் அல்-ஜாவாமி**'க்கு எழுதிய வர்ணனையில்: "இஜ்மா (இஸ்லாமிய அறிஞர்களின் ஒருமித்த கருத்து) வுடன் முரண்படுவது ஹராம் என்று கூறுகிறார்கள்.. குர்ஆன்-அல்-கரீமில் இது தடைசெய்யப்பட்டுள்ளது. அதனால், சலபுஸ்-சாலிஹீன்கள் உடன்படாத மூன்றாவது கருத்து ஒன்றை வெளிப் படுத்துவது ஏற்றுக்கொள்ளப்படவில்லை."

ஒருவர் 2 அல்லது 3 அல்லது 4 மதுஹபுகளை பின்பற்றி ஒரு வணக்கத்தை செய்கிறார் எனின் அவர் ஒன்றுக்கொன்று மதுஹபுகளுடன் உடன்படவில்லை மற்றும் இஜ்மஃவுக்கு கீழ்ப்படியாமை என்பதால் அவரின் வணக்கம் எந்த மதுஹபிலும் ஸஹீஹ் இல்லை. வேறு வார்த்தைகளில் கூறுவதானால், **தல்ஃபிக்** அனுமதிக்கப்படாது. காசிம் இப்னு கத்லுபகா அவரது **அத்-தாஷிஹ்** எனும் நூலில் எழுதுகிறார்: இரண்டு வெவ்வேறு இஜ்திஹாதுகளைப் பின்பற்றுவதன் மூலம் வணக்கவழிபாட்டின் ஒரு செயலைச் செய்வது ஸஹீஹ் அல்ல என்று ஏகமனதாக கூறப்பட்டுள்ளது. இந்த காரணத்திற்காக, ஒரு நபர், வுளூ செய்யும் போது, அவரது ஈரமான கைகளை அவரது தலைக்கு மேல் முழுதாக தேய்த்துக் கொள்ளாவிட்டால், ஒரு நாய் அவரைத் தொட்ட பின்னர் அவர் தொழுகையை செய்தால், அவரது தொழுகை ஸஹீஹ் ஆகாது (செல்லுபடியாகாது).

[1] ஹௌத் கபீர் 'குறைந்தது 25 சதுர மீட்டர் பெரிய குளம்; குல்லாத்தைன், 217.75 கிலோகிராம்.

ஷாபிஈ மதுஹபு அறிஞரான ஷிஹாபுத்தீன் அஹ்மத் இப்னு அல்-இமாத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களின் "**தவ்கீப் அல் ஹுக்காம்**"இல் அந்த தொழுகை ஒருமித்த கருத்துப்படி தவறாக இருக்கும் என்று கூறுகிறார்கள். இமாம் மாலிக் மற்றும் இமாம் ஷாபியின் 'ரஹ்மத்துல்லாஹி தஆலா அலைஹும், அவர்களின்படி அத்தகைய நபரின் வுழுவும் சரியாகாது, தொழுகையும் செல்லுபடியாகாது. ஏனெனில் அவர் தனது தலையும் முழு பகுதியையும் தனது ஈரமானகையினால் மஸ்ஹு செய்யவில்லை. அது இமாம் மாலிகியின்படி வுளுவின் பர்ழுகளில் ஒன்று அது அவரின் வுழுவை செல்லுபடி இல்லாமல் ஆக்கிவிட்டது. இமாம் ஷாபியின் படியும் அது செல்லுபடியற்றது.

ஹனபி அறிஞர் முஹம்மது அல் பக்தாதி தனது **தக்லீது** எனும் நூலில் எழுதுகிறார்கள்கள் வேறு ஒரு மதுஹபை பின்பற்றுவதற்கு மூன்று அடிப்படை நிபந்தனைகள் உள்ளன: முதலாவது இது இப்னு ஹூமாம் அவர்களின் **தஹ்ரீஹ்** என்னும் நூலிலும் எழுதப்பட்டுள்ளது, தனது வழக்கமான மதுஹபின் படி ஒரு இபாதத்தை தொடங்கும் ஒருவர் இன்னொரு மதுஹபின் படி அதை மதுஹபின் படி அதை முடிக்க முடியாது. உதாரணமாக வுழுவை ஹனபி மதுஹபின்படி செய்யும் ஒருவர் சாபிஈ மதுஹபின்படி, அவ்வுழுவுடன் தொழுவதற்கு முடியாது.

இரண்டாவது இப்னு ஹமாமின் **தஹ்ரீரில்** அஹமதிப்னு இத்ரீஸ் அல் கறாபி அவர்களை மேற்கோள்காட்டி கூறப்பட்டுள்ளது. ஒருவர் செய்யும் வணக்கம் அவர் பின்பற்றும் இரண்டு மதுஹபின் படியும் செல்லுபடியாகாது என்று மதிப்பிட முடியாது. ஷாபிஈ மதுஹபின் படி வுளு செய்த ஒருவர் தேவையான பகுதியி மஸ்ஹு செய்யவில்லை , இன்னும் ஒரு மணமுடிக்க ஆகுமான பெண்ணை தொடுகிறார் மாலிகி மதுஹபில் தனது வுளு முறியாது என்ற எண்ணத்தில் பின்னர் நிறைவேற்றுகின்ற தொழுகை இரண்டு மதுஹபின் படியும் ஸஹீஹ் இல்லை செல்லுபடியாகாது.

மூன்றாவது நிபந்தனை: ஒருவர் மதுஹபுகளுக்கிடையில் ருக்சாஸ்[1]தேடக்கூடாது. இமாம் அன்-நவவி மற்றும் பல அறிஞர்கள் இந்த நிபந்தனையை வலியுறுத்தியுள்ளனர். இப்னு ஹுமாம் இந்நிபந்தனையை குறிப்பிடவில்லை. ஹசன் அஸ் சர்ம்பலாலி அவர்கள் தனது **அல்-இக்தல்-பரீதில்** எழுதியுள்ளார்கள், ஹனஃபி மதுஹபைப் பின்பற்றுவதன் மூலமாக இன்னும் பருவமடையாத சோடிக்கு **வலி**யின் (இருவரினதும் பாதுகாவலர்) முன்னிலையின்றி நிகழ்த்தப்படும் நிகாஹ்வும், அல்லது மாலிகீ மதுஹபைப் பின்பற்றுவதன் மூலம் கண்-சாட்சிகள் இன்றி நிகழ்த்தப்படும் நிகாஹ்வும் சஹீஹாக இருக்கும். இருப்பினும், பாதுகாவலர் மற்றும் கண்-சாட்சிகள் இருவரின் இல்லாமலும் நிகழ்த்தப்பட்ட நிகாஹ் சஹீஹாக இருக்காது. ஏனென்றால், சாதாரண மக்களிடையே மூன்றாவது நிபந்தனையை அதாவது அவசரத்தேவை (தரூறா)[2] இல்லாதபோது வேறு மதுஹபைப் பின்பற்றி அப்படிச்செய்வது தடுக்கப்பட்டுள்ளது. இது மிகவும் கடினமாக இருக்கும், ஒரு உலமாவிடம் (அறிஞரிடம்) கேளாது இப்படிச் செய்வது சஹீகாணதல்ல என்று கூறப்படுகிறது. (இத்துடன் முஹம்மத் அல் பக்தாதியை மேற்கோள் காட்டியது முடிவடைகிறது.)

---

[1] வணக்கங்கள் செய்வதற்கு எளிதான வழிகள், எதிராக 'அஸிமாத்கள்' கடினமானவை ஆனால் சிறந்த வழிகள். முடிவில்லாத பேரின்பத்தின் ஆறாவது பாசிக்கலின் பதினேழாம் அத்தியாயத்தைப் பார்க்கவும்.

[2] தாரூரத் என்பது ஒரு பர்லான வணக்கம் ஒன்றை செய்வதற்கு தடையான ஒரு நிலைமை. தனது மதுஹபின்படி அதை விடுவது ஹராம். இந்த நிலைமையில் தவிர்க்க முடியாதது.

இஸ்மாயீல் அன் நபுளிசி ரஹ்மதுல்லாஹி த ஆலா அலைஹி "**அத் துறர்**" என்னும் நூலிற்கு விமர்சனம் எழுதும்போது **அல்-இக்துல்-பரீதை** மேற்கோள் காட்டி கூறுகின்றார். "ஒரு மனிதர் தனது மதுஹபை மட்டும் பின்பற்றிக்கொண்டு இருக்கவேண்டியதில்லை. நீங்கள் மற்ற மதுஹபுகளை பின்பற்றியும் வணக்கங்களை செய்யலாம். அப்போது அந்த மதுஹபில் அந்த

வணக்கத்துக்கு தேவையான அனைத்து நிபந்தனைகளையும் கடைப்பிடிக்க வேண்டும். ஒன்றுடன் ஒன்று தொடர்பில்லாத இரண்டு வணக்கங்களை இரண்டு விதமாக இரண்டு மதுஹபுகளை பின்பற்றி நிறைவேற்றலாம்." மற்ற மதுஹபை பின்பற்றும் போது கடைபிடிக்க வேண்டிய நிபந்தனைகள் (தல்பிக்) மதுஹபுகளை இணைப்பது சரியில்லை(சஹிஹ் இல்லை) என்பதை தெளிவு படுத்தும்.

அப்துர் ரஹ்மான் அல் ஹிமாதி ரஹ்மதுல்லாஹி த ஆலா அலைஹி தனது **அல் முகத்திமா** என்னும் கிதாபில் கூறுகிறார் ஒருவர் தனது அவசரத்தேவை இருக்குமாயின் (தரூறத்) தனது வழக்கமான மதுஹபை விட்டு மற்றைய மூன்று மதுஹபில் ஒன்றைப் பின்பற்றலாம் ஆனால் அந்த மதுஹபில் இபாதத்துக்கான எல்லா நிபந்தனைகளையும் நிறைவேற்ற வேண்டும். உதாரணமாக ஒரு ஹனபி, சாபிஈ மதுஹபைப் பின் பற்றி ஒரு குல்லத்தைனுக்கு அதிகமான நஜீஸ் படாத தண்ணீரைக்கொண்டு வுழுச் செய்யும் போது நிய்யத் செய்யவேண்டும். ஒழுங்கு முறைப்படி குறிக்கப்பட்ட உறுப்புக்களைக் கழுவுதல் வேண்டும். இமாமுக்குப் பின்னின்று தொழும்போது பாத்திஹா சூரா ஓதவேண்டும். தஹ்தீல்-அல்-அரகான் எல்லாவற்றையும் கட்டாயம் நிறைவேற்ற வேண்டும். அவர் இப்படி முழுவதையும் செய்யாவிட்டால் அவர் தொழுகை சஹீகாணதல்ல என்று எல்லா அறிஞர்களாலும் (இமாம்களாலும்) ஏகமனதாகக் கூறப்பட்டுள்ளது. அவர்களுக்கு மற்றைய மதுஹபை பின்பற்றுவதற்கு 'தரூறத்' கட்டாய தேவையிருக்க வேண்டும் என்பது மேலதிகமானது, என்று குறிப்பிடுகின்றார். தரூறத் என்பதன் மூலம் அவர் பின்பற்றவேண்டியதன் அவசியத்தை குறிப்பிடுவதாகவும், அதிகமான அறிஞர்களின் தீர்மானத்தின்படி ஒருவர் ஒரே மதுஹபைப் பின்பற்றுவது அவசியமில்லை என்றும் கூறுகிறார். ஒருவர் கஷ்டமான(ஹரஜ்) நிலை வரும்போது இன்னொரு மதுஹபை பின்தொடரலாம் என்றும் கூறுகிறார். மேலே கூறப்பட்டவைகளிலிருந்து எல்லா மதுஹபுகளையும் ஒன்றிணைப்பது (தல்பிக்) என்பது முடியாது. சஹீஹ்அல்ல.

இப்னு ஹுமாமின் **தஹ்ரீரி**ல் தல்பீக் செய்வது சரியானது என்று எந்த இடத்திலும் காணப்படவில்லை. முஹம்மது அல் பக்தாதியும், இமாம் அல்-மனாவியும் இப்னு ஹமாம் தனது பத் அல் கதிரில் "இஜ்திஹாது கொண்டு ஒருவர் தனது மதுஹபிலிருந்து வேறு ஒரு மதுஹபுக்கு மாறுவது அல்லது ஒரு ஆதாரத்துக்கு மாற்றுவதும் பாவமாகும் என்று எழுதியுள்ளதாகக் கூறுகிறார்கள். இவர்களை தசீர் தண்டிக்க வேண்டும் அல்லது
எச்சரிக்கை செய்யவேண்டும் அல்லது தண்டிக்க வேண்டும் எனக் கூறப்படுகிறது. இஜ்திஹாதில்லாமல் ஆதாரம் இல்லாமல் மாறுவது மிகக் கேடானது. மாறுவதென்பது வேறு ஒரு மதுஹபைக்கொண்டு ஒரு இபாதத்தை செய்வது எனப்பொருள்படும். ஒருவர் மாறிவிட்டேன் என்று மட்டும் சொல்லி அவர் மாற முடியாது. இது உறுதியளிப்பது மாறுதலில்லை. அவர் அப்படி சொன்னாலும் அவர் மற்ற மதுஹபுக்கு மாற வேண்டியதில்லை. "**உனக்கு தெரியாததை தெரிந்தவர்களிடம் கேட்டுக்கொள்**" என்ற குர்ஆன் ஆயத்தின்படி அறிந்தவர்கள் என்பது இஸ்லாத்தின் சட்டங்களை மிக உறுதியாகத் தெரிந்த அறிஞர்களிடம் கேட்கும்படி உங்களுக்கு கட்டளையிடப்படுகிறது. இந்த அறிஞர்கள் மதுஹபுகளிளிருந்து

இலகுவானவைகளை (ருக்சாவை) ஒன்று சேர்ப்பதை தடை செய்வதற்காக மதுஹபுகளுக்கு மாறுவதை தடை செய்கின்றனர். பல அறிஞர்களின் நிலைப்பாடு எல்லா முஸ்லிம்களும் இஜ்திஹாதைப் பின்பற்றமுடியும் என்பதுதான் அது பல வித்தியாசமான விடங்களில் அவர்களுக்கு இலகுவாயிருக்கும்".

ஒரு அறியாதவர் இப்னு ஹூமாம் அவர்களின் கடைசி வசனம் மதுஹபுகளின் ஒன்றிணைப்பு சஹீஹானதெனக் கூறுவதாக சொல்வாராயின் அவரது ஆய்வு பிழையானது. ஏனெனில், அந்த கூற்று ஒருவரின் ஒரு செயல் தனி ஒரு மதுஹபை பின்பற்றியே செய்யப்படவேண்டும் என்று கூறுகின்றது பல மதுஹபுஹளை பின்பற்றி அல்ல. மதுஹபுகளைச் சாராத சீர்திருத்தவாதிகளும் இதை உணரமுடியதவர்களுக்கும் இப்னு ஹூமாமை இந்த விடயத்தில் அவர்களுக்குரிய சாட்சியாக பிழையாக முன் வைக்கின்றனர். மாறாக, இப்னு ஹூமாம் தனது **தஹ்ரீரி**ல் மதுஹபுகளில் ஒன்றிணைப்பு சஹீஹல்ல அனுமதிக்கப்பட்டதல்ல என்று தெளிவாக குறிப்பிடுகிறார்கள்.

இன்று சமய சீர்திருத்தவாதிகள் இப்னு நுஜைம் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் எழுதியதை தல்பீக்கின் அனுமதிக்கு உதாரணம் காட்டுகிறார்கள். அதில் கூறப்படுகின்றது: காதி-கான் இனால் வெளியிடப்பட்ட பத்வாவில் எழுதப்பட்டதாக கூறப்படுகிறது; ஒரு வக்பு செய்யப்பட ஒரு துண்டு நிலம் மிதமிஞ்சிய அதிக விலைக்கு (கபான்பாஹிஷ்) விற்கப்படுமையின் அபூ யூஸுப் ரஹ்மதுல்லாஹி அலைஹியின்படி அது நீதியற்றது. ஆனால் இமாமுல் அஃலத்தின் ரஹ்மதுல்லாஹி அலைஹி சட்டப்படி மிதமிஞ்சிய[1] விலைக்கு ஒரு புனிதச் சொத்தை உத்தியோகபூர்வமாக விற்பது ஆகுமானதாகும். ஆகவே இரண்டு இஜ்திஹாதும் வக்பு சொத்தை விற்பதற்கு ஒன்றுபடுகின்றன. இருந்த போதிலும் இந்த உதாரணத்தில் தல்பிக் என்பது அதே மதுஹபில் மாத்திரமே நடைபெறுகிறது. இரண்டு மதுஹப்களின் தீர்ப்புகளும் ஒரே உஸுலில் இருந்து வந்தவையாகும். இரண்டு மதுஹப்களின் தல்பிக் என்பது இவ்வாறல்ல. அடுத்த உதாரணம் இப்னு நுஜைம் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களை மேற்கோள் காட்டுவது. இவர்கள் இரண்டு மதுஹபுகளை தல்பிக் செய்வதுஅனுமதிக்கப்பட்டது என்று அவர்கள் கூறவில்லை.

"ஒரு தொழுகைக்கு இமாமத் செய்ய வரும் நபர் அவருடைய ஜமாஅத்தில் வேறு மதுஹபை சார்ந்தவர்களும் உள்ளனர் எனின் அவர் மற்றைய மதுஹபின் விதிகளையும் கடைப்பிடிக்க வேண்டும் என்று கன்ஸ்[2] எனும் நூலிற்கு அவர்கள் எழுதிய பஹ்ர்-உல்-றாயிக் என்ற விவரணத்தில் வந்துள்ளது. இத்துடன் எங்களுடைய க்ஹுலாஸ-துத்-தஹ்கீக் என்ற நூலின் இறுதி மொழிபெயர்ப்பை முடித்துக் கொள்கிறோம்.

முஹம்மது அப்துர் ரஹ்மான் அஸ்-சில்ஹதீ ரஹ்மாதுல்லாஹி த ஆலா அலைஹி அவர்கள் இந்தியாவின் அறிஞர்களில் ஒருவர். இந்தியாவின் அறிஞர்களில் ஒருவர் அவர்கள் பார்சி மொழியில் சைப்-அல்- அப்ரார் அல்-மஸ்லுல்-அலல் fபுஜ்ஜார் என்ற நூல்களை எழுதியுள்ளார்கள். அவர்கள் மிஸ்காத் என்ற நூலுக்கு எழுதிய விவரணத்தில் "இலகுவாக்கிக்கொள்ளுங்கள்! கடினமாக்காதீர்கள்" என்ற ஹதீதை

விவரிக்கும்போது அல்லாமா ஹாபிஸ் ஹசன் இப்னு முஹம்மத் அத் தய்யிபி [3] ரஹ்மாதுல்லாஹி த ஆலா அலைஹி கூறுகிறார்கள். மதுஹபுகளில் இலகுவான வழிகளை தெரிவு செய்யும் ஒருவர்

______________________________

[1] Endless Bliss இன் 5ஆம் பகுதி 44 ஆம் பக்கத்தில் "வக்fப்" என்ற பகுதியை பார்க்கவும். 30அம் பக்கத்தில் "கபான் பாஹிஸ்" ஐ பார்க்கவும். இஸ்லாமிய சீர்திருத்தவாதிகள் என்ற நூல்அவர்களை பற்றி விளக்குகிறது.

[2] க்ஹுலாஸ-துத்-தஹ்கீக் இறுதி அத்தியாயம்

[3] அத் தய்யிபி டமாஸ்கசில் 743(1343 A.D.) மறைந்தார். இந்நூலின் முதலாவது பதிப்பு இந்தியாவில் வெளியிடப்பட்டது.1300(1882 A.D)

zஜிண்டீக் ஆகிவிடுகிறார் என்று கூறியுள்ளார்கள். சுருக்கமாக, மேலே எழுதப்பட்டுள்ளவை களிலிருந்து நாம் விளங்கிக்கொள்வது

1. ஒவ்வொரு முஸ்லிமும் இபாதத்துகளை செய்யும்பொழுது நான்கில் ஒரு மதுஹபை கட்டாயம் பின்பற்றவேண்டும். நான்கு மதுஹபுகளை விட்டும் வேறு எந்த அறிஞர்களையும் பின்பற்றுவது அனுமதிக்கப்படவில்லை.
2. ஒவ்வொரு முஸ்லிமும் தனக்கு விருப்பமான இலகுவாக பின்பற்றக்கூடியதாக இருக்கும் நான்கில் ஒரு மதுஹபை பின்பற்றலாம். அவர் ஒரு இபாதத்தை ஒரு மதுஹபின் படியும் வேறொரு இபாதத்தை வேறு மதுஹபின் படியும் செய்யலாம்.
3. ஒன்றைவிட மேலதிக மதுஹபுகளின்படி ஒரு இபாதத்தைசெய்யும் பொழுது: அந்த இபாதத்தின் பூரணத்துவத்திற்கும் அது ஏற்றுக்கொள்ளப் படுவதற்கும் இந்த மதுஹபுகளில் ஒன்றின் அந்த அமலுக்குரிய எல்லா நிபந்தனைகளையும் நிறைவேற்றுவது அவசியம். அப்படி செய்வது தக்வாவுடைய மனிதனுக்கு மிகச் சிறந்ததாகும். இபாதத்தை செய்ய அந்த மதுஹபை பின்பற்றியது தக்லீத் என்றும் இன்னும் மற்றைய மதுஹபுகளின் நிபந்தனைகளையும் கடைப்பிடித்தல் சிறந்தது. வேறொரு மதுஹபைப் பின்பற்றும் போது அதன் எல்லா நிபந்தனைகளும் நிறைவேறுமாயின் அது அனுமதிக்கப்பட்டுள்ளது. ஒருவர் செய்யும் இபாதத் எந்த மதுஹபின்படியும் ஸஹீஹ் இல்லை ஆயின் அது தல்பீக் என அழைக்கப்படும். அது ஒரு பொழுதும் அனுமதிக்கப்படவில்லை
4. ஒருவர் தான் தெரிந்தெடுத்த மதுஹபையே எப்பொழுதும் பின்பற்ற வேண்டியதில்லை. ஒருவர் தான் விரும்பும்போதும் அவசியம் ஏற்படும்போதும் போது வேறு மதுஹபுக்கு மாறலாம். அவர் அப்படிச் செய்யும்போது அம்மதுஹபின் பிக்ஹுக் கல்வியைக் அம்மதுஹபின் இல்முல்-ஹால் நூல்களிலிருந்து கற்கவேண்டும். ஆகவே, ஒருவர் ஒரே மதுஹபையே பின்பற்றுவதும் அவருக்குப் போதுமானதாகும். ஒருவர் மற்ற மதுஹபுக்கு மாற்றிக்கொள்வது அல்லது சில செயலுக்காக மாற்றிகொள்வது கஸ்டமானது. அவசிய தேவைக்காக(ஹரஜ்) மட்டும் மாற்றிக்கொண்டு அதன் நிபந்தனைகளை பூர்த்தி செய்வது அவசியம்.

மற்றைய மதுஹபின் பிக்ஹு கல்வியை கற்றுக்கொள்வது கஸ்டமானது என்ற காரணத்தால் பிக்ஹின் அறிஞர்கள் அறியாதவர்கள் மற்றைய மதுஹபை பின்பற்றுவதை தடுத்தனர்.

உதரணத்திற்கு ; பஹ்ர்-அல்-பத்வா என்ற நூலில் எழுதப்பட்டுள்ளது;

ஹனாஃபி மதுஹபில் உள்ள ஒரு நபருக்கு தொடர்ச்சியாக இரத்தப்போக்கு உள்ள ஒரு காயம் இருந்து, ஒவ்வொரு தொழுகை நேரத்திலும் அவருக்கு வுளு செய்வது கடினம் என்றால், இந்த மதுஹபின் நிபந்தனைகளை கடைபிடிக்காமல் ஷாபிஃஈ மதுஹபில் பரிந்துரைக்கப்பட்டுள்ளபடி தொழுவதற்கு அவருக்கு அனுமதி இல்லை. "தசீர்" பற்றிய அத்தியாயத்தில் இப்னுஆபிதீன் இதை விரிவாக விளக்குகிறார்கள். அறியாதவர்களின் வணக்கத்தை பெறுமதியற்றதாக மாறுவதிலிருந்து பாதுகாப்பதற்காக, அஹ்லுஸ்-சுன்னா அறிஞர்கள் 'ரஹ்மத்துல்லாஹி த'ஆலா' அலைஹிம் அஜ்மஈன்கள் ஹரஜ் (சிரமம்) நிலைமை தவிர மற்றொரு மதுஹபை பின்பற்ற அனுமதிக்கவில்லை.

அத்-தஹ்தாவி எழுதுகிறார்: "தஃப்ஸரின் சில அறிஞர்கள் கூறுகையில், சூரா ஆல இம்ரானின் 103ஆவது ஆயத்தில் **'அல்லாஹு த'ஆலாவின் கயிற்றைப் பிடித்துக் கொள்ளுங்கள்**,' அதாவது, 'ஃபுகஹாக்கள் சொல்வதைப் பிடித்துக் கொள்ளுங்கள்'. ஃபிக்ஹு நூல்களை பின்பற்றாத மக்கள் வழி தவறி விடுவார்கள், அல்லாஹுத்த ஆலாவின் உதவியையும் இழந்துவிடுவார்கள், மேலும் நரகத்தின் நெருப்பில் எரிக்கப்படுவார்கள். விசுவாசிகளே! இந்த ஆயத் பற்றி சிந்தியுங்கள், **அஹ்லுஸ் ஸுன்ன வல் ஜமா அத்துடன்** இணைந்து கொள்ளுங்கள். அவர்கள் நரகத்திலிருந்து காப்பாற்றப் படுவார்கள் என்ற நற்செய்தி வழங்கப்பட்டவர்கள். அல்லாஹுத்த ஆலாவின் கருணையும் உதவியும் இந்த குழுவில் உள்ளவர்களுக்கு மட்டுமே கிடைக்கும். இந்த பிரிவில் இல்லாதவர்களை அல்லாஹுதஆலா நரகத்தில் வேதனை செய்வான். இன்று, அஹ்லுஸ் ஸுன்னாவில் இருப்பதற்கு நான்கு மதுஹப்களில் ஒன்றைப் பின்பற்ற வேண்டியது அவசியமாகும்; நான்கு மதுஹப்களில் ஒன்றைப் பின்பற்றாத ஒருவர் பித்அதில் உள்ளார். அவர் நரகத்திற்குச் செல்வார்."[1] நான்கு மதுஹப்களின் சுலபமான வழிகளைச் சேகரித்த ஒருவர் நான்கு மதுஹப்களில் எவரையும் பின்பற்றியிருக்க மாட்டார்.

மேல் குறிப்பிட்டபடி, நான்கு மாதாப்களில் எதையும் பின்பற்றாத ஒருவர் ஒரு 'லா-மத்ஹபி'. நான்கு மத்ஹப்களை 'தல்பிக்கை'(இணைத்து) உருவாக்கும் ஒரு நபரும் அதாவது, நான்கு மதுஹப்களை கலப்பதன் மூலம் அவருக்கு எளிதாக வரும் முறையின்படி செயல்படுபவர், அவரும் ஒரு லா-மத்ஹபியே. மேலும், நான்கு மாதாப்களில் ஒன்றைப் பின்தொடர்பவர், ஆனால் அஹ்லுஸ்-சுன்னாவுக்கு ஒத்துப்போகாத ஒரு கொள்கையை வைத்திருப்பவரும் லா-மத்ஹபியே. இந்த மூவரும் சுன்னிகள் அல்ல, அவர்கள் மதங்களுக்கு எதிரான கொள்கைகளை (ளலாலா) பின்பற்றுபவர்கள்.

உண்மையான முஸ்லிம்கள் நான்கு மாதாப்களில் ஒன்றை பின்பற்றுபவர்கள் சரியான வழியில் உள்ளவர். வேறுவிதமாகக் கூறினால், அவர்கள் சுன்னி முஸ்லிம்களாக ஆகிவிடுகிறார்கள். நான்கு மதுஹபுகளும் ஒரே நம்பிக்கை கோட்பாடுகளை பகிர்ந்து கொள்கிறார்கள். அவற்றில் சில சிறிய வேறுபாடுகள் இருப்பது அல்லாஹுத் ஆலா வின் மகத்துவத்தின்

பலன்கள். ஒவ்வொரு முஸ்லீமும் தனக்கு எளிதாகக் காணும் நான்கு மாதாப்களில் ஒன்றைத் தேர்வு செய்யுங்கள்.

---

[1] அத் தஹ்தாவியின் துர்ருல் -முக்தாருக்குரிய வர்ணனை பிரிவு,

## 2. அஹ்லுஸ் ஸுன்னா நம்பிக்கை

எனது புகழ்ச்சியை(ஹம்து) அல்லாஹு தஆலாவுக்கு தெரிவித்து பின்வரும் வரிகளை தொடங்குகிறேன். ஹம்து என்பது அல்லாஹுதஆலா ஒருவன்தான் எல்லாவிதமான அருட்கொடைகளையும் படைத்து எங்களுக்கு அளிக்கின்றான் என்று நம்புவதும், இவற்றை கூறுவதுமாகும். அருட்கொடை என்பது எங்களுக்கு பியோசனமானவை. ஷுகுர் (நன்றிதெரிவிப்பது) என்பதுஅவனுடைய அருட்கொடைகளை அஹ்காமல் இஸ்லாமிய்யாவுக்கு பொருத்தமான வழியில் அவற்றை உபயோகப்படுத்துவது. (அவனது கட்டளைகளும், அவனால் தடுக்கப்பட்டதும்.) அருட் கொடைகள் பற்றி அஹ்லுஸ் ஸு ன்னா அறிஞர்களின் நூல்களில் எழுதப்பட்டுள்ளன. அஹ்லுஸ் ஸு ன்னா அறிஞர்கள் என்பவர்கள் நான்கு மதுஹபுகளையும் சேர்ந்த அறிஞர்கள்.

பேரறிஞர் இமாம் கஸ்ஸாலி(ரஹ்) அவர்கள் தன்னுடைய **கீமியா-அஸ்-ஸஆதத்** என்னும் நூலில் பின்வருமாறு கூறுகின்றார்கள். "லாயிலாஹ் இல்லள்ளாஹு முஹம்மதுர் ரஸுலுள்ளாஹ்" என்னும் வாக்கியத்தை அறிவதும் அதன் கருத்தை முதலில் நம்புவதும் முஸ்லிம்கள் மீது கட்டைய கடமையாகும் (பர்ளாகும்) இவ்வக்கியத்தொடர் கலிமாத் தௌஹீத் எனப்படும். ஆகவே ஒவ்வொரு முஸ்லிமும் இவ்வாக்கியத்தை எவ்வித சந்தேகமுமின்றி நம்புவது போதுமானது. ஆனால் அதனை நிரூபிப்பதோ மனதை திருப்திப்படுத்துவதோ கட்டாயமல்ல. ரஸுலுள்ளாஹ் ஸல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்கள் அரபிகளுக்கு இதற்கான ஆதாரங்களை அறிய வேண்டுமென்றோ சந்தேகங்களை ஆராய்ந்து தீர்க்க

வேண்டுமென்றோ கட்டளையிடவில்லை. இதை சந்தேகமின்றி நம்புங்கள் என்றே கூறினார்கள். இதை ஒவ்வொருவரும் மேலோட்டமாக நம்பிக்கை கொள்வது போதுமானது. இன்னும் ஒவ்வொரு ஊரிலும் ஒவ்வொரு மார்க்க அறிஞர்கள் இருரிப்பது பர்ளுகிபாயாவாகும். இம்மார்க்க அறிஞர்கள் மக்களின் சந்தேகங்களை அகற்றுவதற்கும் கேள்விகளுக்கு விடை காணுவதற்கும் தீர்வுகளை அறிந்திருக்க வேண்டியது வாஜிபாகும். இவர்கள் முஸ்லிம்களுக்கு வழிகாட்டியவர்கள். ஒரூபுறம மக்களுக்கு ஈமனைப்ப்றிய அறிவைப் போதிப்பதுடன் மறுபுறம் இஸ்லாத்தினது எதிரிகளின் அபாவதங்களுக்கு தக்க பதிலளித்துக் கொண்டிருப்பார்கள்.

திருக்குர்ஆன் கலிமா தௌஹீதின் பொருளை பஹிரங்கப்படுத்திக் கொண்டிருக்கிறது. மேலும் ரஸூலுள்ளாஹ் ஸல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்கள் குர்ஆனில் அதைப்பற்றி என்ன கூறப்படுள்ளது என்பதை விளக்கினார்கள். இவ்வாக்கியத்தை பற்றி சரியான பொருளை சகல சஹாபாக்களும் ரஸூலுல்லாவிடம் கற்றார்கள் பின் அதை பின்னால் வந்தவர்களுக்கும் அறிவித்தார்கள். அதே சஹாபாக்கள் எப்படி வழிகாட்டினார்களோ அதுபோன்று மேன்மை யுடைய இமாம்களும் அவர்களுடைய பாரிய நூல்களின்(கிதாபுகள்) மூலம் எவ்வித மாற்றமுமின்றி அறிவித்தார்கள். அவர்கள் அஹ்லுஸ்ஸுன்னத் அறிஞர்கள் என அழைக்கப்படுகிறார்கள். ஒவ்வொருவரும் அஹ்லுஸ்ஸுன்னத் வழிமுறை இஃதிகாதை கற்று ஒருவருக்கு ஒருவர் அன்பு செலுத்தி ஒற்றுமையுடன் வாழவேண்டும். இவ்வழிமுறையே மகிழ்ச்சிக்கு (பேரின்பத்துக்கு) மூலவித்துக்களாகின்றன. அஹ்லுஸ்ஸுன்னா இமாம்கள் கலிமாத் தௌஹீதுக்கு பின்வருமாறு விளக்கம் கொடுத்துள்ளார்கள். மனிதஇனம் தானாகவே உண்டானவையல்ல அவை பின்னர் படைக்கப்பட்டவை. மனிதனுக்கு ஒரு சிருஸ்டிகருத்தா இருக்கிறான். அவன்தான் மற்ற எல்லா உயிர்களையும், உயிரற்றவைகளையும் சிருஸ்டிக்கின்றான். அவன் ஒருவன் அவனுக்கு இணை துணையில்லை. அவன் எப்பொழுதும் இருப்பவன் நிலையானவன்.

அவனுடைய தோற்றத்துக்கு ஆரம்பமோ முடிவோ இல்லை. அவன் எப்பொழுதும் இருக்கின்றான். அவனுக்கு ஆரம்பமோ முடிவோ இல்லை. அவனது நிலைப்பாடு தவிர்க்கமுடியாததும் அவசியமானதும் ஆகும்.. அவனுடைய நிலைப்பாட்டுக்கு முடிவொன்று இல்லை. அவன் தன்னில் தானே நிலையானவன். அவன் எதிலும் தேவையற்றவன். ஆனால் அவனில் தேவைப்படாதது ஒன்றும் இல்லை.

அவன் ஒவ்வொன்றையும் படைத்து உயிரளிக்கின்றான். அவன் உருவமற்றவன் அவன் அளக்கப்படமுடியாதவன். அவனுக்கென்று ஒரு இடமில்ல. அவன் எந்த வடிவுமில்லை. அவன் எப்படி இருப்பான் என்று கேட்கப்படமுடியாதவன். நாம் அவன் என்று சொல்லும்போது நமது மனதில் தோன்றும் எல்லா எண்ணங்களும், பொருட்களும் அல்லது எமது கற்பனையிற் தோன்றுகின்றவை அனைத்தும் அவன் அல்ல. அவன் அவைகளைப் போன்றவனுமல்ல. அவையனைத்தும் அவனது படைப்பினங்கள். அவன் அவனுடைய படைபினங்களைப் போன்றவனல்ல. அவனே மனதில் உண்டாகும் கற்பனைகளையும் மாய தோற்றங்களையும்

உண்டாக்குபவன். அவன் மேலோ , கீழோ,பக்கத்திலோ என்றில்லாதவன் அவனுக்கென்று ஒரு இடமில்லை. எல்லாம் அரஸுக்குக் கீழ் உள்ளன. அர்ஸு என்பது அவனின் அதிகாரத்திற்கும் சர்வ வல்லமைக்கும் கீழுள்ள ஒன்றாகும். அவன் அர்ஸுக்கு மேல் உள்ளவன். அப்படியன்றால் அர்ஸு அவனை தாங்கிக்கொண்டிருகிறது என்பது அர்த்தமல்ல. அர்ஸானது அவனது விருப்பின் பேரிலும் சர்வ வல்லமையின் பேரிலும் நிலைத்துள்ளது. அவன் அழிவில்லாதவனாக இருக்கிறானே அதேபோலவே ஆதி அந்தமுமில்லா தவனாகவும் இருக்கிறான். அவன் அர்சை படைக்குமுன் எவ்வறிருந்தானோ அது போலவே இப்பொழுதும் இருக்கிறான். அவனில் எவ்வித மாற்றமும் நடைபெறுவதில்லை.

அவனுக்கு **சிபத்து தபூத்திய்யா** என்னும் எட்டுப்பண்புகள் உள்ளன. அவை:- 1. **ஹயாத்** (ஜீவன்) 2. **இல்மு** (சர்வ அறிவு) 3**. ஸம்உ** (கேழ்வி) 4. **பஸர்** (சூட்சும அறிவு கொண்ட பார்வை) 5. **குத்றத்** (சர்வ வல்லமை) 6. **இறாதா** (தத்துவம்) 7.**கலாம்** (பேச்சு) 8.**தக்வின்** (படைப்பாற்றல்).அவனின் இந்த பண்புகளில் எந்தவித மாற்றமும் நிகழ்வதில்லை. அவனில் எவ்வித குறைபாடும் ஏற்படுவதில்லை. அவன் அவனது படைப்புகளை ஒத்திருக்கமாட்டான். இவ்வுலகில் அவனை எந்த அளவுக்கு அறியப்படுத்துகிறானோ அந்த அளவுக்கு அவனை அறிய முடியும். மறுமையிலும் அவன் அவனை தெரியப்படுத்தும் போது பார்க்கக்கூடியதாகும். இங்கு அவன் எப்படிப்பட்டவன் என்று உணராமல் அறியப்பட்டவனாக இருப்பதுபோல் அங்கு அவன் விவரிக்க முடியாதளவு காணப்படுவான். [ தயவு செய்து மிகப்பெரிய அறிஞரும் வலியுமான இமாம் ரப்பானி முஜத்தித் அல் அல்பி தானி அஹமத் பாரூக்கி சர்ஹந்தி ரஹ்மாதுல்லாஹி த ஆலா அன்ஹு அவர்களின் மிகச்சிறந்த ஆக்கம் **மக்தூபாத்** 1வது பாகம் 46ஆம் பக்கம் பார்க்கவும்] அதன் துருக்கிய மொழியில் வெளிவந்த அருள்பொதிந்த அத்தியாயம் Endless Bliss இன் 2 ஆம் பாகம் 26வது அத்தியாயத்தை பார்க்கவும்.]

அல்லாஹ் அவனுடைய தூதர்களை மனித இனத்துக்கு அனுப்பினான். அல்லாஹ் அத்தூதர்களின் மூலம் சில செயல்கள் இன்பத்தையும் சில செயல்கள் துக்கத்தையும் கொண்டுவரும் என்று அறிவித்தான். இவ்வாறு அனுப்பப்பட்ட தூதர்களில் இறுதியானவர் ஹஸரத் முஹம்மது நபி ஸல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்களாகும். அவர்கள் அகிலத்திலுள்ள எல்லோருக்கும் நபியாக அனுப்பப்பட்டார்கள். உலகிலுள்ள பக்தியுள்ள, பக்தியற்றவர்களுக்கும் பூமியில் எல்லாத் தேசத்துக்கும் நபியாக அனுப்பப்பட்டார்கள். ரசூல் ஸல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்கள் மனிதன், ஜின்கள் எல்லாவற்றுக்கும் நபியவார்கள். உலகிலுள்ள மூலைமுடுக்கிலுள்ள ஒவ்வொருவரும் ரசூல் ஸல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்களைப் பின்பற்றுவதும் அவர்களின் சொற்படி நடப்பதும் அவர்களை மிகவும் உயர்ந்தவர்களாக மதிப்பதும் அவசியமாகும்.

செய்யித் அப்துல் ஹக்கீம் அரவாசி அவர்கள் சொல்லுகின்றார்கள் ரசூலுல்லாஹ் ஸல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்களுக்கு மூன்று கடமைகள் இருந்தன. முதலாவது குர்ஆனை (அதன் பொருளை) உலகில் பரப்புவது(**தப்லி'ஃ**). அதாவது ஈமானை பற்றிய அறிவையும் ஷரியத்தையும்(**அஹ்காமுல் பிக்ஹிய்யா**) மக்களுக்கு விளங்கபடுத்துவது.

ஷரியத் என்பது செய்யுமாறு ஏவப்பட்டைதையும் தவிர்க்குமாறு தடுக்கப்பட்டத்தையும் கொண்ட தொகுப்பாகும். இந்த இரண்டும் சேர்ந்த அறிவு **அஹ்காமுல் இஸ்லாமியா** ஆகும்.

இரண்டாவது கடமையானது: தனது உம்மத்துக்களில் உன்னத இதயமுள்ளவர்களுக்கு குர்ஆன் காட்டுகின்ற தெய்வீக விதிகளையும்(ஆத்மீகவிதிகளையும்), அள்ளாஹு தஆலா வையும் அவனுடைய பண்புகளையும் பற்றிய உண்மைகளை உணரச்செய்வது. முதலாவது கடமையான தப்லிஃயை இரண்டாவது கடமையுடன் குழப்பக்கூடாது. லா-மதுஹபிகளும் (வஹ்ஹாபிகள்) முதலாவது கடமையை ஏற்றுக்கொள்வார்கள் ஆனால் இரண்டாவதை ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். இருந்த போதிலும், அபு ஹுரைரா ரலியள்ளாஹு த ஆலா அன்ஹு அவர்கள் கூறினார்கள். நான் ரசூலுள்ளாவிடம் இருந்து இரண்டு விதமான கல்வியை பெற்றுக்கொன்டேன். நான் உங்களுக்கு கூறியது அதில் ஒன்று, மற்றதை நான் உங்களுக்கு கூறினால் நீங்கள் என்னை கொல்லுவீர்கள் என்று கூறினார்கள். இது **புஹாரி, மிஸ்காத்**, **ஹதீக்கா,** மற்றும் **மக்தூபாத்**தின் 267, 268 ஆம் பக்கம், என்பவற்றில் எழுதப் பட்டுள்ளன. (இந்த பக்கங்களின் ஆங்கில வடிவம் இதன் அடுத்த அத்தியாயத்தில் பார்க்கலாம்.)

மூண்றாவது கடமை: இஸ்லாத்தின் ஷரியத்துக்களுக்கு (அஹ்காமுல் பிக்ஹிய்யா) கீள்படியாதவர்களுக்கு போதனை மூலம் புரிய வைப்பதும் முரண்படுடைபவர்களை பலத்தின் முலம் அடக்கிவைப்பதுமாகும்.

ரசூலுல்லாஹ்வின் இந்த மூன்று வித்தியாசமான பொறுப்புக்களையும் (கடமைகளையும்) நான்கு கலீபாக்களில் ஒவ்வொருவரும் இம்மூன்று கடமைகளையும் செவ்வனே நிறைவேற்றினார்கள். ஹஸ்ரத் ஹசன் ரலியல்லாஹுத்தஆலா அன்ஹு அவர்கள் காலத்தில் கிழர்ச்சிகளும் பித்அத்து க்களும் அதிகரித்தன. இஸ்லாம் மூன்று கண்டங்களுக்கு மேலாக பரவியிருந்தது. சஹாபாக்களின் எண்ணிக்கை குறையக்குறைய ரசூலுல்லாஹ் ஸல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்கள் காட்டியஆத்மீக ஒளி பூமியில் நின்றும் படிப்படியாக விடைபெற்றுக்கொண்டிருந்தது. பின்னர், இந்த மூன்று கடமைகளையும் தனியே ஒருவர் முழுமையாக செய்வதற்கு எவருக்கும் முடியாமல் இருந்தது. இம்மூன்று கடமைகளும் மூன்று பிரிவுகளில் பிரிந்தன. மூன்று பிரிவினர் தனித்தனியே பொறுப்பேற்றுக் கொண்டார்கள்.

---

[1] கீமியா-அஸ்-ஸஆதத். முஹம்மது அல்-கஸ்ஸாலி ரஹ்மதுள்ளாஹி தஆலா அலைஹி அவர்கள் நூற்றுக்கணக்கான நூல்களை எழுதியுள்ளார்கள். அவைகள் அனைத்தும் மிகவும் பெறுமதிமிக்கவை. இவர்கள் ஹிஜ்ரி 450 இல், பெர்சியாவில் துஸ், மஸ்ஸாட் எனும் இடத்தில் பிறந்து ஹிஜ்ரி 505 இல் அங்கேயே இறையடி சேர்ந்தார்கள்.

[2] செய்யித் அப்துல் ஹக்கீம் அரவாசி அவர்கள் பஸ்கால் எனும் இடத்தில் ஹிஜ்ரி 1281(1864 A.D) இல் பிறந்து அங்காராவில் ஹிஜ்ரி 1362(1943 A.D)இல் இறையடி சேர்ந்தார்கள்.

முதலாவது கடமை ஈமானையும் சரீஅத்தையும் அறிவிக்கும் கடமை. இது மர்க்கத் தலைவர்களாகிய **முஜ்தஹீதுகளின்** கைக்கு மாறியது. இந்த

முஜ்தஹீதுகளுக்கு இடையில் ஈமானைப்பற்றி அறிவிப்பவர்கள் **முத்தக்கல்லிமீன்கள்** என்று அழைக்கப்படுகின்றனர். சரீஅத்தைப்பற்றி அறிவிப்பவர்கள் **புகஹாக்கள்** என அழைக்கப்பட்டார்கள்.

இரண்டாவது கடமையாகிய மனம் விரும்பிவரும் உயந்த இதயமுள்ள முஸ்லிம் களுக்கு குர்ஆன் கூறும் ஆத்மீகப் பண்புகளை(நியதிகளை) அடையும் தன்மையைக் காட்டிக்கொடுக்கும் பொறுப்பு பன்னிரண்டு (12) அஹ்லுபைத்துக்கள்(நாயகத்தின் பரம்பரையினர்) 'ரஹ்மதுள்ளாஹி தஆலா அலைஹும் அஜ்ம'ஈன்' அயிம்மாக் களுக்கு சேர்ந்தது. தசவ்வுபின் மிகப்பெரிய அறிஞர்கள் இமாம் ஸிர்ரி அஸ்-ஸகத்தி 251(876 A.D.) பக்தாத், அல் ஜூனைதுல் பக்தாதி 207(991A.D.) ஆகியவர்கள் மிகப்பெரிய இரண்டு மேதைகள்.

மூன்றாவது கடமை மார்க்கத்திலுள்ள சட்டதிட்டங்களை கொண்டுள்ள பகுதி மனித பலத்திலும் அதிகாரத்தினாலும் சுல்தான்களுக்கும் அரசாங்கங்களுக்குமாகியது. முதலாவது பிரிவு **மதுகப்கள்** , இரண்டாவது பிரிவு **தரீக்கா**[1], மூன்றாவது பிரிவு **ஹுகுக்**(சட்டம்) ஆக அழைக்கப்பட்டன. மதுஹபில் ஈமானைப்பற்றிக் கூறப்படும் மதுஹபுகள் **இ'திகாத் மதுஹப்** எனப்படுகிறது. ரஸூல் ஸல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்கள் ஈமான் சம்பந்தமாக முஸ்லிம்களுள் 73 கூட்டங்கள் உண்டாகும் என்று முன் அறிவிப்புச் செய்தார்கள். அதில்ஒரு கூட்டமே சரியானது என்றும் மற்றவை பிழையானது என்றும் சொன்னார்கள். அவர்களின் தீர்க்கதரிசனம் நிரூபிக்கப்பட்டுள்ளது. உண்மையான செய்திகளைக்கொண்டு சரியாக வழிநடக்கும் கூட்டம் **அஹ்லுஸ் சுன்னத் வல் ஜமா அத்தினர்** என அழைக்கப்படுகிறது. மீதமுள்ள 72 கூட்டங்களும் பிழையானவை, அவை **பித்அத் கூட்டத்தினர்** என பிரகடனப்படுத்தப்பட்டுள்ளன. இவர்கள் காபிர்கள் அல்ல. அவர்கள் எல்லோரும் எல்லோரும் முஸ்லிம்கள். ஆனால் யாராவது தான் 72 கூட்டத்தை சேர்ந்தவன் என்றும் குர்ஆனிலும், ஹதீதிலும் தெளிவாகக் கூறப்பட்ட சில விடயங்கள் இன்னும் முஸ்லிம்களுக்கிடையே பரவியுள்ள ஏதாவது தகவல்களை மறுத்தால் அந்நபர் காபிராக மாறுவார். இன்று முஸ்லிம்களின் பெயர்களை மாட்டிக்கொண்ட அநேகர் ஏற்கனவே அஹ்லுஸ்ஸுன்னா

---

[1] அஹ்லுஸ் ஸுன்ன உலமாக்கள் இல்மு-த்தசவ்வுபை பன்னிரண்டு இமாம்களிடம் 'ரஹ்மதுள்ளாஹிதஆலாஅலைஹிம் அஜ்ம'ஈன் களிடம் இருந்து கற்றார்கள். சில மக்கள் அவ்லியாக்களையும், அவர்களின் கராமாத்துகளையும் , தசவ்வுபையும் நம்புவதில்லை. இது அவர்களுக்கு 12 இமாம்களுடன் தொடர்பு இல்லை என்பதை காட்டுகிறது. அவர்கள் அஹ்லு பைத்தினிரடம் பழகி இருந்தால் அவர்கள் இந்த தசவ்வுபை கற்றிருப்பார்கள். அவர்களிடம் தசவ்வுபுடைய அறிஞர்களும் அவ்லியாக்களும் தோன்றி இருப்பார்கள், அவர்களிடம் யாரும் அப்படி தோன்றவும் இல்லை அவர்கள் அதை நம்புவதும் இல்லை. அந்த பன்னிரண்டு இமாம்களும் அஹ்லுஸ் சுன்னா இமாம்கள் என்பது வெளிப்படை. அஹ்லுஸ் சுன்னவினர்கள் தான் அஹ்லு பைத்தினரை விருபுபவர்கலும் 12இமாம்களை பின்பற்றுபவர்களுமாகும். இஸ்லாத்தின் அறிஞர்களாக வருபவர்கள் அறிவின் இந்த இரண்டு துறைகளிலும் ரசூலுள்ளஹ்வின் வாரிசாக இருக்கவேண்டும். அப்தல் கானி அன்னப்லூசி ரஹ்மாதுல்லாஹி தஆலா அலைஹி இந்த அறிஞர்களில் ஒருவர். அவர்களின் **அல்-ஹதீகத் அன் நாதிய்யா** என்ற நூலின் 233ம், 649ம் பக்கங்களில் குர் ஆனில் கூறப்பட்டுள்ள ஆன்மிக சட்டங்கள் ,விதிகளை விளங்கப்படுத்துகிறார்கள்.

அவர்கள் இவற்றை மறுப்பது அவர்களின் மடைமையும் பிடிவாதமும் என்று கூறுகிறார்கள்.

மதுஹபுகளை விட்டுப்பிரிந்து வழிதவறியிவர்களாக அல்லது முஸ்லிம் அல்லாதவர் களாகவும் மாறுகின்றனர்.

முஸ்லிம்கள் பிறந்ததிலிருந்து இறப்புவரை கல்வியைக்கற்பது கடமையாகும். முஸ்லிம்கள் கற்கவேண்டிய கல்வி **அல்-உலூமுல் இஸ்லாமியா** என அழைக்கப் படுகிறது. இஸ்லாமிய அறிவு இரு பிரிவுகளை உடையது. 1. அல் உலூமுல் நக்லிய்யா 2. அல் உலூமுல் அக்லிய்யா.

**I. அல் உலூமுல் நக்லிய்யா** (மார்க்க ஞானம்) என அழைக்கப்படுகிறது. இவ்வறிவை அஹ்லுஸ்ஸுன்னா இமாம்களின் நூலை வாசிப்பதன் மூலம் பெறமுடியும். அஹ்லுஸ்ஸுன்னா மார்க்க அறிஞர்கள் 4 முக்கிய இஸ்லாமிய மூலாதாரங்களிலிருந்து இக்கல்விவை பெற்றார்கள். இந்த நான்கு மூலாதாரங்களும் **அல்அதில்லத் அஸ் ஷரீய்யா** எனப்படும். இவை **குர்ஆன் அல் கரீம்**, **ஹதீத் அஷ் ஷரீப்**, **இஜ்மா அல் உம்மா**, **கியாசுல் புக்கஹா.** **அல் உலூமுல் இஸ்லாமியா** என்னும் இஸ்லாமிய ஞானம் எட்டு முக்கிய கிளைகளைக் கொண்டது.

**(1). இல்முல் தப்சீர்:** இது குர்ஆனின் விளக்கம்பற்றிய ஞானம். இத்துறையில் விற்பன்னர்கள் **முபஸ்ஸிரீன்கள்** எனப்படுபவர். முபஸ்ஸிரீன்கள் அல்லாஹ் தனது சொல்லில் (.குர்ஆனில்) என்ன கருத்தை கொண்டிருக்கின்றான் என்பதை பூரணமாக ஆழ்ந்து அறிந்தவர்கள்.

**(2). இல்முல் உசூல் அல் ஹதீது:** இக்கிளை ஹதீதுகளை பிரித்தறிவது. ஹதீத் களின் வகைகள் (ஹதீதின் பிரிவுகள்) பற்றி Endless Bliss என்னும் நூலில் தெளிவாக்கப்பட்டுள்ளது.

**(3). இல்முல் ஹதீஸ்:** இக்கிளை ரஸுலுல்லாஹ் ஸல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்களின் சொல் (ஹதீத்) , செயல்(ஸுன்னா), கருத்து(ஹால்) என்பவற்றை மிக நுணுக்கமாக ஆராய்வது.

**(4). இல்முல் உஸுல் அல் கலாம்:** இக்கிளை குர்ஆன், ஹதீஸிலிருந்து இல்முல் கலாம் பெறப்படும் முறையை விளக்குவது.

**(5). இல்முல் கலாம்:** இது, கலிமா அத் தவ்ஹீத், கலிமா அஸ்-ஸஹாதா மற்றும் ஈமானின் ஆறு அடிப்படை அம்சங்களையும் கொண்ட மொத்த அறிவு. இருதயத்தால் பூரணமாக ஏற்று விசுவாசிக்க வேண்டியது. கலாமுடைய அறிஞர்கள் இல்முல் உஸுலுல் கலாமையும், இல்முல் கலாமையும் ஒன்றாகவே எழுதிவைக்கும் வழக்கம் உள்ளவர்களாதலால் அறியாதவர்கள் இவ்விரு பிரிவுகளையும் ஒன்றாகவே கருதுகின்றனர்.

**(6). இல்முல் உஸுல் அல் பிக்ஹ்:** இக்கிளை குர்ஆனுல் கரீம் ஹதீத் ஷரீப்லிருந்து இல்முல் உஸுலை எப்படிப் பெறலாம் எனக்காட்டுவது.

**(7). இல்முல்பிக்ஹ்:** இக்கிளை **அஃப்ஆல்-அல்-முகல்லபீன்** இவ்வறிவு விவேக மானவர்கள், இளம் பருவத்தினர் உடற் சம்பந்தமான விசயங்களில்

எவ்வாறு நடந்து கொள்வதுபற்றியது. மிகஅவசியமானது. பர்ளு, வாஜிபு, சுன்னா, முஸ்தஹபு,முபாஹ், ஹராம்,மக்ரூஹ், முப்சிது, ஆகிய எட்டு பிரிவுகளைக்கொண்டது. இதை ஏவல், விலக்கல், அங்கீகரிக்கப்பட்டதென முப்பிரிவுகளாக்கலாம்.

(8). **இல்முல் தசவ்வுபு.** இக்கிளை **இல்முல் அஹ்லாக்** என்றும் அழைக்கப்படும். இது நாம் செய்யவேண்டியதை, செய்யக்கூடாததை மட்டுமல்ல மனதால் கூட எண்ணக்கூடாததையும் விளக்குவதுடன் மனதுக்கு உறுதியான நம்பிக்கையையும் வழங்குகிறது. மேலும் பிக்ஹுக் கலையை எழிதாக்குவதுடன் ஒருவர் மஃரிபாவை அடைவதற்கு வழிகாட்டுகிறது.

மேற்கூரிய 8 பிரிவுகளிலிருந்து கலாம், பிக்ஹ், தசவ்வுபு என்பவற்றில் தேவையான அளவு கற்பது ஒவ்வொரு முஸ்லிம் ஆணுக்கும் பெண்ணுக்கும் (பர்ளு அய்ன்)கட்டாய கடமையாகும். இதைக்கற்காமல் இருப்பது குற்றமும் பாவமுமாகும்.[1]

**II. அல் உலூமுல் அக்லிய்யா**:. இது பரீட்சார்த்த ஞானம் என்று அழைக்கப்படும். இவ்வறிவு நுட்பவிஞ்ஞானம், அறிவியல்விஞ்ஞானம் என இரண்டு பிரிவுகளையுடையது. இவ்விஞ்ஞான கல்வியை கற்பது முஸ்லிம்கள் மீது பர்ளுகிபாயாவாகும். மார்க்க அறிவுக்காக முடிந்தளவு அதிகமாக கற்பது பர்ளுஐன் ஆகும். இக்கல்வியை கற்பதற்காக தேவைக்கு மேலாக அதாவது அதில் விசேடத்துவம் பெறுவதற்கு கவனம் செலுத்துவது பர்ளுகிபாயாவாகும். ஒரு ஊரில் இவ்வறிவை கற்ற ஒருவராவது இல்லாவிடின் அவ்வூர்வாழ் சகலரும் குற்றவாழிகளாவர்.

மார்க்க அறிவானது காலத்துக்கேற்றமாதிரி மாற்றியமைக்கக் கூடியதல்ல. இல்முல் கலாமுக்கு விளக்கம் கூறும்போது தவறிழைப்பதும், பிழை செய்வதும் மன்னிக்க முடியாத குற்றங்களாகும். பிக்ஹு சம்பந்தமான விடயங்களில் ஒருவருக்கு (உத்ர்) மன்னிக்ககூடிய நிலைமைகள் ஏற்படும்போது இஸ்லாம் காட்டித்தந்த சலுகை ளையும் வசதிகளையும் பாவிக்கமுடியும். ஆனால், மார்க்கவிடயத்தில் ஒருவர் தன் சொந்த அபிப்பிராயங்களை கருத்துக்களைக் கொண்டு மாற்றம் செய்வதும் திருத்தம் செய்வதும் ஒருபொழுதும் அனுமதிக்கப்படவில்லை. அப்படி செய்வது அவரை இஸ்லாத்தைவிட்டு வெளியேற்றிவிடும். ஆனால் அல்உலூமுல் அக்லியாவில் மாற்றங்களும் வழர்ச்சி முன்னேற்றங்கள் என்பனவும் அனுமதிக்கப்படுகின்றன. முஸ்லிம் அல்லாதவர்களிடமிருந்தும் இவ்வாறான அறிவை கற்பதும் ஆராய்ந்து கண்டுபிடிப்புக்களைச் செய்வதும் முஸ்லிம்களுக்கு அவசியமாகின்றது. முன்னாள் கல்வி அமைச்சர் அஸ்செய்யது அஹமது ஸுஹ்தூ பாஸா அவர்களின் **அல் மஜ்மூஆத் அஸ் ஸுஹுதிய்யா** என்னும் நூலில் பின்வருமாறு கட்டுரை காணப்படுகிறது.

4வது பிரிவில் **பிக்ஹு** என்னும் சொல் பக்கீஹா யப்கஹு (அறிந்து கொள்வது விளங்கி கொள்வது) என்று பொருள் கூறப்பட்டுள்ளது. 5 வது பிரிவில் இஸ்லாத்தை அறிந்து கொள்வது, விளங்கி கொள்வது என்று பொருள் கூறப்பட்டுள்ளது. இல்முல் பிக்ஹு உலமாக்கள் **பக்கீஹு** என அழைக்கப்படுகிரர்கள்.

இல்முல்பிக்ஹு மனிதன் செய்ய வேண்டிய செயல்களையும், செய்யக்கூடாத வற்றை யும் கையாள்கின்றது. இந்த அறிவு குர்ஆன் அல் கரீம், ஹதீஸ் ஷரீப் ,இஜ்மாஉ, கியாஸ் என்பவற்றிலிருந்து தொகுக்கப்படுகிறது. சஹாபத் அல் கிராம்களின் உடன்பாடும் அவர்களுக்கு பின்னர் வந்த முஜ்தஹீதுகளின் உடன்பாடும் இஜ்மா அல்-உம்மா என்றழைக்கப்படுகிறது. குர்ஆன் அல்கரீம் , ஹதீஸ் அஸ்-சஹாபா , இஜ்மா அல் உம்மா என்பவற்றிலிருந்து பெறப்பட்ட சட்டவிதிகள் கியாஸ்-அல்-புக்கஹா என்ற அழைக்கப்படுகின்றன. ஒரு செயல் ஹலாலா அல்லது ஹராமா என்று குர்ஆன் ஹதீஸ் என்பவற்றிலிருந்து விளங்கிக் கொள்ள முடியாத விடத்து அது முன்னர் தெரிந்த வேறு சில செயல்களின் விதிகளுடன் ஒப்பிடப்படும். இந்த ஒப்புவமை காண்பது கியாஸ் எனப்படும். பிந்திய செயலுக்கு கியாசை உபயோகிப்பதற்கு முந்திய ஒரு செயல் அது

---

[1] அல் ஹதீகா பக்கம் 323 மற்றும் ரத்துல் முஹ்தாரின் முகவுரை

அனுமதிக்கப்பட அல்லது தடுக்கப்பட இருந்த காரணிகள் பிந்திய செயலிலும் இருக்கவேண்டும். இதை அறியுந்தன்மை இஜ்திஹாத் என்னும் தரத்தையடைந்த ஆழ்ந்த அறிவுள்ள இமாம்களாலேயே முடியும்.

**இல்முல் பிக்ஹு** என்பது மிகப்பரந்த விஷயம். இது நான்கு முக்கிய பிரிவுகளை உடையது.

**(1) இபாதத்:** இது ஸலாத்(தொழுகை), ஸவ்ம்,(நோன்பு), ஸக்காத்(ஏழைவரி), ஹஜ், ஜிஹாது(புனிதயுத்தம்) எனும் ஐந்து பிரிவுகளையுடையது. இவை ஒவ்வொன்றும் பல உட்பிரிவுகளை உடையன. ஜிஹாது செய்வதற்கு ஆயத்தமாய் இருப்பது ஒரு இபாதத் என்று சொல்லப்படுகிறது. ரஸுலுல்லாஹ் ஸல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்கள் உபதேசித்தார்கள் எதிரிகளுக்கெதிரான ஜிஹாது இரண்டு வகைப்படும்: ஒன்று செயலால், மற்றது சொல்லால்.

ஜிஹாது செய்வதற்கு ஆயத்தம் செய்வது ஒரு வணக்கமாக கொள்ளப்படும்.: புதிய கருவிகள் மற்றும் ஆயுதங்களை எப்படி தாயாரிப்பது, எப்படி இயக்குவது என்பதை கற்றுக்கொள்வது பர்லாகும். ஜிஹாத் என்பது நாடுகளால் நடாத்தப்படுவது. நாட்டின் சட்டத்திற்கு கீழ்படிந்து ஜிஹாதுக்காக இணைந்து கொள்வது பர்ளாகும். அண்மையில், எதிரிகள் அச்சுவெளியீடுகள் மூலமும், வானொலி மற்றும் டெலிவிசன் (மீடியாக்கள்) மூலமாக நடத்தும் பிரச்சாரங்கள் ( இரண்டாவது வகை யுத்தம் ) அதிகரித்து வருவதை அவதானிக்கின்றோம். ஆகவே இந்த வகையான எதிரிகளையும் நாங்கள சந்திப்பதற்கு ஆயத்தமாக வேண்டும்.

**(2). முனாக்கஹாத்:** பல உபபிரிவுகளை கொண்டது. அதாவது, விவாகம், விவாகரத்து, ஜீவனாம்சம் வேறு பல பிரிவுகளை அடக்கியது. Endless Bliss இன் ஆறு பாகுதிகளில் பல இடங்களில் விவரிக்கப்பட்டுள்ளது.

(**3). முஆமலாத்:** பல உபபிரிவுகளை கொண்டது கொள்வனவு, விற்பனை, வியாபாரம், பங்குடமை, வாடகை, கூட்டு உரிமை, வட்டி, வாரிசுரிமை, என்பவைகளைக் கொண்டது.

**(4) உகூபாத்;** (தண்டனைகள் சட்டம்) ஐந்து உபபிரிவுகளை கொண்டது கிஸாஸ் (பழிக்குப்பழி), சிர்கா(களவு), சினா(விபச்சாரம்), கத்ஃப்(பெண்கள் செயல்கள் சம்பந்தமான குற்றசாட்டுகள்), ரித்தா(,காபிராதல்). **Endless Bliss** இன்10, 11,12,13,14 அத்தியாயங்களை பார்க்கவும்.

வணக்கங்கள் செய்வதற்கு போதுமான அளவு பிக்ஹை கற்பது ஒவ்வொரு முஸ்லிமுக்கும் பர்லாகும். முனாக்கஹாத், முஆமலாத் என்பவர்றை கற்பது பர்ளு கிபாயாவாகும். அவைகளுடன் தொடர்புள்ள பணிபுரிபவர்கள் கற்பது கடமையாகும். இல்முல்தப்சீர், இல்முல் ஹதீஸ், இல்முல் கலாம் என்பவற்ருக்கு அடுத்ததாக பிக்ஹை கற்பது மிகவும் கண்ணியமானது.

பின்வரும் ஆறு ஹதீதுகளும் பிக்ஹையும் அதைக்கற்ற பக்ஹீஹின் மகிமையையும் உணர்த்துகின்றன.

**“அல்லாஹ் ஒருவனை விரும்பினால் அவனை பகீஹ்களில் ஒருவனாக்குகிறான்”**

**“ஒருவன் பக்கீஹாக ஆகினால் அல்லாஹ் அவனுடைய விருப்பங்களை நிறைவேற்றுவதுடன் எதிர் பர்க்காதவகையில் அவனுக்கு ரிஸ்கை அளிப்பான்”**

**‘மனிதருள் மிக மேலானவன் மார்க்கத்தில் பக்கீஹாகும் என்று அல்லாஹ் கூறுகின்றான்”**

**“சைத்தானுக்கு ஆயிரம் ஆபிதுகளைவிட ஒரு பக்கீஹ் பலம் வாய்ந்த எதிரியாகும்”**

**பிக்ஹைக்கற்பதும் கற்பிப்பதுமான அமல் மிகச்சிறந்ததும் பெறுமதி வாய்ந்ததுமாகும்”**

**“ஒவ்வொன்றுக்கும் ஆதார தூண்கள் உள்ளன. இஸ்லாத்தின் ஆதார தூண்கள் பிக்ஹைப்பற்றிய அறிவாகும்.”**

மாமேதை இமாமுல் அஃலம், அபூஹனீபா ‘ரஹ்மாதுல்லாஹி தஆலா அலைஹி’ அவர்களின் அந்தஸ்தை இந்த ஹதீதிலிருந்து விளங்கிக்கொள்ளமுடியும்.

ஹனபி மதுஹபின் போதனைகள் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் ரலியள்ளாஹு தஆலா அன்ஹு அவர்களின் வழித்தொடரிலிருந்து பெறப்பட்டவைகளாகும். இவர்கள் நாயகத்தோழர்களில் ஒருவர். இமாமுல் அஃலம், அபூஹனீபா ‘ரஹ்மாதுல்லாஹி தஆலா அலைஹி அவர்கள் பிக்ஹுக் கலையை ஹம்மாது ‘ரஹ்மாதுல்லாஹி தஆலா அலைஹி’ அவர்களிடமிருந்து கற்றார்கள். ஹம்மாது ரஹ்மாதுல்லாஹி தஆலா அலைஹி அவர்கள் இப்ராஹீம் அன் நக்ஹா ரஹ்மாதுல்லாஹி தஆலா அலைஹி அவர்களிடமும், இப்ராஹீம் அன் நக்ஹா‘ரஹ்மாதுல்லாஹி தஆலா அலைஹி’ அவர்கள் அல் கமா ரஹ்மாதுல்லாஹி தஆலா அலைஹி அவர்களிடமும்,. அல் கமா ரலியள்ளாஹு தஆலா அன்ஹு அவர்கள் அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் ரலியள்ளாஹு தஆலா அன்ஹு அவர்களிடமும், அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத் ரலியள்ளாஹு தஆலா அன்ஹு அவர்கள் ரஸுலுள்ளாஹ் ஸல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்களிடமும் இருந்து இவ்வறிவைப் பெற்றனர்.

அபூ யூசுப், இமாம் முஹம்மது சைபாணி, zசுfபர் இப்னு ஹுதைல், ஹசன் இப்னு ஸியாத் ஆகியவர்கள் இமாமுல் அஃலம் அபூஹனீபா ரஹ்மாதுல்லாஹி தஆலா அலைஹி அவர்களின் சீடர்களாவர். இவர்களுள் இமாம் முஹம்மது அவர்கள் இஸ்லாத்தைப்பற்றி சுமார் ஆயிரம் நுல்களை எழுதியுள்ளார்கள். இவர்கள்ஹிஜ்ரி 135 இல் பிறந்து 189 இல் ஈரானில் ராய் என்ற இடத்தில் இறையடி சேர்ந்தார்கள், இவர்கள் இவர்களின் மாணவர்களில் ஒருவரான இமாம் ஷாபிஈ ரஹ்மாதுல்லாஹி தஆலா அலைஹி' அவர்களின் விதவையான தாயாரை மணந்ததால் அவர்களின் மறைவிற்கு பின் அவர்களின் எல்லா நூல்களும் இமாம் ஷாபிஈ ரஹ்மாதுல்லாஹி தஆலா அலைஹி அவர்களுக்குக் கிடைத்தன.

நான் சத்தியமாகச் சொல்கிறேன் என்னுடைய பிக்ஹுக் கலையறிவு இமாம் முஹம்மது அவர்களின் நூல்களை வாசித்ததன் மூலமே விருத்தியடைந்தது" என்று இமாம் ஷாபிஈ ரஹ்மாதுல்லாஹி தஆலா அலைஹி அவர்கள் கூறினார்கள். யாராவது ஒருவர் பிக்ஹுக் கலையை ஆழமாகப்படிக்க விரும்பினால் இமாம் அபூஹனீபா ரஹ்மாதுல்லாஹி தஆலா அலைஹி அவர்களின் மாணவர்கள் கூட்டத்தில் சேரவேண்டும் என்று கூறியிருக்கிறார்கள். முஸ்லிம்கள் எல்லோரும் இமாம் அபூஹனீபா ரஹ்மாதுல்லாஹி தஆலா அலைஹி அவர்களின் ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் போன்றவர்கள். ஒரு மனிதன் தனது குடும்பத்தில் பிள்ளைகளுக்கு மனைவிகளுக்கு உழைப்பதைப்போல இமாமுல் அஃலம் அவர்கள் கஷ்டப்பட்டு எல்லா மக்களின் வாழ்க்கைக்குத் தேவையான மார்க்க அறிவை தாமே தேடிக்கொண்டதனால் தன் குடும்பத்தின் எல்லோரது கஷ்டத்தையும் நீக்கினார்கள்.

அல் இமாமுல் அஃலம் அபூஹனீபா ரஹ்மாதுல்லாஹி தஆலா அலைஹி அவர்கள் பிக்ஹுடைய அறிவைச் சேர்த்ததுடன் அதைப் பல பிரிவுகளாக பிரித்து உஸூல் செய்யும் முறையையும் தொகுத்தார்கள். மேலும் ரசூளுல்லாஹு ஸல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்கள் போதித்து அவர்களின் அருமை சஹாபாக்களும் அறிவித்த இஃதிகாத் (வழிமுறைகளை) ஒன்று திரட்டி அவற்றை ஆயிரக்கணக்கான அவர்களின் மாணவர்களுக்குப் போதித்தார்கள். அவர்களின் மாணவர்களிற் சிலர் இல்முல் கலாமுடைய அறிவில் விற்பன்னர்களாக விளங்கினார்கள். அவர்களில் அபூபக்கர் அல் ஜூர்ஜானி என்பவர் இமாம் முஹம்மது அல் ஷைபானி அவர்களின் மாணவர் பிரசித்தமானவர். அவர்களின் மாணவர் அபூ நஸ்ர் அல் இயாத், அபூ மன்ஷுரல் மாதுருதி என்பவர்களும் இல்முல் கலாமில் தேர்ச்சியடைந்தவர்கள். அபூ மன்ஷுர் அவர்களின் நூலில் கலாம் என்னும் அறிவு இமாமுல் அஃலம் அவர்களிடமிருந்து வந்த மாதிரியே எழுதப்பட்டுள்ளது. வழிதவறியவர்களுக்கு எதிராக போராடி இவர்கள் அஹ்லுஸ் சுன்னத்தின் இஃ'திகாதுக்கு (வழிமுறைகளுக்கு) பலமூட்டினார்கள். அஹ்லுஸ் சுன்னத்தின் வழிமுறையை உலகெங்கும் பரப்பினார்கள்,. இமாமவர்கள் ஹிஜ்ரி 333(944 A.D.) சமர்க்கந்தில் காலமானார்கள். இவர்களைப்போன்றே இமாம் அபூ ஹசன் அல் அஸ்ஹரி அவர்களும் **சுன்னி இஃ'திகாத் மதுஹபுகளின் இமாம்** என அழைக்கப் படுகிரார்கள்.

**பிக்ஹுடைய அறிஞர்கள்** ஏழு தங்களில் பிரிக்கப்படுகிறார்கள். கமால் பாஷா ஸாதி அஹமதிப்னு சுலைமான் எபந்தி தனது **வக்ப்f அன்-னிய்யாத்** எனும் நூலில் அந்த ஏழுபிரிவுகளையும் பின் வருமாறு விளக்குகிறார்.

1. **இஸ்லாத்தின் முஜ்தஹித்**: இவர்கள் இஸ்லாத்தின் நான்கு மூலாதராங்களில் இருந்து நம்பிக்கை கோட்பாடுகளை பெற்றுக்கொள்வதற்கு தேவையான தத்துவங்களையும் முறைகளையும் வகுத்து அவற்றைப்பாவித்து பெறப்பட்ட கோட்பாடுகளை தொகுத்தார்கள். இவர்களுக்கு உதாரணம்: அ-இம்மத்துல் மதாஹிப்(இமாம் அஃளம் அபு ஹனிபா ரஹ்மாதுள்ளாஹி தஆலா அலைஹி,இமாம் மாலிக் ரஹ்மாதுள்ளாஹி தஆலா அலைஹி, இமாம் ஷாபி'ஈ ரஹ்மாதுள்ளாஹி தஆலா அலைஹி, இமாம் அஹமத் இப்னு ஹம்பல் ரஹ்மாதுள்ளாஹி தஆலா அலைஹி என்பன சரியான நான்கு மதுஹபுகளின் இமாம்கள் மற்றும் அவற்றின் நடைமுறைகள்.) [1]

2. **மத்ஹபின் முஜ்தஹிதுகள்**.: இவர்கள் மதுகபுடைய இமாம்களினால் தொகுக்கப்பட்ட தத்துவங்களையும் நான்கு மதுஹபுகளில் இருந்தும் பெறப்பட்ட விதிகளைப் பின்பற்றுவார்கள். இவர்களுக்கு உதாரணம் . இமாம் அபு யூசுப், இமாம் முஹம்மத் 'ரஹ்மாதுல்லாஹி தஆலா அலைஹி' போன்றவர்கள்.
3. **விவகாரங்களின்(மஸ்'அலா) முஜ்தஹிதுகள்**: இவர்கள் மத்ஹபின் இமாம்களால் வகுக்கப்படாத சில விடயங்களை அம் மத்ஹபின் கோட்பாடுகள் முறைகளைக்கொண்டு பெறுவார். இன்னும் இதை செய்யும்போது இவர்கள் அவர்களின் இமாமை பின்பற்ற வேண்டும். அத்தஹாவி[ஹிஜ்ரி 238-321, எகிப்து], ஹசாfப் அஹமத் இப்னு உமர் [ஹிஜ்ரி 261 பாக்தாத்], அப்துல்லாஹ் இப்னு ஹுசைன் அல் கர்ஹி [ஹிஜ்ரி 340], சம்ஸ் அல்- அ இம்மா அல்- ஹல்வானி [ஹிஜ்ரி456, புஹாரா], சம்ஸ் அல் அ இம்மாஅல் சரஹ்சி[ ஹிஜ்ரி 483], பஹ்ரு அல் இஸ்லாம் அலி இப்னு முஹம்மது அல் பஸ்தவி [ஹிஜ்ரி400-482சமர்கந்த்], காதி கான் ஹசன் இப்னு மன்சூர் அல் பார்ஹானி [ஹிஜ்ரி592] 'ரஹ்மாதுள்ளாஹி தஆலா அலைஹி அஜ்ம'ஈன்' போன்றவர்கள்.
4. அஸ்-ஹாப்-அத்-தஹ்ரீஜ்: இவர்கள் இஜ்திஹாது செய்யமுடியாதவர்கள். இவர்கள் முஜ்தஹிதுகளால் பெறப்பட்ட சுருக்கமான தெளிவில்லாத பிரமாணங்களை

---

[1] நான்கு மதுஹபுகளை குறிப்பிடாமல் இது கூறப்படுகின்றது.

விளக்கும் அறிஞர்கள். ஹுசாமுத்தீன் அல்ராசி அலி இப்னு அஹமத் [ஹிஜ்ரி 593 , டமஸ்கஸ்] ரஹ்மாதுள்ளாஹி தஆலா அலைஹி என்பவர் அவர்களில் ஒருவர். இவர் ஜஸ்ஸாஸ் (jazzaas) என வும் அழைக்கப்பட்டவர். இவர் ஹிஜ்ரி 370 இல் மறைந்தார்.
5. அர்பாப அட்-தர்ஜீஹ்: இவர்கள் முஜ்தஹிதுகளின் பல வியாக்கியானங்களில் இருந்து ஒன்றை தெரிந்தவர்கள். இவர்கள் அபுல் ஹசன் அல்குதூரி [ஹிஜ்ரி(362-428) பாக்தாத்.] புர்ஹானுத்தீன் அலி அல்

மர்ஜானி. இவர் அல்ஹிதாயாவின் ஆசிரியர். இவர் ஹிஜ்ரி 593இல் புகாறா படுகொலையில் ஜெங்கிஹிஸ் வீரர்களால் கொல்லப்பட்டார்.

6. முகல்லிது : இவர்கள் ஒரு விசயத்தில் சொல்லப்பட்டதை (ரிவாயத்) அவற்றின் நம்பகத்தன்மை ஒழுங்குப்படி தொகுப்பவர்களும் எழுதுபவர்களுமாவர். அவர்கள் எந்த ஒரு மறுக்கப்பட்ட ரிவாயத்தையும் அவர்களின் தொகுப்புகளில் சேர்க்கமாட்டார்கள். அபுல் பறக்கத் அப்துல்லாஹ் இப்னு அஹமத் அன்னஸயி[ஹிஜ்ரி 710] . இவர் கன்சுல் ஹக்காயிக்கின் ஆசிரியர். அப்துல்லாஹ் இப்னு மஹ்மூது அல்முசூலி [ஹிஜ்ரி 638], முக்தார் எனும் நூலின் ஆசிரியர். பூர்ஹாண் அஸ்ஸரியா மஹ்மூத் இப்னு சத்ர் அஷ்ஷாரியா உபைதுல்லாஹ் [ஹிஜ்ரி 673] அல் விகாயா நூலின் ஆசிரியர். இப்னு அஸ்ஸாறி அஹமத் இப்னு அலி அல் பக்தாதி [ஹிஜ்ரி 694] இவர் மஜ்ம உல் பஹ்ரைன் எனும் நூலின் ஆசிரியர்.

7. இவர்கள் முகல்லிதுகள்[1]. உண்மையான ரிவாயா விலிருந்து நம்பிக்கை குறைந்த ரிவாயாவை பிரிப்பதற்கு திறமையற்றவர்கள்.

---

[1] இவர்கள் தாங்கள் வாசித்ததை விளங்கி மற்ற விளங்காதவர்களுக்கு முகல்லிதுகளுக்கு விளங்கபடுத்த கூடியவர்கள் என்பதால் இவர்கள் பிக்ஹு அறிஞர்கள் என்று கணிக்கப்படுகிறார்கள்.

***மதுஹப் இல்லாதவன் தனக்கு சரியான வழியை காணாதவன்;***
***அவன் மற்ற எல்லோரையும் பின்பற்றினாலும், அது சரியாகாது!***
***இஸ்லாத்தை கற்காதவன் தனக்கும் முஜ்தஹிதாக முடியாது***

***உனது கருணையே எனது நம்பிக்கை நான் விவேகத்தில் குறைந்தவன்;***
***உனக்கு எதுவும் கடினமல்ல, எனது ரப்பே மகத்தானவனே!***

***பாவிகளுக்கி கருணை காட்டுபவனே, நானும் ஒரு பாவிதான்;***
***எனது பிழைகளை மறுக்கமாட்டேன் நீதான் எல்லாம் அறிந்தவன்.***
***நானே எனது கறுத்த முகத்துடன் பிணைக்கப்பட்டவன், நானே என்னை இழுத்துவிட்டேன்;***

***உனது கருணையே எனது எதிர்பார்ப்பு, நான் திறமை குறைந்தவன்;***
***உனக்கு எதுவும் கடினமல்ல, எனது ரப்பே மகத்தானவனே!***

***எல்லா மனிதர்களும் நஷ்டத்தில் , நீதான் சரியானவன், உண்மையாளன் ;***
***யாருமில்லை உன்னை தவிர, வணங்குவதற்கு தகுதியாக !***
***இந்த உதவியற்றஅடிமை என்னதான் செய்வேன்; நீதான், நீமட்டும் தான், சர்வ வல்லமயுள்ளவன்***

***உனது கருணையே எனது நம்பிக்கை நான் திறமை குறைந்தவன்;***
***உனக்கு எதுவும் கடினமல்ல, எனது அல்லாஹ்வே மகத்தானவனே!***

## 3. மக்தூபாத் முதலாவது பாகம் 267வது கடிதம்

ஹுசாம்-அத்தீன் அஹ்மத் 'ரஹ்மத்துல்லாஹி' அலைஹி அவர்களுக்கு எழுதப்பட்ட இக்கடிதம், **இஸ்றார்** (நுட்பமான, ரகசிய ஆன்மீகத் தகவல்கள்) மற்றும் **தக்காயிக்** (ஆன்மீகத்தின் மிக நுட்பமான தகவல் துணுக்குகளை கொண்டது).

புகழும் நன்றியும் அல்லாஹுத்தஆலாவுக்காக இருக்கும்! ஸலாத்தும் ஸலாமும் அவனுடைய ஹபீப் நபி ஸல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்கள் மீதும் அவர்களது அஹ்லு பைஹ்துக்கள் மீதும் உண்டாகட்டும். நீங்கள் இந்த ஏழைக்கு (இமாம் ரப்பானி) அனுப்பிய அன்பின் கடிதத்தை வாசிக்கும் பாக்கியம் எங்களுக்கு கிடைத்தது. இதற்கு பகரமாக அல்லாஹு த ஆலா உங்களுக்கு நலவுகளை தந்தருள்வானாக. அல்லாஹு தஆலா எனக்கு அருள்புரிந்த எந்த நிஃமத்தை பற்றி நான் எழுதுவது? அதற்கு நான் எப்படி நன்றி செலுத்துவேன். அல்லாஹுத்த ஆலாவின் புறத்திலிருந்து என்மீது பொழியும் பெரும்பாலான விவரிக்கமுடியாத அறிவுத்துளிகளையும் மஃரிபாவின் வழிகாட்டல்கள் நலவுகள் என்பவற்றை பற்றி எழுதப்படுகின்றது. அவற்றை விளங்கிய வர்களும் விலங்காதவர்களும் எல்லோரும் வாசிக்கின்றார்கள், இருந்தபோதிலும், எனக்கு மட்டும் என்று அனுப்பிய விவரிக்க முடியாத மற்றும் இரகசியமான அறிவுத்தகவல்களை வெளிப்படுத்த இயலாது. அவற்றைப்பற்றி எழுத்திலோ சைகையிலோ எதுவுமே சொல்லமுடியாது. மேலும், எனது பெறுமதியான மகன் அவர் இந்த ஏழையின் ம'ரிபாவை ஏற்று விளங்கிக்கொண்டார். அவர் **சுலுக்** மற்றும் **ஜதுபா** போன்ற எவ்வளவு உயர்ந்த படித்தரங்களை அடைந்திருந்தாலும் என்னுடைய இந்த ரகசிய விடயங்களில் எதையும் கூறமுடியாது. (இவை **Endless Bliss** இன் 6ஆவது பாகத்தின் 39வது அத்தியாயத்தில் பல்வேறு இடங்களில் கூறப்பட்டுள்ளது). ஆம் அவற்றை மறைப்பதற்கு மிகவும் கூடிய ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளது. எனது அன்புக்குரிய மகன் இந்த இரகசிய அறிவுகளை அடைந்துள்ளார் என்பதையும் தவறுகளிலிருந்தும் குழப்பப்படுவதில் இருந்தும் அவர் பாதுகாக்கப்பட்டுள்ளார் என்பதையும் அறிகிறேன். அவை மிக இரகசியமானதால் எனது நாவு கட்டப்பட்டுள்ளது. அவற்றின் இரகசியம் எனது இதயம் திறப்பதை தடுக்கின்றது. எனது நிலையானது திக்குர்ஆணின் சூரா ஷு'அரா வின் 13வது ஆயத்த்தில்: " **எனது நெஞ்சு துன்பத்துக்கு உள்ளாக்கபடும், எனது பேச்சுவராமல் விடலாம்"** என்பதற்கு உதாரணமாகும். இம்மாதிரியான இரகசியங்கள் வரைவிலக்கனப்படுத்துவது அனுமதிப்படாதது அல்ல ஆனால் ஒருவேளை வரைவிலக்கணம் இல்லாமல் போகலாம்.

**ஹாபிஸ் அழுவது(ஓதுவது), ஒன்றுக்காகவும் அல்ல;**
**அவருக்கு பல அதிசயங்கள் இருக்கின்றது, சற்று கவனியுங்கள்!**

நாங்கள் மறைக்கும் இந்த எல்லா நிஃமத்துகள் நபித்துவத்தில் இருந்துதான் வந்து சேருகின்றன. அவை நபிமார்கள் அலைஹிமுஸ்ஸலவாத்து வதஸ்லிமாத்துகளுக்கு சொந்தமானது. மலக்குகளின் தலைவர் கூட இந்த நிஃமத்துகளில் இருந்துதான் பகிர்ந்து கொள்கிறார். அவர்கள் நபிமார்களை அடியொட்டி பின்பற்றும் நல்லடியார்களில் இருந்து தெரிவுசெய்து இந்த நிஃமத்தைகொண்டு அவர்களை கௌரவிக்கின்றனர். ஹஸ்ரத் அபு ஹுரைரா ரலியல்லாஹு அன்ஹு "நான் இரண்டு வகையான அறிவுகளை ரசூலுள்ளஹ் ஸல்லள்ளாஹு அலைஹி வசல்லம் மிடம் இருந்து

கற்றுக்கொண்டேன். அவற்றில் ஒன்றை உங்களுக்கு கூறியுள்ளேன். மற்றதை கூறினால் நீங்கள் என்னை கொலை செய்வீர்கள் என்று கூறினார்கள்”. இந்த இரண்டாவது வகை அறிவு தான் இரகசியமானது. எல்லோராலும் அதை விளங்க முடியாது. அது அல்லாஹ்விடமிருந்து கிடைக்கும் பெரிய நிஃமத்தாகும். அதை அவன் விரும்பிய வர்களுக்கு கொடுப்பான். எனது மதிப்புக்குரிய ஆசிரியருக்கு அவர்களின் மாணவர்களால் எழுதப்பட்ட கடிதத்தை ஒருமுறை வாசியுங்கள்,

எனது அன்புக்குரிய ஆசிரியரே! இந்த ஏழை (பக்கீர்-இமாம் ரப்பானி) யின் அனுமானத்தில் தசவ்வுபில் பித்’ஆவை கண்டுபிடிப்பது இஸ்லாத்தில் பித்’ஆவை கண்டுபிடிப்பதை விட குறைந்த அசிங்கமானதல்ல. பினனர் வரும் சந்ததியினர்கள் பித்’ஆக்களை கண்டுபிடிக்கும்வரை தசவ்வுபின் பறக்கத் அவர்களுக்கு வந்து கொண்டிருக்கும். தசவ்வுபில் ஒரு திருத்தம் செய்யப்படும்போது பாயிள்களும் பரக்கதுகளும் ஒரே நேரத்தில் நின்று போகும். தசவ்வுபின் வழியில் மாற்றம் செய்வதயிட்டும் மிகக்கவனமாக இருக்க வேண்டும். தசவ்வுபில் இல்லாதவர்களோடு உரையாடலை தவிர்க்கவேண்டும். தசவ்வுபில் திருத்தம் நடைபெறுவதை அவதானித்தால் அதனை உடனே தடுக்கவேண்டும். தேவை பட்டால், எந்த இடம், யார் என்று பார்க்காமல் பலத்தை பாவித்து தடுக்க வேண்டும். சரியானதும் உண்மை யானதுமான வழி நிலை நிறுத்தப்பட வேண்டும் பரப்பவும் வேண்டும். ‘வஸ்ஸலாம் வல் இக்ராம்’.

---

[1] இஸ்லாத்தின் ஆரம்பத்தில் இஸ்லாமிய கோட்பாடுகளில் இல்லாத நடைமுறை கள் அல்லது ஆன்மிக நடப்புகள் பின்னர் இஸ்லாத்தில் புகுத்தபட்டவைகள் பித்’ஆ என்று அழைக்கப்படும். எல்லா பித்’ஆக்களும் கெட்டவை அசிங்கமானவை.

## 4. மக்தூபாத் முதலாவது பாகம் 268வது கடிதம்

இந்தக்கடிதம் (kh)கான்-அல்-(kh)கானான் என்பவருக்கு எழுதப்பட்டது. இது நபிமார்களின் வாரிசு என்று சொல்லப்பட்ட அறிஞர்கள் யார் என்பதையும் , இரகசிய அறிவு எனபது என்ன என்பதையும் விளக்குகின்றது.

எல்லாப் புகழும் அல்லாஹுதஆலாவுக்கு இருக்கும்! அவன் தேர்ந்தெடுத்த அடிமைகளுக்கு ஸலாம்! இங்கே இருக்கும் ஃபக்கீர்கள் அல்லாஹுத ஆலா வை புகழும் மனநிலையிலேயே இங்கு இருக்கிறார்கள். நீங்கள் பாதுகாப்பாகவும், நல்ல ஆரோக்கியத்துடனும், சரியான வழியிலும் இருக்க பிரார்த்திக்கிறேன். எங்கள் தலைப்பு அறிவைப் பற்றிய மரபு என்பதால், கையில் இருக்கும் நேரத்தை அதிகபட்சமாகப் பயன்படுத்தி இன்னும் சில வார்த்தைகளை எழுதுகிறேன்,. ஒரு ஹதீத் ஷரீபில் கூறப்பட்டுள்ளது: “அறிஞர்கள் நபிமார்களின் வாரிசுகள்”. நபிமார்களால் ‘அலைஹி முஸ்ஸலவாத்து வதஸ்லிமாத்’ இரண்டு வகையான அறிவு வழங்கப்படுகிறது’

1. விதிகள் பற்றிய அறிவு; 2. இரகசிய அறிவு

ஒரு அறிஞர் ஒரு வாரிசாக இருப்பதற்கு இந்த இரண்டு வகைகளிலும் அவருக்கு பங்கு தேவை. ஒரு வகையான அறிவில் மட்டுமே பங்கு கொண்ட ஒரு அறிஞர் வாரிசாக இருக்க முடியாது. ஏனெனில், மரபுரிமையில் ஒரு

வாரிசுக்கு ஒவ்வொரு பொருளிலும் பங்கு இருக்கும். ஒரு வாரிசுக்கு ஒரு பொருளில் பங்கு இருக்க மற்றதில் பங்கு இல்லை என்ற கேள்விக்கு இடமில்லை .

ஒரு பொருளில் மட்டுமே பங்கு உள்ள சிலர் வாரிசு என்பதை விட கடனாளர் என்று அழைக்கப்படுவார்கள். கடன் வழங்குபவர் தனது சரியான பங்கை மட்டுமே பெறுவார். எங்கள் நபி"அலைஹிவஅலாஆலிஹிஸலாத்து வஸ்ஸலாம்" கூறினார்கள் **எனது உம்மாவில் (முஸ்லிம்கள்) மத்தியில் உள்ள அறிஞர்கள் இஸ்ரவேலர்களின் தீர்க்கதரிசிகளைப் போன்றவர்கள்."** இங்கு குறிப்பிடப்பட்டுள்ள அறிஞர்கள் பரம்பரை அறிஞர்கள், கடன் வழங்குநர்களைப் போன்றவர்கள் அல்ல. கடனாளிகள் மரபுரிமையின் ஒரு குறிப்பிட்ட பகுதியிலிருந்து தங்களுக்குக் கிடைக்க வேண்டியதை மட்டுமே பெறுவார்கள். ஏனெனில், (இறந்தவருக்கு) மிக நெருக்கமான வாரிசு,மற்றும் ஒரு சாட்சியாக (இச் செயல்களுக்கு) இருப்பது, மரபுரிமையை ஒப்படைத்த நபருடன் ஒத்ததாக இருக்கிறது. கடனாளியின் விஷயத்தில் அது இல்லை. அதேபோல், ஒரு வாரிசு அல்லாதவர் ஒரு அறிஞராக முடியாது. அவரை ஒரு குறிப்பிட்ட விஷயத்தில் ஒரு றிஞர் என்று கூறலாம். உதாரணமாக, அவர் ஃபிக்ஹுவின் அறிஞராக இருக்க முடியும்,

ஒரு அறிஞர் (இந்த அர்த்தத்தில்,) ஒரு வாரிசு, அவர் இரு வகையான அறிவிலும் பங்கு கொண்டவர். பலர் **'இல்ம்-அல்-அஸ்றார்'** (ரகசிய அறிவு) என்ற வார்த்தையை 'தவ்ஹீத்-அல்-வுஜூதி' என்று வியாக்கியானம் செய்கிறார்கள்[ஒன்றை அனைத்திலும் பார்ப்பது, மற்றது அனைத்தையும் ஒன்றாய் பார்ப்பது]என்று அவர்கள் சொல்கிறார்கள். இது பக்தர்களின்(சாலிஹ்களின் ) பரவச (ஹால்) நிலையின்போது உணரப்படும் அறிவு என்று கூறுகிறார்கள். அதை அவர்கள் இஹாதா (சுற்றம், சுற்றியுள்ளவை ), சரயான் (ஊடுருவல்), குர்ப் (நெருக்கம்), ம'இய்யத்(இணைப்பு), ஹாஷா( இந்த வித நம்பிக்கையை விட்டும் எங்களை அல்லாஹ் பாதுகாப்பானாக)! ஆனால் இப்படி அல்ல. இப்படியான அறிவு பகுதிகள் இரகசியமானவை அல்ல. அவை நபித்துவ தரத்திற்கு தகுதியான அறிவின் பகுதிகள் அல்ல. பக்தர்களின் பரவச(ஹால்) நிலை அடையும்போது இதுபோன்ற தசவ்வுஃபின் அறிவின் சில பகுதிகள் நிகழ்கின்றன. அவை நிதானமான மற்றும் நனவான மக்களால் பெறப்பட்ட அறிவின் பகுதிகள் அல்ல. நபிமார்களின் அறிவின் பகுதிகளைப் பொறுத்தவரை அவை இஸ்லாமிய விதிகளுக்கு உட்பட்டு, மற்றும் இரகசியமானவை தொடர்பானவை இரண்டும் நிதானமான மற்றும் நனவான அறிவின் பகுதிகள். அவை எதுவும் மயக்கத்தின் போது ஏற்படும் அறிவோடு கலக்கப்படவில்லை.

மயக்க நிலையின்போது ஏற்படும் அறிவு(தசாவ்ஃப்) விலாயத்துக்குரிய தரங்களுடன் செல்கிறது. ஏனெனில், வலிமார்கள்தான் பரவசநிலை மற்றும் தன்னை மறந்த நிலையில் உள்ளவர்கள். இந்த அறிவு அதிகபட்சமாக, விலாயத்தின் இரகசியங்களாக இருக்கலாம். அவை நுபுவத்தின் ரகசியங்கள் அல்ல. நபிமார்களும் விலாயத்தையும் வைத்திருந்தாலும், விலாயத் தொடர்பான விஷயங்கள் இந்த பெரிய மனிதர்களுக்கு மிகச்சிறிய

துணுக்குகளை ஒத்தவை; நபித்துவம் தொடர்பான விஷயங்களுடன் ஒப்பிடும்போது அவை வெறும் ஒன்றுமில்லை.

ஒரு பாரசீக கவிதை:

**சூரியன் உதிக்கிறது, எல்லா இடங்களும் பிரகாசிக்கின்றன;**
**அதன்போது காலை நட்சத்திரங்கள் காணப்படாது, நிச்சயமாக!**

அதை எனது புத்தகங்களிலும் கடிதங்களிலும் விளக்கியுள்ளேன். நான் மீண்டும் கூறுகிறேன் நபித்துவம் தொடர்பான தரங்களின் மேன்மை ஒரு சமுத்திரத்துக்கு ஒப்பானது. விலாயத் தொடர்பான தரங்கள் கடலுடன் ஒப்பிடுகையில் கடல் நீரின் சொட்டுகள். ஆனால் பல நபர்களை விலாயத் என்பது நுபுவத்தை (நபித்துவம்) விட உயர்ந்தது என்று சொல்வதைத் நான் எப்படி தவிர்ப்பது, இது நபித்துவம் தொடர்பான தரங்களை அவர்கள் அடையவில்லை என்பதால் இது (கண்மூடித்தனமான)ஆதாரமற்ற ஒரு கூற்று. அந்த மக்களில் பெரும்பாலோர் இந்த கூற்றை மாற்றியமைத்து, “தீர்க்கதரிசிகளின் விலாயத்து அவர்களின் நுபுவத்தை விட உயர்ந்தவர் என்று கூறுகிரார்கள். அந்த மக்கள் அனைவரும் நுபுவ்வத் என்ன என்பதை புரிந்து கொள்ளத் தவறிவிட்டார்கள். அவர்கள் எதைப்பற்றி கருத்து தெரிவிக்கிறார்கள் என்று தெரியாமல் ஒரு கருத்தை தெரிவித்தனர். ஸக்ரை [அதாவது மயக்கம் மற்றும் தன்னை மறந்த நிலை] சஹ்வை(நிதானத்தை)விட உயர்ந்தது என்று கருத்து தெரிவித்தவர்களும் இதே நிலைதான். அதாவது நிதானம்(சஹ்வ்) என்னவென்று அவர்கள் அறிந்திருந்தால், சஹ்வைப் பற்றிய உரையாடலில் ஸக்ரைப் பற்றி குறிப்பிட அவர்கள் கூட தயக்கம் காட்டியிருப்பார்கள்.
ஒரு பாரசீக வரி: **தூய்மையான உலகத்துடன் பூமியை எப்படி ஒப்பிட முடியும்?**

சஹ்வைவிட சக்ர் உயர்ந்தது என்று கூறுபவர்கள் சஹ்வையுடைய உயர்ந்த வர்களையும், அறிவு குறைந்தவர்களையும் சமமாக பார்த்ததன் விளைவாக இருக்க வேண்டும். அவர்கள் அப்படிச் சொல்லவில்லை என்று நான் விரும்புகிறேன். அவர்கள் அறியாதவர்களின் ஸக்ரை விரும்புவதன் விளைவாக உயர்ந்தவர்களுடயதை (சஹ்வை) சமமாக விரும்புகிறார்கள். ஏனென்றால், எந்த அறிவாளியும் ஞானியும் சஹவை(நிதானம்) சக்ரை(மயக்க நிலை) விடமேலானது என அறிந்து கொள்வார்கள். அறியாதவர்களின் சஹ்வும் உயர்ந்தவர்களின் சஹ்வும் இதே நிலைதான். நுபுவ்வத்தை விட விலாயத் மேலானது என்று கருதுவதும் சஹ்வை விட சக்ர் மேலானது என்று கருதுவதும், முஸ்லிம்களை விட நிராகரிப்பவர்கள் மேலானது என்று கருதுவதை ஒத்தது. நிராகரிப்பும் அறியாமையும் விலாயத்துக்கு ஒப்பீடு செய்யும்போது இஸ்லாமும் ம’ரிபாவும் நுபுவ்வத்தில் நடக்கின்றது. இதைத்தான் ஹல்லாஜ் அல்-மன்சூர் ‘கத்தசல்லாஹு சிர்ராகுல் அஸீஸ்’ பின்வரும் அரபிக்கவிதையில் உள்ளவாறு கூறுகிறார்கள்.

**நான் அல்லாஹ்வின் மதத்தை நம்பவில்லை; அவநம்பிக்கை தேவை;**
**முஸ்லிம்களுக்கு பிடிக்கவில்லை என்றாலும், இது தான் ஒரு உண்மை!**

முஹம்மது "அலைஹிஸ்-சலாம் அவநம்பிக்கையைத் தவிர்த்து, தன்னை அள்ளாஹுஃத ஆலா மீது நம்பிக்கை வைத்தார். சூரா பனி இஸ்ராயில் இன் 84வது ஆயத்து இவ்வாறு கூறுகிறது: **"அவர்களிடம் சொல்லுங்கள்: ஒவ்வொருவரும் அவரவர் மனநிலையின்படி செயல்படுகிறார்கள்**."

இஸ்லாத்தின் மீதான நம்பிக்கை இஸ்லாத்தில் நம்பிக்கையின்மையை விட சிறந்தது என்பதை அறிய வேண்டும். அதே போல், இஸ்லாமானது ஹகீகத்தில் நம்பிக்கையின்மையை விட சிறந்தது. ஹகீகத் (இஸ்லாத்தின் உள் இயல்பு). ஹகீகத்தின் வெளித்தோற்றம் இஸ்லாம்.

**கேள்வி**: விலாயத்தின் ஜம் எனப்படும் தரங்களில் குஃப்ர் (அவநம்பிக்கை), ஜஹ்ல் (அறியாமை) மற்றும் ஸக்ர் என்பன இருந்தபோதிலும் அதன் (உயர்) தரங்களான ஃபர்க் என்பதில் இஸ்லாம் , சஹ்வ் மற்றும் ம'ரிபா ஆகியவற்றுக்கு இடமளிக்கிறது. ஒருவர் சொல்லும் விலாயத்தில் இருக்கும் குப்ர்,சக்ர்,மற்றும் ஜஹ்ல் என்பவைகளை எந்த வகையில் மதிப்பிடுவது?.

**பதில்**: , சஹ்வ் மற்றும் அது போன்றவை ‛ஃபர்க் தரங்களில் சஹ்வ் ஆகும். அதேபோல் ஜம் என அழைக்கப்படும் தரங்களுடன் வரும் அடர்த்தியான சக்ருடன் ஒப்பிடுகையிலும். சஹ்வும் சக்ரும் இங்கு ஒன்றிணைக்கப்பட்டுள்ளன. இஸ்லாமும் குப்ரும் இந்த தரங்களில் ஒன்றிணைக்கப் பட்டுள்ளன. அதே போல் ம'ரிபாவும் ஜஹ்ல் (அறியாமை) உடன் பூசப்பட்டுள்ளது. எனவே எழுத முடிந்தால், ஃபர்க் எனப்படும் தரங்களில் உள்ள ம'ரிபாவின் நிலைகளைப் பற்றி நான் ஒரு நீண்ட வரையறையை வழங்குவேன். அதன் மூலம் சக்ரும் மற்றும் அது போன்றவை எப்படி அந்த தரத்தில்
உள்ள மற்றவர்களை கறை படுத்தி உள்ளன என்பதை விளக்குவேன். இதை பற்றி தீவிர நுண்ணறிவு உள்ளவர்கள் கவனமாக பரிசீலிப்பதனால் இந்த விஷயத்தைப் பற்றிய தெளிவான புரிதலுக்கு இட்டுச் செல்லும். இது ஆச்சரியமாக இருக்கிறது, இல்லை, மிகவும் ஆச்சரியமாக இருக்கிறது! உண்மையில்! நபிமார்கள் "அலைஹிமுஸ் ஸலவாத்து வ'தஸ்லிமாத்" அவர்கள் அனைவரையும் நுபுவ்வத்தின் வழியிலே எல்லா மகத்துவத்தையும் மேன்மை யையும் அடைந்தார்கள், விலாயத்தின் வழியில் அல்ல! என்று சொன்னால் போதுமானது. விலாயத் என்பது நபித்துவத்திற்கு சேவை செய்வதைத் தவிர வேறில்லை. விலாயத் நுபுவ்வத்தை விட உயர்ந்தவராக இருந்தால் மலக்குகளில் உயர்ந்தவர்களின் விலாயத் மற்றவர்களின் விலாயத்தை விட உயர்ந்தது என்பதால், நபிமார்களின் 'அலைஹிமுஸ் சலவாத்து வஸ்ஸலாம்' ஐ விட மலக்குகள் உயர்ந்தவர்களாக வேண்டும். ஆனால் அப்படி இல்லை.

விலாயத் நுபுத்துவத்தை விட உயர்ந்தது என்று கருதும் பெரும்பாலான மக்கள் 'மலக்குகளில் உயர்ந்தவரிடம் உள்ள விலாயத் நபிமார்களின் விலையத்தை விட உயர்ந்தது என்பதைக் கண்டு' "மலக்குகள் நபிமார்களை விட உயர்ந்தவர்கள்" என்று கூறியுள்ளனர். இந்த கருத்து அஹ்லுஸ்-சுன்னத் அறிஞர்களில் ('ரஹ்மத்துல்லாஹி' தஆலா அலைஹிம் அஜ்மான்') பெரும்பான்மையானவர்கள் கற்றுக்கொடுத்த வழியிலிருந்து வேறுபடுகின்றது. இதுபோன்ற தவறுகள் அனைத்தும் நுபுவ்வத் என்றால் என்ன என்பதைப்பிழையாக புரிந்து கொண்டதனால் ஏற்பட்ட முடிவுகள்.

நுபுவ்வத்தின் காலம் மீண்டும் நீண்ட காலங்களை கடந்து விட்டதால் பெரும்பாலானோர் நுபுவ்வத்தின் தரத்தை விலாயத்தின் தரத்தை விட குறைத்து கருதுகின்றனர்.அந்த விஷயத்தில், நான் காலதாமதம் செய்ய வேண்டியிருந்தது. நான் ஹகீகத் உள் ஒளி தர வேண்டும் என்று எதிர்பார்க்கிறேன்.

யா ரப்பி; தயவுசெய்து எங்கள் பாவங்களை மன்னிப்பாயாக! தயவுசெய்து எங்கள் கால்களை சரியான வழியில் நிலைப்படுத்துவாயாக! நம்பிக்கயாற்றவர்களுக்கு எதிரான எங்கள் போராட்டங்களுக்கு எங்களுக்கு உதவுவாயாக! ஆமீன்.

என் மதிப்புமிக்க சகோதரரான மெயான் ஷெய்க் தாவுத் உங்களைப் பார்க்கும் நோக்கத்தில் உடன் புறப்படவிருந்தார். . இந்த எழுத்துக்களுக்கு அவர்தான் காரணம். வஸ்ஸலாம்

## 5. அல்-இமாமுல் அஃ'லம் அபு ஹனீபா ரஹ்மத்துல்லாஹி அலைஹி

**காமுசுல் அஃ'லம்** எனும் நூல் கூறுகின்றது:

அல்-இமாமுல் அஃ'லம் அபு ஹனிபாவின் பெயர் நுஃ'மான். அவர் தந்தையின் பெயர் தாபித். தவர் பாட்டனார் பெயரும் நுஃமான். அவர்கள் அஹ்லுஸ்-ஸுன்னாவின் நான்கு பேர்களில் முதலாவது இமாம். **இமாம்** என்பது மிகவும் ஆழ்ந்த அறிவு பெற்ற அறிஞர் என்பது அர்த்தம். இவர்கள் முஹம்மது நபி ஸல்லள்ளாஹு 'அலைஹிஸ்-சலாம்' அவர்களின் மிகச்சிறந்த மார்க்கத்தின் அறிஞர்களில் ஒருவராக இருந்தார். அவர் ஒரு பாரசீக வம்சாவளி குறிப்பிடத்தக்கவர். அவரது பாட்டன் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டவர். அவர் கூபா வில் ஹிஜ்ரி 80 [698A.D.] இல் பிறந்தார். அவர்கள் இஸ்லாத்தின் ஆரம்ப காலத்திலே பிறந்ததால், அனெஸ் இப்னு மாலிக், 'அப்துல்லா இப்னு அபி அவ்பா, சஹ்ல் இப்னு ச'த்அஸ்-ஸாஇதி, அபு அல் பதல் ஆமிர் இப்னு வாசிலா, ஆகிய நன்கு சஹாபா ரலியள்ளஹு அன்ஹும் களை காணும் பாக்கியம் பெற்றவர்கள். இவர்கள் இல்முல் பிக்ஹை ஹம்மாத் இப்னு சுலைமான் இடமிருந்து கற்றுக்கொண்டார்கள்.

அவர் தாபியீன்களின் பல குறிப்பிடத்தக்கவர்களின் தோழமையையும், இமாம் ஜஃபர் அஸ்-சாதிக் 'ரஹ்மத்துல்லாஹி தஆலா அலைஹிவின் தோழமையையும் பெற்றார்கள். அவர் எண்ணற்ற ஹதீஸ்களை மனப்பாடம் செய்தார். அவர் ஒரு சிறந்த நீதிபதியாக ஆகவரவேண்டும் என வளர்க்கப்பட்டார், ஆனால் அவர் ஒரு இமாமல்-மத்ஹப் ஆனார். அவருக்கு அதி உயர்ந்த அதிசயிக்க தக்க புத்திக்கூர்மையை பெற்றிருந்தார். இல்முல் பிக்ஹில் அவர் குறுகிய காலத்தில் அதி உன்னத, மற்றவர்களால் எட்ட முடியாத தரத்தை அடைந்தார். அவரது பெயரும் புகழும் உலகம் முழுவதும் பரவியது.

உமய்யத் கிலாபத்தின் கடைசி 14ஆம் கலீபாவாக இருந்த மர்வான் இப்னு முஹம்மத், (இவர் மர்வான் இப்னு ஹகம் ரஹ்மாதுல்லாஹி த ஆலா அன்ஹு அவர்களின் பேரன், ஐந்து வருட ஆட்சியின் பின் எகிப்தில் 132[750A.D.இல் கொல்லப்பட்டார்.) காலத்தில் இராக்கின் கவர்னராக இருந்த யஸீத் இப்னு அம்ர் இமாம் அவர்களை கூபாவின் நீதிபதியாக பொறுப்பேற்க்குமாறு வேண்டிக்கொண்டார். ஆனால், அவருக்கு அறிவு, புத்தி இருந்த அளவுக்கு '**Zசுஹ்த்','தக்வா**'மற்றும்'**வரா**',இருந்த காரணத்தினால், அவர்கள் அதை மறுத்துவிட்டார்கள். மனித பலவீனங்களால் மனித உரிமைகளைப் பாதுகாக்க முடியாது என்று அவர் பயந்தார். மறுத்ததின் காரணமாக யஸீதின் கட்டளையின் பேரில், அவருக்கு, தலையில் நூற்றுபத்து சவுக்கடி வழங்கப்பட்டது. அவரது ஆசீர்வதிக்கப்பட்ட முகமும் தலையும் வீங்கியது. அடுத்த நாள், யஸீத் இமாமை வெளியே அழைத்துச் சென்று தனது வாய்ப்பை மீண்டும் கூறி கட்டாயப்படுத்தினார். இமாம் அவர்கள் "நான் ஆலோசிக்கிறேன்" என்று கூறிவிட்டு வெளியேற அனுமதி பெற்றார். அவர் அருள் நிறைந்த நகரமான மக்காவுக்குச் சென்று ஐந்து அல்லது ஆறு ஆண்டுகள் அங்கேயே தங்கி இருந்தார்கள். அங்கு 'அப்பாசித் கலீஃபா அபு ஜாஃபர் மன்சூர்' ரஹ்மத்துல்லாஹிதஆலா அலைஹ்' அவரை ஹிஜ்ரி 150 [767A.D.] இல் மேல் முறையீட்டு நீதிமன்றத்தின் தலைவராக இருக்குமாறு கட்டளையிட்டார். அவர் அதை மறுத்து சிறையில் அடைக்கப்பட்டார். அவர் சவுக்கடிக்கு ஆளானார், ஒவ்வொரு நாளும் பத்து பத்தாக அதிகரித்து சவுக்கடிகளின் எண்ணிக்கை நூறை எட்டியபோது, அவர் ஷஹீதானர். மலிக்ஷாவின் பார்வையாளர்களில் ஒருவரான அபுஸ'த் முஹம்மது

இப்னு மன்சூர் அல்-ஹரிஸ்மி 'ரஹ்மத்துல்லாஹிதா'அலைஹி', (447-485A.H., மூன்றாவது செல்ஜுக்கி சுல்தானும் சுல்தான் அல்பர்ஸ்லானின் மகனும்) அவரது கல்லறைமீது ஒரு அற்புதமான குவிமாடம் கட்டினார்கள் . அதன் பிறகு ஒட்டோமான் பேரரசர்கள் அவரது கல்லறையை பல முறை புதுப்பித்து அழகுபடுத்தினார்கள்.

இவர்கள் முதன் முதலில் இல்முல் பிக்ஹை பிரிவுகளாக வகுத்தவரும் அதன் ஒவ்வொரு பிரிவுக்கும் அறிவைத் தொகுத்தவருமாவார். **பராயித்**, **ஷுரூத்**,எனும் நூல்களை எழுதினார்கள். எண்ணற்ற நூல்கள் அவர்களின் பரந்த பிக்ஹு கல்வியறிவையும் கியாசில் அவர்களின் அதிசயிக்கத்தக்க ஆற்றலையும் காட்டுகின்றன. அவர்களின் உலகப்பற்றற்ற தன்மை, இறைபக்தி, அடக்கம், நேர்மை என்பவற்றையும் விளக்குகின்றன. அவர்களின் அநேக சீடர்கள் மிகச்சிறந்த முஜ்தஹித்களாக விளங்கினர்.

துருக்கிய சக்கரவர்த்திகளின் காலத்தில் ஹனபி மத்ஹப் உலகின் பல பாகங்களிலும் பரவியது. அன்றியும் அந்நாட்டின் அரசியல் மதுஹபாகவும் இருந்தது. இன்று உலக முஸ்லிம்களின் அரைப்பங்கினர் இந்த அஹலுஸ்ஸுன்னத் மத்ஹபைபின்பற்றி அதன்படியே இபாதத்துகளை செய்து வருகின்றார்கள். **காமுசுல் அஃ'லத்தில்** இருந்து எடுக்கப்பட்ட குறிப்புகள் இத்துடன் முடிகின்றது.

மிர் அதுல் காயிநாத்என்ற நூலில் கூறுகிறது: இமாமுல் அஃலத்தின் மூதாதையர் ஈரான் பார்சி மாகாணத்தை சேர்ந்தவர்கள். அவர்களுடைய தகப்பன் தாபித் ஹசரத் அலி ரலியள்ளாஹு அன்ஹு அவர்களை கூபாவில் சந்தித்தார்கள். அங்கு அவர் அலி ரலியள்ளாஹு அன்ஹு அவர்களிடமிருந்து தனது சந்ததியினரைப் பற்றி ஒரு அழகான செய்தியை பெற்றார். இமாமுல் அஃலம் அவர்கள் தாபிஈன்களில் மிகப் பெரியவர். அவர்கள் மூன்று அல்லது ஏழு சகாபாக்களை கண்டு அவர்களிடம் ஹதீது பயின்று இருக்கிறார்கள்.

ஒரு ஹதீது அல் இமாம் அல் ஹாரிஸ்மி அவர்கள் ஹஸ்ரத் அபு ஹுரைரா ரலியல்லாஹு த ஆலா அன்ஹு அவர்களிலிருந்து தொடரான இஸ்னத் முத்தசில் (சங்கிலித்தொடர் அறுபடாத அறிவிபாளர்கள்) அறிவிக்கிறார்கள். **“எனது உம்மத்தில் அபு ஹனீபா என்று ஒருவர் வருவார், மீள எழுப்பும் நாளின்போது அவர் எனது உம்மாவின் ஒளியாக இருப்பார்.”**

இன்னொரு ஹதீது ஷரீப் கூறுகிறது” **நுஃ'மான் இப்னு தாபித் அபு ஹனீபா என்று அழைக்கப்படக்கூடிய ஒரு மனிதர் தோன்றுவார். அவர் அல்லாஹுவின் மார்க்கத்துக்கும் எனது சுன்னத்துகளுக்கும் புத்துயிர் அளிப்பார்”**

இன்னும் மொரு ஹதீது கூறுகிறது: **“எனது உம்மத்தில் ஒவ்வொரு நூற்றாண்டிலும் பலர் உயரிய வரிசையில் தோன்றுவர். அபு ஹனீபாவின் காலத்தில் அவர் மிகச்சிறந்தவர்”.**

இந்த மூன்று ஹதீதுகளும் **மவ்துா ஆத் அல்உலூம்** என்ற கிதாபில் கூறப்பட்டுள்ளன. பின் வரும் ஹதீதும் மிக பிரசித்திபெற்றது: “**எனது உம்மத்தில் அபு ஹனீபா என்று அழைக்கப்படகூடியவர் தோன்றுவார். அவருடைய தோள்களுகிடையில் ஒரு அழகான மச்சை இருக்கும் அல்லாஹ் அவனது மார்க்கத்துக்கு இவர் மூலம் புத்துயிர் அளிப்பான்.”**

துர்ருல் முக்தார் முகவுரையில் ஒரு ஹதீது எழுதப்பட்டுள்ளது. அது கூறுகிறது, “**ஹசரத் ஆதம் அலைஹிஸ் ஸலாம் என்னைப்பற்றி பெருமை பாராட்டு கின்றார்; நான் எனது உம்மத்தில் நுஃ'மான் என்று அழைக்கப்படும் அபு ஹனீபா வைப்பற்றி பெருமைப்படுகிறேன். அவர் எனது உம்மத்தில் ஒளி போன்றவர்.**” இன்னுமொரு ஹதீது கூறுகின்றது: **“நபிமார்கள் என்னை பெருமை பாராட்டு கிறார்கள், நான் அபு ஹனீபாவை பெருமை பாராட்டுகின்றேன். யார் அவரை நேசிகின்றாரோ அவர் என்னை நேசிப்பவர் ஆவார். யார் அவருடன் பகை படுகின்றாரோ அவர் என்னிடம் பகை பாராட்டுகின்றார்.**” இந்த ஹதீதுகள் அபுல் லைத் அஸ்ஸமர்கந்தி அவர்களின் **அல்-முகத்திமாவில்**

கூறப்பட்டுள்ளது. அத்துடன் அவரால் அணிந்துரை வழங்கப்பட்ட **தகத்துமா** என்ற கிதாபிலும் காணப்படுகின்றது. பிக்ஹு கிதாப் **அல் முகத்திமா**வுக்கு அல் கஸ்ஸாலி எழுதிய முகவுரையிலும் இமாமுல் அஃ'லத்தை புகழும் ஹதீதுகள் எழுதப்பட்டுள்ளன.

காதி **அபி-அல்-பகா** அவர்கள் **தியா-அல்-ம'ஃணவி**க்கு விமர்சனம் எழுதுகையில் அபுல்-பறஜ்-அப்துர் ரஹ்மான் இப்னு அல்-ஜவ்சி அவர்களைத் தொடர்ந்து அல்- காத்திப்-அல்-பகுதாதி இந்த ஹதீதுகள் மவ்து ஆனது என்று கூருகிறார். பல தொடர்சசியான அறிவிப்பாளர்கள் இந்த ஹதீதுகளை அறிவித்திருப்பதால் அவருடைய கருத்து மளுங்கலானது. இப்னு ஆபிதீன் **துர்ருல்-முக்தாருக்கு** எழிதிய விமர்சனத்தில் இந்த ஹதீதுகள் மவ்லு அல்ல என்று நிரூபித்துள்ளதுடன் பின்வரும் ஹதீதையும் **அல்-ஹைராத்-அல்-ஹிஸான்** என்ற இப்னு ஹஜர் அல் மக்கியால் எழுதப்பட்ட ஹதீது நூலிலிருந்து குறிபிட்டுள்ளார். **"உலகின் ஆபரணம் நூற்றி ஐம்பதில்(150) எடுபட்டுவிடும்"** மிகப்பெரிய பிக்ஹு மேதை சம்சுல் அ'இம்மா அப்துல் ஃகப்பார் அல்-கர்தாரி [ஹிஜ்ரி 562] கூறுகிறார்கள். இந்த ஹதீது இமாமுல் அஃ'லம் அபு ஹனீபா அவர்கள் மறைந்த ஹிஜ்ரி 150ஐ யே குறிகின்றது. புகாரியிலும், முஸ்லிமிலும் பின் வரும் ஹதீது எழுதப்பட்டுள்ளது. **"ஈமான் ஆனது வெள்ளிக் கிரகத்திற்கு சென்றுவிட்டாலும் பாரசீக சந்ததியில் உள்ள ஒருவர் அதை திருப்பி கொண்டு வருவார்".** அறிஞர் அஸ் ஸுயூத்தி இந்த ஹதீது ஏகமனதாக இமாமுல் அ'லத்தையே குறிப்பதாக குறிப்பிட்டுள்ளார். நுஃ'மான் அலூசி அவர்களின் '**காலிய்யா**' என்ற நூலில் எழுதுகிறார்கள் இந்த ஹதீது இமாம் அபு ஹனிபாவை குறிக்கிறது, அவருடைய பாட்டன் பாரிசை சேர்ந்தவர் என்று கூறுகிறார்.

ஹம்பலி அறிஞர் அல்லாமா யூசுப் தனது **தன்வீரு அஸ்-ஸஹீபா** எனும் நூலில் ஹாபிஸ் அல்லாமா யூசுப்இப்னுஅப்துல் பர் (ஹிஜ்ரி 368-463) [ காதி லிஸ்பன் போத்துகல்]அவர்கள் கூறியதாக "அபு ஹனீபாவை அவமரியாதை செய்யாதீர். அவரை அவமதிப்பவரையும் நம்பாதீர். நான் அல்லாஹ்வின் ஆணையாக சொல்கிறேன் ஹறாமை விலக்குவதிலும் கல்வியறிவிலும் அவர்களை விட சிறந்த மனிதரை நான் அறிந்ததில்லை."என்று கூறுகிறார். காத்திபுல் பாக்தாத் சொன்னதை நம்பாதீர்கள். இவர் இஸ்லாமிய அறிஞர்களை வெறுப்பவர். அவர் இமாம் அபு ஹனிபாவையும், இமாம் அஹமதையும் அவர்களின் சீடர்களையும் நிந்திக்கின்றார். இஸ்லாமிய அறிஞர்கள் அறிஞர் காதிபை நிராகரித்ததுடன் கண்டனமும் வெளியிட்டுள்ளார்கள். இப்னு அல் ஜவ்சியின் பேரன் அல்லாமா யூசுப் சம்சுதீன் அல் பக்தாதி தனது 40 பாகமுள்ள **மிர்'அத் அஸ்-ஸமானில்** தனது பாட்டன் காதிபை பின்பற்றுவதை பற்றி வியப்புறுவதாக எழுதியுள்ளார்கள்.

மாமேதை இமாம் கஸ்ஸாலி அவர்கள் தனது **இஹ்யா** வில் இமாமுல் அஃ'லத்தை ஆபிது, ஸாஹிது, அல்ஆரிபுபில்லாஹ் எனப்புகழ்ந்து இருக்கிறார்கள். சஹாபாக்களும், இஸ்லாமிய அறிஞர்களும் ஒருவருக்கொருவர் வித்தியாசமான கருத்தை கொண்டிருந்தால் ஒருவர் கூறியது மற்றவர் ஏற்றுக்கொள்ளவில்லை என்றோ அவர்கள் ஒருவருக்கொருவர் இணக்கமடயவில்லை என்றோ அவர்கள் ஒருவருக்கொருவர் விரும்பவில்லை என்றோ கருத்தல்ல. முஜ்தஹிதுகள்

அல்லாஹ்வுக்காகவும் மார்கத்துக்கு சேவை செய்வதற்காகவுமே முரண்படுகின்றனர்[1].

ஒரு அறிஞர் ரஸூலுல்லாஹ் சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்களை கனவில் கண்டு. " அபு ஹனீபாவின் அறிவைப்பற்றி என்ன சொகிரீர்கள் நாயகமே என்று கேட்டார், அதற்கு ரஸூலுல்லாஹ் சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்கள் "**அவரது அறிவு எல்லோருக்கும் அவசியம்**" என்று பதில் அளித்தார்கள். இன்னுமொரு இமாம் நபி ரஸூலுல்லாஹ் சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்களிடம்'கூபாவில் வாழும் அந்த நு'மான் இப்னு தாபிதை பற்றி என்ன சொல்கிறீர்கள் என்று கேட்டார்.அதற்கு அவர்கள் **அவரிடமிருந்து கற்றுக்கொண்டு அதன்படி ஒழுகுங்கள். அவர் மிகவும் சிறந்த மனிதர்.** என்று கூறினார்கள்.

ஹசரத் அலி ரலியள்ளாஹு அன்ஹு அவர்கள் கூறினார்கள் கூபாவில் வாழப்போகும் அபு ஹனிபாவைபற்றி கூறட்டுமா, அவரது இதயம் அறிவாலும் ஹிகுமத்தாலும் நிரம்பியிருக்கும். உலக முடிவு நாளின் பொது அநேக மக்கள் அவரை மதிக்காததனால் ஷீயாக்கள் களைப் போல் அழிந்து போவார்கள். ஏனெனில் அவர்கள் ஹசரத் அபுபக்கர், ஹசரத் உமர்,ரலியல்லாஹு அன்ஹுமா அவர்களையும் மதிப்பதில்லை.

இமாம் முஹம்மது அல் பாகிர் இப்னு செயன் அல்-ஆபிதீன் அலி இப்னு ஹுசைன், ரலியல்லாஹு அன்ஹும் [ஹிஜ்ரி 57-113]இல் மதீனா அப்பாஸ் அவர்களின் சியரத்தில் அடாக்கம் செய்யப்பட்டவர்கள்]அவர்கள் அபு ஹனிபாவைப்பர்த்து கூறினார்கள் என்னுடைய மூதாதையரின் மார்க்கத்தை அழிப்பவர்கள் அதிகரிக்குபோது நீர் அதற்கு புத்துயிர் அளிப்பீர். பயந்தவர்களாக இருப்போருக்கு பாதுகாவலனாகவும், குளம்பியவர்களுக்கு அடைக்கலமாகவும் வழிதவறிய வர்களுக்கு நேர் வழியை காட்டிச்செல்வீர். அல்லாஹு த ஆலா உமக்கு உதவி செய்வான் என்று வாழ்த்தினார்கள்.

இமாமுல் அஃலம் இளமைபருவத்திலே இல்முல் கலாமையும் மஃ'ரிபாவையும் கற்றதுடன் மிகவும் வல்லுனராக விளங்கினார்கள். ஹசரத் ஹம்மாது அவர்கக்கு 28 வருடங்கள் சேவை செய்து முதிர்ச்சி அடைந்தார்கள். ஹம்மாது அவர்கள் காலமான பொழுது இமாம் அவர்கள் முஜ்தஹிதாகவும் முப்தியாகவும் ஆனார்கள். இவர்களின் கல்வியும் மேன்மையும் உலகெங்கும் பரந்தது. சீரிய பண்பு, விவேகம், புத்திக்கூர்மை, சுஹுது, தக்வா, நம்பகத்தன்மை, அறிவு தயாரான நிலை, இஸ்லாத்தில் பற்று, துய்மை, என்னும் எல்லா தரங்களிலும் எல்லாவற்றிலும் பூரணத்துவம் பெற்றிருந்தார்கள். இவர்களிடம் கற்றவர்களும் சமகால அறிஞர்களும்
உயர்மக்களும் கிறிஸ்தவர்கள் தாமும்கூட இமாமுல் அஃலத்தை மெச்சினார்கள். பிக்ஹு கல்வியுடயவர்களும் எல்லோரும் அபுஹனிபாவின் பிள்ளைகள் என்றும், நான் அபு ஹனிபாவில் ஆத்மாவிலிருந்து ஆத்மீக சக்தியை பெறுகிறேன் என்றும், நான் ஒவ்வொரு நாளும் அவர்களின் கப்ரை பார்க்க செல்கிறேன், நான் கஷ்டத்திலி ருக்கும்போது அவர்களின் சமாதிக்கு சென்று இரண்டு ரக்க அத்துகள் தொழுது அல்லாஹ்விடம் மன்றாடுவேன். நான் கேட்டதை அல்லாஹ் எனெக்கு தருவான் என்று இமாம் ஷாபி ரஹீமஹுல்லாஹு அலைஹி அவர்கள் கூறுகின்றார்கள். இமாம் ஷாபி

அவர்கள் இமாம் முகம்மதுவின்[2] சீடர் ஆவார்கள். இமாம் முஹம்மது இமாம் அபு ஹனிபாவின் சீடராவார்கள்.

[1] **Endless Bliss** 2ஆம் பாகத்தில் விளக்கப்பட்டுள்ளது இல்முல் உசூலில் **மவ்ளூ ஹதீத்** என்பது பிழையானது என்றோ புதிதாக கட்டப்பட்டது என்றோ அர்த்தமல்ல.

[2] இம்மாம் அழ அஃலத்தின் இரண்டு தலைசிறந்த மாணவர்கள்;இமாம் முஹம்மத் அஷ் ஷைபாணி, மற்றும் அபு யூசுப் ரஹ்மாதுல்லாஹி த ஆழ அலைஹிம்

அல்லாஹ் எனக்கு இருவர் மூலமாக கல்வியை தந்தான் . நான் ஹதீது கற்றது ஸுபியான் இப்னு உயானாவிடம், பிக்ஹு கற்றது முஹம்மது அஸ் சைபானி யிடமாகும் என ஷாபிஈ ராஹிமஹுல்லாஹு அன்ஹு அவர்கள் கூறினார்கள். பூமியில் உள்ளவர்களின் மார்க்ககல்வியிலும் உலக விவகாரத்திலும் நான் ஒருவரை மிகவும் மதிக்கின்றேன். அவர்தான் இமாம் முஹம்மது. இமாம் முகம்மதுவிடம் கற்றதைக்கொண்டு ஒரு ஒட்டகம் சுமக்கக்கூடிய நூல்களை எழுதியுள்ளேன். அவர்கள் எனது ஆசிரியராக இல்லாவிட்டால் நான் ஒரு கல்வியையும் கற்றிருக்க முடியாது. எல்லா கல்வியுடைய மனிதர்களும் ஈராக்கிய அறிஞர்கள். இவர்கள் கூபா அறிஞர்களின் பிள்ளைகள் கூபா அறிஞர்கள் இமாம் அபு ஹனிபாவின் பிள்ளைகளாகும்.

இமாம் அபு ஹனிபா அவர்கள் நான்காயிரம் பேரிடமிருந்து கல்வியை கற்றார்கள். இமாமுல் அஃ'லத்தின் மேன்மையையும் கீர்த்தியையும் பற்றி ஒவ்வொரு நூற்றாண்டிலும் இருந்த அறிஞர்கள் பல நூல்களை எழுதியுள்ளார்கள். ஐந்து லட்சம் மார்க்க பிரச்சினைகளுக்கு ஹனபி மதுஹபில் தீர்வுகள் காணப் பட்டுள்ளது.

அல்-ஹாபிஸ் அல்-கபீர் அபூபக்கர் அஹமத் அல்-ஹாரிஸ்மீ அவர்கள் தனது **முஸ்னது** எனும்.நூலில் கூறுகிறார்கள். சைப் அல்-அ'இம்மா அவர்கள் தெரிவிப்பதாக, இமாம் அல்- அஃ'லம் அபு ஹனிபா அவர்கள் குர்'ஆண் அல்-கரீமிலிருந்தும் ஹதீத் ஷரீபிலிருந்தும் விசயங்களை எடுத்து தனது ஆசிரியர்களிடம் சமர்பிப்பார்கள். அவர்கள் அதைப்பார்த்து உறுதி படுத்தும்வரை அந்த பதிலை கேட்டவருக்கு கொடுக்க மாட்டார்கள். அவர்கள் கூபா நகரத்தின் பள்ளியில் கற்பிக்கும்போது ஆயிரம் மாணவர்கள் அவரிடம் பயின்றார்கள். அதில் 40 பேர் முஜ்தஹிதுகளாகும். இமாம் அவர்கள் விடைகளை பெற்று அவற்றை தனது மாணவர்களுக்கு கொடுத்து அவற்றை படிக்க கொடுப்பார்கள். மாணவர்கள் எல்லோரும் அதை குர்ஆன் மற்றும் ,ஹதீத் ஷரீபுடனும். சஹாபாக்களின் சொல்களுடனும் பரிசீலுத்து பார்த்து அவை சரி என்று கண்டதும், மகிழ்ச்சியுற்று, பின்வருமாறு கூறுவார்கள். "அல்-ஹம்து லில்லாஹ் வால்லாஹு அக்பர்"' இதை மற்றவர்களும் கூறுவார்கள். பின்னர் இதை எழுதிகொள்ளுமாறு மாணவர்களிடம் கூறுவார்கள்.

ரத்தல் வாஹ்ஹாபி[1] எனும் நூலில் எழுதப்பட்டுள்ளது. **முஜ்தஹிது** ஆவதற்கு முதலில் அரபி பாசையிலும் மற்றும் பல்வேறு மொழி ஞானமான அவ்தா, ஸஹிஹ், மர்வி, முதவாத்திர்; ரத்தின் வழிகள், மவ்து, சொல்லாண்மை(vocabulary), பாஸிஹ், ராதி மற்றும் மஸ்மூன் அமைப்புகள், முப்ராத், ஷாத், நாதிர், முஸ்த'மல், முஹ்'மல், மு'ராப், ம'ரிபா, இஸ்திகாக்,

ஹகீகா, மஜாஸ், முஸ்தராக், இஸ்தாத், முத்லக், முகய்யத், இப்தால், மற்றும் கல்ப் ஆகிய வாய்களில் விசேட ஞானம் பெற்று இருக்க வேண்டும். அடுத்து சர்பு, நஹ்வு, ம'ஆனி, பயான், பாதி , பலாஃகத், இல்முல் உசூலுல் பிக்ஹ, இல்முல் உசூல் அல்ஹதீத் இல்ம் அல் உசூல் அத் தப்சீர், மற்றும் ஜர்ஹ மற்றும் த்'தீல் இமாம்களின் கூற்றுக்களை மனனமிட்டிருக்க வேண்டும். **பகீஹ்** ஆகுவதற்கு இவைகளுக்கு மேலதிகமாக ஒவ்வொரு விடயங்களுக்கும் அவற்றுக்குரிய ஆவணங்களை தொகுத்தல் பொருளை அறிந்து கொள்ளுதல், முராத் மற்றும் த'வீல். முஹத்திது என்பது ஹதீதின் அறிஞர், அவர் கேட்கும் ஹதீதுகளை மனனம் இடுவார். அவருக்கு அதன் பொருளை அறிவது , முராத்,

________________

[1] முதல்லாவது வெளியீடு இந்தியாவில் ஹிஜ்ரி 1264இல் . மீள் பதிவு இஸ்தான்புளில் ஹிஜ்ரி 1401 (1981A.D)

த'வில், அல்லது ஆவணங்களில் (proof-texts)ஐ விளங்க வேண்டிய அவசியமில்லை. ஒரு ஹதீதில் விடயத்தில் பகீஹும் முஹத்திதும் முரண்பட்டால் , உதாரணத்திற்கு; முஹத்தித் சஹிஹ் என்றும் மற்றவர் ளயீப் என்றும் கூறினால் பகீஹின் வாதம் ஏற்றுக்கொள்ளப்படும். ஆகவே; இமாமுல் அஃ'லமின் வாதம் அல்லது தீர்ப்பு மற்றவர்களை விட மிகவும் பலம் பொருந்தியது. ஏனெனில் அவர் முதலாவது முஜ்தஹிதும் மிக மேன்மையான பகீஹுமாவார். அத்துடன் ஹதீதுகளை இடைநிலை அறிவிப்பாளர் இன்றி நேரடியாக சஹாபக்களிடம் இருந்து கேட்டவர். ஒரு ஹதீதைப்பற்றி இமாம் அவர்கள் சஹீஹ் என்று கூறினால் அது மற்ற எல்லா அறிஞர்களாலும் ஏற்றுக்கொள்ளப்படும். ஒரு முஹத்தித் பகீஹ் உடைய தரத்தில் இல்லை.அவர் ஒரு மதுஹபுடைய இமாமின் தரத்திற்கு வரவே முடியாது.

அப்துல்லாஹ் அத் தஹ்லவி என்பவர் ஒரு ஹதீதுடைய அறிஞர்.அவர் தனது **சிராத்தல் முஸ்தகீம்** என்ற நூலில் இமாம் ஷாபி'ஈ அவர்கள் ஆவணமாக எடுத்துக்கொண்ட ஹதீதை இமாம் அல் அஃ'லம் அபு ஹனிபா எடுக்கவில்லை என்று குறிப்பிட்டுள்ளார். இதை பார்த்து லா-மதுஹபினர் இமாமுல் அஃ'லம் ஹதீது ஷரீபை பின்பற்றவில்லை என்று கூறுகின்றனர். ஆனால், இமாமுல் அஃலம் அவர்கள் வேறு ஒரு பலமான நம்பகத்தன்மை கூடிய ஹதீதை ஆதாரமாக எடுத்துள்ளார்கள்.

ஒரு ஹதீது ஷரீப் கூறுகின்றது. **"எனது உம்மாவில் மிகவும் பெறுமதியானவர்கள் என்னுடைய காலத்தில் வாழ்பவர்கள். அடுத்த பெறுமதியானவர்கள் இவர்களுக்கு அடுத்து வருபவர்கள் , அதற்கும் அடுத்து பெறுமதியானவர்கள் அதற்கும் அடுத்து வருபவர்கள்"** என்று கூனார்கள்.

இந்த ஹதீது தாபிஊன்கள் தப அத்தாபிஊன்களை விட சிறந்தவர்கள் என்று காட்டுகின்றது. இஸ்லாமிய அறிஞர்கள் எல்லோரும் இமாம் அல் அஃலம் அபு ஹனிபா அவர்கள் சில சஹாபாக்களை கண்டுள்ளார்கள் அவர்களிடம் கற்றுள்ளார்கள் என்றும் அவர்கள் தாபிஊன்களில் ஒருவர் என்றும் ஏற்றுக்கொள்கிறார்கள். உதாரணத்திற்கு; இமாம் அல் அஃலம் அவர்கள் பின்வரும் ஹதீதைக் அப்துல்லைக் இப்னு அவ்பா என்ற சஹாபியிடம்

இருந்து கேட்டுள்ளார்கள்; **“அல்லாஹ்வுக்காக ஒரு மஸ்ஜிதை கட்டுபவனுக்கு அல்லாஹ் சுவர்க்கதில் ஒரு மாளிகையை கட்டுகிறான்.”**

ஷாஃபி'ஈ மதுஹபை அறிஞர் ஜலாலுதீன் அஸ் சுயூத்தி அவர்கள் தனது தபியீத் அஸ்ஸஹீஃபா என்ற நூலில் ஷாஃபி'ஈ மதுஹபின் அறிஞர் அல் இமாம் அப்துல் கரீம் இமாமுல் அஃலம் அபு ஹனீஃபா அவர்கள் சந்தித்த சகாபாக்களை பற்றி ஒரு தனி கிதாபையே எழுதி உள்ளார்கள். துர்ருல் முக்தார் என்ற நூலில் அவர்கள் ஏழு சஹாபாக்களை கண்டுள்ளாதாக எழுதி உள்ளார்கள். நான்கு மதுஹபுடைய இமாம்களில் இமாமுல்அஃலம் அபுஹனீஃபா மட்டுமே தாபிஊன்களில் உள்ளவர்.

**இல்முல் உசூலில்** விடயம் ஒன்றை ஏற்றுக் கொள்பவர்களின் அறிக்கை அவ்விடயத்தை ஏற்றுக்கொள்ளாமல் நிராகரிப்பவர்களின் அறிக்கையை விட விரும்பப்படும் என்பது ஒரு விதியாக இருக்கின்றது. இமாமுல் அஃலம் அவர்க தாபிஊன்களில் ஒருவர் என்பது அ'இம்மதுல் மாதஹிபில் மிக உயர்ந்த ஸ்தானத்தை குறிக்கின்றது என்பது வெளிப்படை. லா-மதுஹபிக்கள் இமாமுல் அஃலம் அவர்களின் மேன்மையை மறுப்பதுடன், அவர்கள் ஹதீதின் அறிவில் ஹஸ்ரத் அபூபகர், ஹஸ்ரத் உமர் 'ரலியல்லாஹு தஆலா அலைஹும் போன்று பலவீனமானவர் என்றும் கூறுகிறார்கள். அவர்களின் இவ்வாறான வக்கிரமான மறுப்பு போதனைகள் மூலமோ புத்திமதிகள் மூலமோ திருத்தக்கூடிய நோய் அல்ல. அல்லாஹு தஆலா சுகப்படுத்தட்டுமாக!. ஹஸ்ரத் உமர் ரலியல்லாஹு த ஆலா அன்ஹு அவர்கள் குத்பா உரையில் " ஓ முஸ்லிம்களே! நான் உங்களுக்கு சொல்லுகின்ற மாதிரி ரசூளுள்ளா சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் ஒரு முறை எங்களுக்கு குத்பா'வில் கூறினார்கள். **“மிகவும் சிறந்த பயனுள்ளவர்கல் எனது சஹாபாக்கள். அவர்களுக்குப்பின் மிக சிறந்தவர்கள் அவர்களுக்கு பின்னர் வரக்கூடியவர்கள், அதன் பின்னர் சிறந்தவர்கள் அவர்களுக்கு பின்னர் வரக்கூடியவர்கள். அதன் பின் வரக்கூடியவர்களில் பொய்யர்கள் தோன்றுவார்கள்**” என்று கூறினார்கள். முஸ்லிம்கள் இன்று பின்பற்றி நடக்கும் நான்கு மதுஹபுகள் ரசூலுள்ளாஹ்வினால் மிக சிறந்தவர்களின் என்று கூறப்பட்டவர்களின் மதுஹபுகள் ஆகும். இஸ்லாமிய அறிஞர்கள் ஏகமனதாக கூறியுள்ளார்கள் இந்த நான்கு மதுஹபுகளை தவிர வேறு எதையம் பின்பற்றுவது அனுமதிக்கப்படவில்லை என்று.

**பஹ்ர்-அர்-றாயிக்** எனும்நூலின் ஆசிரியர் இப்னுநுஜைம் அல்மிஸ்ரி ரஹ்மதுல்லாஹி தஆலா அலைஹி அவர்கள் தனது '**அஸ்பாஹ்**' என்பதில் “ஹசரத் இமாம் அஸ் ஷாபி'ஈ அவர்கள் 'பிக்ஹு உடைய அறிவில் உயர்ச்சி அடைய விருபுபவர் இமாம் அபு ஹனிபாவின் நூற்களை பார்க்கட்டும்' என்று கூறினார்கள். மிகப்பெரும் அறிஞர் மேதை மிஸ்ஆர் அவர்கள் இமாம் அபு ஹனிபாவுக்கு முன் மண்டியிட்டு தான் அவர்களுக்கு தெரியாததை இமாமுல் அஃலத்திடம் கேட்பார்கள்.

இவர்கள் நான் ஆயிரம் அறிஞர்களிடம் கல்வி கற்றுள்ளேன், நான் இமாம் அபு ஹனிபாவை காணாமல் இருந்திருந்தால், நான் கிரேக்க தத்துவங்களின் சகதிக்குள் விழுந்திருப்பேன் என்று கூறியிருக்கிறாகள். இமாம் அபு யூசுப்: நான் இமாம் அபு ஹானிபாவைப் போன்ற ஹதீது கலையில் உன்னத அறிவு

பெற்ற ஒருவரை, இன்னும் அவர்களைப்போன்று ஹதீதுகளை விவரமாக பூரணமாக விளக்ககூடிய எந்த அறிஞரையும் காணவில்லை என்று கூறினார்கள். அறிவு மேதை முஜ்தஹித் சுபியான் அத் தவ்றி கூறினார்கள். "இமாம் அபு ஹனீபாவுடன் ஒப்பிடும் போது நாங்கள் எல்லாம் பெரிய கழுகுவிடம் குருவியை போன்றவர்கள். இமாம் அபுஹனீபா அவர்கள் அறிஞர்களின் தலைவர்." அலி இப்னு ஆசிம் கூறினார்கள் "அபுஹனீபாவின் அறிவையும் தற்பொழுது இருக்கும் மற்ற எல்லா அறிஞர்களின் அறிவையும் ஒப்பிட்டால் இமாம் அபு ஹனீபாவின் அறிவு மேலானதாக இருக்கும்." யசீத் இப்னு ஹாரூன் கூறினார்," நான் ஆயிரம் ஆசிரியர்களுக்கு கீழ் கல்விகற்று இருக்கிறேன் அவர்களில் இமாம் அபு ஹனீபாவிப் போன்று 'வறா' உள்ளவரையும் புத்தி சாதுரியம் உள்ளவரையும் கண்டதில்லை. முஹம்மத் இப்னு யூசுப் அஸ் ஷாபி'ஈ, டமஸ்கஸ் தனது **உகூப் அல் ஜமான் பி மனாகிபின் நு'மான்** என்ற நூலில் அறிஞர் இமாமுல்அஃலம் அபுஹனீஃபா அவர்களை புகழ்ந்து அவர்களின் மேன்மையை விவரிக்கின்றார்கள், அதில் அவர்கள் முஜ்தஹிதுகளின் தலைவர் எனகூறுகிரார்கள்.

இமாமுல்அஃலம் அபுஹனீஃபா அவர்கள் "நான் ரசூலுல்லாஹ்வின் ஹதீதை மற்ற எல்லாவற்றைவிடவும் மதிக்கின்றேன் விரும்புகின்றேன் என்று கூறினார்கள். நாங்கள் சஹாபாத் கிராம் அவர்களின் சொல்லைத்தேடி அவற்றை பின்பற்றுகிறோம், தாபிஊன்களின் சொற்கள் எங்களின் வார்த்தைகளைப்போன்றது". '**ரத் அல் வஹ்ஹாபி**' எனும் நூலின் மொழிபெயர்ப்பு இத்துடன் முடிகின்றது. இந்த நூல் இந்தியாவிலும் இஸ்தான்புளிலும் 1264[1848A.D.]இலும் 1401[1981A.D.],இலும் வெளியிடப்பட்டது.

மவ்லான முஹம்மத் அப்தல் ஜலீல் பார்சிய மொழியில் எழுதிய **சைபுல் முகல்லிதீன் அலா அ நாக்-இல்- முன்கிரீன்** என்ற நூலில்; லா-மதுஹபிகள் இமாம் அபு-ஹனீபா ஹதீது கலையில் பலவீனமானவர் என்று கூறுகிறார்கள். இது அவர்கள் அறியாத மூடர்கள் மற்றும் பொறாமை உள்ளவர்கள் என்பதை காட்டுகின்றது. அல்-இமாம் அஸ்- சஹபி மற்றும் இப்னு ஹஜர் அல்-மக்கி ஆகியோர் 'இமாமுல் அஃ'லம் ஒரு ஹதீது கலையின் அறிஞர் , அவர் நான்காயிரம் அறிஞர்களிடம் ஹதீதை கற்றார்கள்' என்று கூறுகிறார்கள். அதில் முன்னூறு பேர் தாபிஊன்களில் ஹதீதுக்கலை அறிஞர்கள். இமாம் அஸ்-ஷஃ'ராணி **அல்-மீசான்** இன் முதலாவது பாகத்தில் 'நான் **முஸ்னத்தி**ன் மூன்று பாகங்களை படித்துள்ளேன் அவை தாபிஊன்களில் புகழ் பெற்ற அறிஞர்களிடம் இருந்து பெற்ற தகவல்களை தெரிவிக்கின்றன. லா-மதுஹபிகளின் சலபுஸ் ஸாலிஹீன் களுக்கு எதிரான போக்கு மற்றும் முஜ்தஹிது இமாம்களை பொறாமைப்படுதல் குறிப்பாக இமாம்களின் தலைவர் இமாம் அபு ஹனீபாவை பற்றி என்பன அவர்களின் அவதானம் மற்றும் உணர்வு என்பவற்றை மறைத்து விட்டன, எந்த அளவுக்கென்றால் அவர்கள் இஸ்லாமிய அறிஞர்களின் அறிவு, அழகு மற்றும் மேன்மையை நிராகரிக்கின்ற அளவுக்கு சென்றுவிட்டார்கள். புனிதமான பக்தர்கள் அவர்களிடம் இருப்பது இவர்களிடம் இல்லாதிருப்பதை இவர்களால் பொறுத்து க்கொள்ள முடியவில்லை.

இதன் காரணத்தினால்தான் இவர்கள் இமாம்களின் மேன்மையை வெறுப்பதும், பொறாமை எனும் சிர்க்கில் விழுவதும் ஆகும். **ஹதாயிக்** எனும் நூலில் இமாம் அபு ஹனீபா அவர்கள் ஹதீதை மனனமிடும்போது எழுதுவார்கள். அவர் எழுதிய ஹதீதுகளை ஒரு மரப்பெட்டியில் வைத்திருந்தார்கள். அதில் சிலதை அவர்கள் எங்கு சென்றாலும் தனது கையிலேயே வைத்திருப்பார்களாம். இங்கு கூறப்பட்டுள்ள சில ஹதீதுகளைத்தான், அவர்கள் மனனமிட்ட ஹதீதுகளின் தொகையை சில என்று கூறவில்லை. ஆனால் குறுகிய மனம்படைத்த இஸ்லாத்தின் எதிரிகள் அவ்வாறு சொல்லலாம். இவர்களின் பொறாமையும் அவதூறும் இமாம் அவர்களின் முதிர்ச்சியையும் மேன்மையையும் சுட்டிக்காட்டுகின்றது. பெரிய மதுஹபு ஒன்றை ஸ்தாபித்து இலட்சக்கணக்கான கேள்விகளுக்கு அவற்றுக்கான விடைகளை குர்'ஆனின் ஆயதுக்களைக் கொண்டும், மற்றும், ஹதீதுகளைக்கொண்டும் விடை அளித்து அவற்றை ஆவணப்படுத்திய இமாம் அவர்கள் தப்சீரிலும் ஹதீதிலும் ஆழ்ந்த அறிவும் விசேட ஆளுமையும் இல்லாமல் இவற்றை செய்திருக்கக் முடியாது. முன்னுதாரணம் இன்றி ஒரு விசேட மதுஹபைக்கொண்டு வருவது தப்சீர் கலை யிலும் ஹதீதுகலையிலும் அவர்களின் நிபுணத்துவத்திற்கு சான்று பகர்கின்றது.

அவர்கள் மதுஹபை நிறுவுவதில் அவர்களின் நேரத்தையும், மேலதிக சக்தியையும் பாவிக்க வேண்டிஇருந்தது அதனால் அவர்களுக்கு ஹதீதுகளை மற்றும் அறிவிப்பாளர்களின் பெயர்களை குறிப்பிடுவதற்கு நேரக் குறைவு இருந்திருக்கலாம்.; இதைக்காரனமாக வைத்து அவர்களை இழிவு படுத்துவதும் ஹதீதுகலையில் பலவீனமானவர் என்று சேறு பூசுவதும் அவர்கள் மீது பொறாமை யினால் ஏற்பட்டதாகும். அதற்கு ஒரு திறமை(dதிரையா) இல்லாமல் ஒன்றை தெரிவிப்பது (ரிவாயா) பிரயோசனமற்றது. உதாரணத்திற்கு; இப்னு அப்துல் பார் கூறினார்கள்: திராயா இல்லாத ரிவாயா சிறந்தது எனின் லுக்மானின் புத்திசாதுரியத்தை விட குப்பை கூட்டுபவன் கூறும் ஹதீத் சிறந்ததாக இருக்கும். இப்னு ஹஜர் அல்-மக்கி அவர்கள் ஷாபி'ஈ மதுஹபை சேர்ந்த பிரபல அறிஞர். அவர்கள் தனது '**கலாயித்**' என்னும் நூலில் கூறுகிறார்கள்; ஹதீஸ் கலையில் தேர்ச்சி பெற்ற சிறந்த அறிஞர் அமாஷ், இமாமுல் அஃ'லத்திடம் பல கேள்விகளை கேட்டார்கள். இமாம் அவர்கள் ஒவ்வொரு கேள்விக்கும் ஹதீதுகளை மேற்கோள் காட்டி பதில் அளித்தார்கள். அமாஷ் அப்பொழுது கூறினார்; ஓ! பிக்ஹின் அறிஞரே! நீங்கள் விசேட வைத்திய நிபுணர் போன்றவர்கள். ஹதீதின் அறிஞராகிய நாங்கள் வெறும் 'பாமசிஸ்ட்களை' (மருந்து விநியோகி ப்பவர்கள்) போன்றவர்கள், நாங்கள் ஹீதீதுகளையும் அவற்றின் அறிவிப்பாளர் களையும் மட்டுமே கூறுகிறோம். அனால் நீங்கள் அவற்றிற்குரிய உண்மையான பொருளை விளங்கியவர்கள் என்று இமாம் அவர்களை புகழ்ந்தார்கள். '**உகூத் அல்- ஜவாஹிரிரி அல் முநீபா**' எனும் நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது; உபைதுல்லாஹ் இப்னு அம்ரு அவர்கள் ஹதீத் கலை அறிஞர் அமாஷ் உடன் இருக்கும் போது ஒருவர் வந்து அவர்களிடம் ஒரு கேள்வியை கேட்டார். அமாஷ் அவர்கள் அதற்குரிய விடையை நினைக்கும்போது இமாம் அல் அஃ'லம் அவர்களும் வந்து சேர்ந்தார்கள். அமாஷ் அவர்கள் அந்த கேள்விக்கான விடையை இமாமுல் அஃ'லதிடம்

கேட்டார்கள். இமாம் அல் அஃலம் அவர்கள் உடனேயே பதிலை விளக்கத்துடன் கூறினார்கள். பிரமிப்படைந்த அமாஷ் அவர்கள் ஓ இமாம்! நீங்கள் எந்த ஹதீதிலிருந்து இதை எடுத்தீர்கள் என்று இமாமிடம் கேட்டார். இமாம் அவர்கள் அந்த ஹதீதை கூறினார்கள். அதற்கு அமாஷ் இந்த 'ஹதீதை உங்கள் மூலமாக தான் கேட்கிறேன்" என்று கூறினார்.

இமாம் புஹாரி ரஹ்மாதுல்லாஹி அலைஹி அவர்கள் மூன்று இலட்சம் ஹதீதுகளை மனனம் இட்டுஇருந்தார்கள் அவற்றில் பன்னிரண்டாயிரம் ஹதீதுகளை மட்டுமே தனது நூலில் எழுதினார்கள். ஏனெனில் அவர்கள் ஒரு ஹதீத் ஷரீபை மிகவும் பயந்தார்கள். அது; "**யாராவது ஒருவர் நான் கூறாத ஒன்றை ஹதீத் என்ற பெயரில் கூறினால் அவர் நரகில் மிகவும் கடிய தண்டனைக்கு உட்படுத்தப்படுவார்".** 'வரா' வும் , 'தக்வா' வும் அதிகமாகவே உள்ள இமாம் அவர்கள் ஹதீதுகளை தெரிவிப்பதற்கு மிகவும் இறுக்கமான நிபந்தனைகளை விதித்திருந்தார்கள். இந்த நிபந்தனைகளை பூர்த்தி செய்யும் ஹதீதுகளையே கூறி வந்தார்கள். சில அறிஞர்கள் அவர்களின் எல்லை அகன்றதாகவும் நிபந்தனைகள் இறுக்கமற்றதகவும் இருந்ததால் அதிகமான ஹதீதுகளை தெரிவித்துள்ளார்கள். ஹதீதுக்கலை அறிஞர்கள் அவர்களின் நிபந்தனைகள் வேறுபடுவதைப்பற்றி ஒரு போதும் ஒருவருக்கொருவர் குறை கூறியதில்லை. அப்படியில்லாமல் இருந்திருந்தால், இமாம் முஸ்லிம் அவர்கள் இமாம் புஹாரி ரஹ்மதுள்ளாஹி தஆலா அலைஹிமா பற்றி எதையாவது கூறியிருப்பார். இந்த நிலைமையில், இமாமுல் அஃ'லம் குறைந்த அளவு ஹதீதுகளை கூறியிருப்பதை வைத்து அவர்களின் தக்வாவை நினைத்து பாராட்ட வேண்டும்.[1]

மிர்அத் அல்காயிநாத் கூறுகின்றது : இமாமுல் அஃலம் அவர்கள் ஒவ்வொரு நாளும் சுபுஹு தொழுகையின் பின்னர் இருந்து ளுஹர் தொழுகை வரைக்கும் தனது சீடர்களின் கேள்விகளுக்கு பதில் அளித்து கொண்டிருப்பார்கள். அஸர் இலிருந்து இஷா தொழுகைவரை சீடர்களுக்கு கல்வி புகட்டுவார்கள். பின்னர் வீட்டுக்கு சென்று சிறிது ஒய்வு எடுத்தபின் மீண்டும் பள்ளிக்கு வந்து வணக்கத்தில் ஈடுபடுவர்கள். இது பஜ்ர் தொழுகை வரை நீடிக்கும். இதை மிசால் இப்னு காதம் அல் கோபி [ஹிஜ்ரி 115] என்னும் சலபுஸ்ஸாலிஹீன்களில் ஒருவரும் வேறுபல அறிஞர்களும் இவ்வுண்மையை கூறியுள்ளார்கள்.இவர்கள் வாணிபத்தின் மூலம் தனது வாழ்வாதாரத்தை ஹலாலான வழியில் பெற்றுக் கொண்டார்கள். பல இடங்களுக்கு தனது பொருட்களை அனுப்பி உழைத்து தனது சீடர்களுக்கு தேவையானவற்றையும் வாங்கிக் கொடுப்பார்கள்.தமது குடும்பத்தை செந்தவர்களுக்கு அதிகமாக செலவு செவதுடன் ஏழைகளுக்கும் வாரி வழங்குவார்கள். ஒவ்வொரு வெள்ளிக்கிழமைகளிலும் தனது பெற்றோரின் ஆத்மா பலனுக்காக இருபது தங்க காசுகளை ஏழைகளுக்கு தானமாக வழங்குவார்கள். இவர்களின் ஆசிரியரின் வீடுஏழுவீதிகளுக்கு அப்பால் இருந்தும்கூட தங்கள் ஆசிரியர்

---

[1] **சைப்f அல்-முகல்லிதீன் அலாஅ'நாக்கில்முன்கிரீன்**

ஹம்மாதுவின் வீட்டு பக்கமாக கால் நீட்டியதேயில்லை.

ஒரு முறை வாணிபத்தில் அவரின் பங்காளி பெரிய அளவு பொருட்களை ஷரியத்துக்கு ஏற்றுக்கொள்ளாத முறையில் விற்றுவிட்டதை அறிந்த அவர்கள் அதில் கிடைத்த தொன்னுராயிரம் வெள்ளி திர்கம்களையும் ஏழைகளுக்கு பகிர்ந்து விட்டனர். ஒரு நாணயத்தையாவது தனக்கு எடுதுக்கொள்ள வில்லை. ஒரு முறை கூபாவில் கொள்ளையர்கள் ஆடுகளையும் கொள்ளையிட்டுக்கொண்டனர். அந்த ஆடுகளை இந்த நகரத்திலேயே விற்கப் படலாமென நினைத்து எழு வருடங்களாக ஆட்டிறைச்சி யை உண்ணாமல் இருந்துள்ளனர். ஒரு ஆடு ஆகக்கூடியது எழு வருடங்கள் தான் வாழும் என்பதை அறிந்திருந்தனர். அவர்கள் ஹராமை மிகவும் கவனமாக தவிர்த்து நடந்தார்கள். இவர்களின் ஒவ்வொரு செயலிலும் ஷரீஅத் பிரபலித்தது. அவர்கள் நாற்பது வருடங்கள் மாலை தொளுகைக்கு(இஷா) செய்த வுளுவுடனேயே காலை தொழுகை யையும்(பஜிர்) தொழுது வந்தார்கள். இரவுத்தொளுகையின் பின்னர் உறங்குவதில்லை.

இமாம் அவர்கள் 50 தடவை ஹஜ் கடமை நிறைவேற்றியுள்ளார்கள். கடைசி முறை அவர்கள் கூபாவுக்கு சென்று இரண்டு ரக்காஅத்து தொழுதார்கள். அத்தொளுகையில் குரான் முழுவதையுமே ஓதி முடித்தனர். பின்னர் அழுதுகொண்டே ஓ எனது அல்லாஹ்வே! உனது மேன்மைக்கு தக்க முறையில் என்னால் உன்னை வணங்க முடியவில்லை எனினும் நீ அறிவுக்கூர்மையால் அறியப்பட முடியாதவன் என்றும் விளங்கிக் கொண்டேன் எனவே எனது இந்த விளக்கத்தில் உள்ள குறைகளை மன்னிப்பாயாக" என்று கூறியபொழுது ஒரு குரல் கேட்டது. **ஓ! ஹனிபா ;நீ என்னை நன்றாகப் பற்றிக்கொண்டாய், இன்னும் நீ என்னை நன்றாகவே வணங்குகிறாய். நான் உனது பிழைகளையும், உனது மத்ஹபை (வழியை)பின் அற்றுபவர்களின் பிழையையும் உன்னை இறுதி நாள் வரை பின் பற்றுகிறவர்கள் பிழையையும் பொறுத்துக்கொண்டேன்**. இமாம் அவர்கள் ஒவ்வொரு பகலும் இரவும் குர் ஆணை ஓதி முடிப்பார்கள்.

இமாம் அவர்கள் முப்பது வருடங்கள் ஒவ்வொரு நாளும்( நோன்பு நோக்க தடுக்கப்பட்ட ஐந்து நாட்களை தவிர) தொடர்ச்சியாக நோன்பு நோற்றதனால் அதிகளவு தக்வாவை பெற்றிருந்தார்கள். அவர்கள் அடிக்கடி ஒன்று அல்லது இரண்டு ரக்கா அத்துக்களில் முழுக் குர்ஆணையும் ஓதி முடிப்பார்கள். இன்னும் சில நேரம் பிரத்தியோக தொழுகைகளிலும் அல்லது வேறு தொழுகைகளிலும் இறைவனின் அருட்கொடைகளை பற்றி கூறும் ஆயத்துக்களை திரும்பத்திரும்ப ஓதி விம்மி விம்மி அழுவார்கள்[1] இதைக் கண்டவர்கள் அவர்களிடம் மிகவும் இரக்கம் கொள்வார்கள். ஹஸ்ரத் முஹம்மது ரசூலுல்லாஹ்வின் உம்மத்தில் ஒரு தனி ரக்கா அத்தில் முழுக் குரானையும் ஓதுபவர்கள் உதுமான் இப்னு அப்பான், தமீமுத்தஅரி, ஸ்ஃதிப்னு சுபைர், இமாமுல் அ'லம் அபு ஹனிபா ரலியல்லாஹுத்த ஆலா அன்ஹும் அவர்களேயாகும்.

இவர்கள் யாரிடமும் அன்பளிப்புகளை எதிர்பார்ப்பதில்லை. அவர்கள் ஏலகளைபோலவே உடை அணிவார்கள். சில நேரங்களில் அல்லாஹுவின் அருட்கொடைகளை எடுத்துக்கட்டுவதர்காக மிகப்பெறுமதியான விலை உயர்ந்த ஆடைகளையும் அணிவார்கள். அவர்கள் 55 வது முறை ஹஜ்ஜுக்கு

சென்று சில வருடங்கள் அங்கேயே தங்கி இருக்கிறார்கள். அவர்களின் உயிர் பிரிந்த இடத்தில்

[1] ஹனபி மதுஹபில் அல்லாஹுௗத ஆலாவின் பயத்தினால் அழுவது தொழுகையை முறிக்காது

மட்டும் ஏழாயிரம் தடவை முழு குர்ஆணையும் ஓதி முடித்திருக்கிறார்கள். நன் எனது வாழ்க்கையில் ஒரேயொரு முறை மாத்திரமே சிரித்திருக்கிறேன். அதற்காக மிகவும் வருந்துகிறேன் என்று கூறியுள்ளார்கள். இவர் பேசியது குறைவு சிந்தித்தது அதிகம். தன்னுடைய சீடர்களுடன் மார்க்க சம்பந்தமான விடங்களை பற்றி ஆலோசிப்பார்கள். ஒரு நாள் இரவுத்தொழுகையை முடித்துக்கொண்டு மஸ்ஜிதை விட்டு வெளியேறும் போது அவர்களது சீடர் சுபருடன் சில விடயங்களைப்பற்றி பேசத்தொடங்கினார்கள். அவர்களின் ஒரு கால் மஸ்ஜிதுக்கு உள்ளேயும் மற்றது வெளியேயும் இருந்தது. அவர்கள் தொடரும் பொது மஸ்ஜிதில் பஜ்ருக்கான அதான் ஒலித்தது, அப்போது தங்களின் வெளியே இருந்த காலை உள்ளே எடுத்து தொழுகைக்காக மஸ்ஜிதுக்குள்ளே சென்று விட்டார்கள். ஹசரத் அலி ரலியல்லாஹுௗ அன்ஹுௗ அவர்களின் சொற்படி அவர்கள் நான்காயிரம் திர்கம் சம்பளம் பெறக்கூடியதாக இருந்தது. அவர்களுக்கு தேவையனதைவிட மற்றதை ஏழைகளுக்கு தானம் செய்து விடுவார்கள்.

கலீபா மன்சூர் அவர்கள் இமாம் அவர்களுக்கு மிகுந்த மரியாதை செலுத்தி வந்தார்.அவர்களுக்கு ஒருமுறை பத்தாயிரம் திர்கம்களையும் ஒரு அடிமைப் பெண்ணையும் அன்பளிப்பு செய்தார். ஆனால் இமாம் அவர்கள் அதை ஏற்றுக்கொள்ளவில்லை. ஹிஜ்ரி 145 இல் இப்ராஹி இப்னு அப்துல்லாஹ் இப்னு ஹசன்இப்னு அலி இவர்களின் சகோதரர் முஹம்மத் ரஹ்மத்துல்லாஹ் தஆலா அலைஹிம் அஜ்மஈன்,க்கு உதவியாட்களை சேர்த்துக்கொண்டிருந்தார். முஹம்மத் தன்னைத்தானே மதீனாவின் கலீபா எனப் பிரகடனம் செய்து கொண்டவர். அவர் கூபாவுக்கு வந்த போது இமாம் அபு ஹனிபா அவர்கள் அவருக்கு உதவி செய்ததாக கதை பரவியது. மன்சூர் இதைக் கேட்டதும் இமாம் அவர்களை கூபாவிளிருந்து பாக்தாதுக்கு அனுப்பிவைத்தார். அவர் தான் உண்மையான கலீபா என்று ஒவ்வொருவருக்கும் அறிவிக்கும்படி இமாம் அவர்களிடம் கூறினார். அவர் இமாம் அவர்களுக்கு உயர்நீதிமன்ற தலைவர் பதவியையும் அளித்தார். இவைகளை இமாம் அவர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. அதனால் மன்சூரினால் இமாம் அவர்கள் சிறையில் அடைக்கப்பட்டார்கள். 30 கசையடிகள் அடிக்கப்பட்டது. அவர்கள் பாதத்திலிருந்து இரத்தம் வடிந்தது.மன்னர் அதற்காக பின்னர் வருந்தி 30,000 வெள்ளி திர்ஹம்களை கொடுத்தார். அனால் அவர்கள் அதையும் ஏற்றுக்கொள்ளவில்லை. மீண்டும் அவர்கள் சிறையில் அடைக்கப்பட்டு ஒவ்வொரு அடுத்த நாளும் 10 கசையடிகள் அதிகமாக கசையடி கொடுக்கப்பட்டது. பதினோராம் நாள் நாட்டு மக்கள் கலக்கம் செய்வார்கள் என்ற காரணத்தினால் படுக்க வைக்கப்பட்டு முதுகில் அடிக்கப்பட்டது நஞ்சு கலந்த சர்பத் பானமும் அவர்கள் வாயில் ஊட்டப்பட்டது. அவர்கள் சஜ்தாவில் இருந்தவாறே தன் உயிரை அல்லாஹ்விடம் ஒப்படைத்தார்கள். குறைந்தது ஐம்பதாயிரம் மக்கள் அவர்களின் ஜனாஸா தொழுகையில் கலந்து கொண்டார்கள்[1].

தொழுகை மிக நெருக்கடியான நிலையில்அஸர் தொழுகை வரையும் நடைபெற்றது இருபது நாட்களாக மக்கள் அவரின் கபுருக்கு வந்து ஜனாஸா தொழுகையை நிறைவேற்றினார்கள்.

இமாம் அவர்களுக்கு எழுநூறு சீடர்கள் இருந்தார்கள். அவர்கள் எல்லோரு தங்கள் சீரிய குணத்தாலும் தூய பக்தியினாலும் பிரபலமடைந்தார்கள். அவர்களில் அநேகர் காதி (நீதிபதி)களாகவும் முப்திகளாகவும் விளங்கினார்கள். அவர்களில் அவர்களின் மகன் ஹம்மாது ரஹ்மாதுல்லாஹி அலைஹி அவர்கள் குறிப்பிடத்தக்க ஒருவராகும். '**மிர்'அத்துல் காயினாத்**' இங்கு முடிகிறது.

**அவர்கள் அஹ்லுத்தீனை வழிநடத்தும் தலைவர்களாய் இருந்தார்கள், ரஹ்மத்துல்லாஹி தஆலா அலைஹிம் அஜ்ம'ஈன்**.

இமாமுல் அஃ'லத்துக்கும் அவர்களின் சீடர்களுக்கும் இடையில் இஜ்திஹாதால் விளங்கிக்கொள்ள கூடிய சில முரண்பாடுகள் இருந்தன. பின்வரும் ஹதீதுகள் அம்முரன்பாடுகள் பிரயோசனமானவை எனக்கூறுகின்றன. **"எனது உம்மத்துக்கு இடையில் ஒரு செயலில் முரண்பாடானது அல்லாஹ்வின் கருணையாகும்."** இவர்கள் அல்லாஹ்வின் பயத்தினால் குர்ஆனை மிகக்கவனமாக பின் பற்றினார்கள். எனது சொல்லுக்கு மாறாக நீங்கள் ஏதாவது ஆதாரங்களைக் கண்டீர்களாயின் என்னுடையதைப் புறக்கணித்துவிட்டு உங்கள் ஆதாரங்களை பின்பற்றுங்கள். என்று சீடர்க்களுக்கு பணித்தார்கள். அவர்களின் சீடர்கள் எல்லோரும் நாங்கள் அவருடன் முரண்பட்டாலும் நாங்கள் அவரிடமிருந்து கேட்டவைதான் அபூர்வமானவை என்று கூறினார்கள்.

ஹனபி முப்திகள் அவர்கள் கூறியவைகளின் உடன்பாட்டுடன் தான் பத்வா அளிக்க வேண்டும். அவற்றை அவர்களின் சொற்களில் காணாவிட்டால் இமாம் யூசுபை பின்பற்ற வேண்டும் அதன் பிறகு இமாம் முகம்மதை பின்பற்றவேண்டும். இமாம் யூசுபும், இமாம் முகம்மதுவும் ஒரு பக்கத்திலும் இமாமுல் அஃலம் வேறு பக்கத்திலும் இருந்தால் ஒரு முப்தி இரண்டில் ஒன்றை பின்பற்றலாம்.

ஒரு விசயத்தில் தறூறா( தவிர்க்கமுடியாத சந்தர்ப்பம்) ஏற்படுமாயின் அப்பொழுது முஜ்தஹிதின் சொல்லுக்கேற்ற முறையில் இலகுவான வழியில் தீர்ப்பு அழிப்பது அவசியம். எந்த முஜ்தஹிதின் சொல்லுக்கும் ஏற்றுக்கொள்ளாத பத்வாவை[2] ஒருவர் வழங்க முடியாது.

---

[1] Endless Bliss இன் 5ம் பாகத்தில் 15ஆம் அத்தியாயத்தை பார்க்கவும்.

[2] பாத்வா என்பது முஸ்லிம்களுக்கிடையே ஏற்படும் கேள்விகளுக்கு சந்தேகங்களுக்கு எப்படி நடந்து கொள்ளவேண்டும் என்று அதிகாரமளிக்கப்பட்ட இஸ்லாமிய அறிஞரரினால் கொடுக்கப்படும் ஒரு முடிவான தீர்ப்பு. தீர்ப்பின் அடிப்படை ஆதாரங்கள் அவற்றுடன் இணைக்கப்பட வேண்டும்.

## 6. வஹ்ஹாபிசமும் அஹ்லுஸ்ஸுன்னாவின் மறுப்பும்.

வஹ்ஹாபிகள் தங்களை முஸ்லிம்கள் என்று அழைத்துக் கொள்பவர்கள். இவர்கள் **நஜ்திகள்** என்றும் அழைக்கப் படுகிறார்கள். அஹ்லுஸ் சுன்னாவிலிருந்து பிரிந்து வழி தவறியவர்கள்.

**அஹமத் சவ்தத் பாஷா, அரசியல் பிரமுகர், அயுப் சப்ரி பாஷா [ஹிஜ்ரி1308 (1890AD) ] 34ஆவது துருக்கிய சுல்தான் இரண்டாவது ஹமீது கான்II[ஹிஜ்ரி1258-1336]அவர்கள் காலத்தில் ரியஅட்மிரல் ஆக இருந்தவர்கள். இவர் சுல்தான் மஹ்மூதின் கப்ரு ஸ்தானத்தில் அடக்கம் செய்யப்பட்டிருக்கிறார்கள். இவர்கள் இருவரும் வரலாற்று நூல்களை எழுதியுள்ளனர். அதில் வஹ்ஹாபிசத்தைப் பற்றி முழு விளக்கங் களையும் எழுதியுள்ளனர்[1]. அயுப் சப்ரி பாஷா அவர்கள் அஹமத் ஜைனி தஹ்லான்[2] அவர்களின் “பித்னதுல் வாஹ்ஹபிய்யா” எனும் நூலுக்கு மொழிபெயர்ப்பு செய்து தனது நூலுக்கு பெருமளவு ஆதாரங்களை பெற்றுள்ளார். இவர் ஹிஜ்ரி 1308(1890 A.D.)இல் மறைந்தார்கள்.**

வஹ்ஹபிச இயக்கம் முஹம்மதிப்னு அப்துல் வஹ்ஹாப் ஆல் உருவாக்கப்பட்டது. இவர் நஜ்து மாகாணத்திலுள்ள ஹுரைமிளாவில் ஹிஜ்ரி 1111 இல் [1699 ] பிறந்து ஹிஜ்ரி1206 இல்[1791]இல் இறந்தார். இவர் பக்தாத் ஈரான், இந்தியா டமஸ்கஸ் போன்ற நகரங்களுக்கு வியாபாரத்திற்காக பிரயாணம் செய்துள்ளார். அவர் பசராவில் இருக்கும் போது ஹிஜ்ரி 1125[1713AD] பிரிட்டிஷ் உளவாளி ஹம்பர் வைத்த பொறியில் சிக்கிக்கொண்டார். பிரிட்டிஷ் அரசாங்கம் இஸ்லாத்தை அழிப்பதற்காக எண்ணிக்கை யற்ற உளவாளிகளை இதற்காக பயிற்சியளித்து அனுப்பி வைத்திருந்தது. அவர் மார்க்கம் என்ற பெயரில் அந்த உளவாளிகள் இவருக்காக தயாரித்து வைத்திருந்த ஆதாரமற்ற குழப்பகரமான விடயங்களை வஹ்ஹாபிசம் என்ற பெயரில் வெளியாக்கினார்.

எங்களது ["Confessions of A British Spy"] என்ற நூல் வஹ்ஹாபிச இயக்க தோற்றத்தின் முழு விவரங்களையும் விளக்குகின்றது. அங்கு அவர் ஹர்ரான் ஐ சேர்ந்த அஹமத் இப்னு தைமிய்யா{ஹிஜ்ரி 661-728][1266-1328]டமஸ்கஸ்.} எழுதிய அஹ்லுஸ் ஸுன்னா வுக்கு பொருந்தாத நூல்களை காணவும் வாசிக்கவும் அவருக்கு கிடைத்தது. மிகவும் ஏமாற்றுப் பேர்வளியான அவர் "**நஜ்தின் ஷேய்க்**" என்று பெயர் வைத்துக்கொண்டார். பிரிட்டிஷ் உளவாளிகளின் உதவியுடன் அவரால் எழுதப்பட்ட **கிதாபுத் தவ்ஹித்.**[3] பின்னர் அவருடைய பேரன் அப்துர்ரகுமானால் விரிவுரை எழுதப்பட்டு இன்னும் பல இடைச்செருகல்கள் செய்து **பத்ஹுல் மஜீத்** என்றபெயரில் வஹ்ஹாபியான முஹம்மதுஹமீத் என்பவரால் எகிப்தில் பிரசுரிக்கப் பட்டது. முஹம்மத் இப்னு அப்துல் வஹ்ஹாபின் கொள்கைகள் தரிய்யா கிராமமக்கள், மற்றும் அதன் தலைவர் முஹம்மத் இப்னுஸுஊத் என்பவர்களிடம் சென்றடைந்தது. அவருடைய வஹ்ஹாபி கொள்கைகளை ஏற்றுக்கொண்டவர்களை வஹ்ஹாபி, அல்லது நஜ்தி என்று அழைக்கப்பட்டனர். அவர்கள் தொகை கூடிக்கொன்டு சென்றது. அப்போது அவர்

[1] முன்னயத்தின் 7வது பாகம், பிந்தியதன் 12வத் பாகம் '**தரீகி உத்மானி', பிந்தியதன்** 3ஆம் பாகம் 5வது பாகம் மிர் அத்துல் ஹராமைன் பக்கம் 99, துருக்கி வாசக சாலை, சுலைமானிய்யி

[2] அஹமத் தஹலான் ரஹ்மாதுல்லாஹி அலைஹி ,(1231[1816],மக்கா -1304 [1886], மதீனா), மக்காவின் முப்தி

[3] மக்காவின் அறிஞர்கள் ஹிஜ்ரி 1221இல் கிதாபுத் தவ்ஹீதுக்கு மிகச்சிறந்த பதிலை தகுந்த ஆதாரனகளுடன் எழுதி அவர்களின் கொள்கைகளை மறுத்தார்கள். மறுப்புகளின் தொகுப்பு சைப் அழ ஜப்பார் என்ற பெயரில் எழுதப்பட்டது , அது பின்னர் பாகிஸ்தானில் அச்சிடப்பட்டது.

தன்னை காதி என்றும் இப்னு ஸு ஊதை அமீர் என்றும் அவர்களுடைய சந்ததியினர் மட்டும் இப்பதவிகளுக்கு தொடர வேண்டும் என்றும் சட்டமாக பிரகடனப்படுத்தினர்.

முஹம்மதின் தந்தை அப்துல் வஹ்ஹாப் மதினாவின் ஒரு சிறந்த பக்திமானும் முஸ்லிம் அறிஞருமாவார். அவர் முகம்மதுவின் கூற்றுக்களிளிருந்து விலகி முஹம்மது ஒரு தவறான வழியைதொடங்குகிறான் என்றும் மக்களை அவனிடமிருந் விலகி யிருக்குமாறும் அவனிடம் ஒருவரும் பேசவேண்டாம் என்றும் எச்சரித்தார். ஆனால் அவன் ஹிஜ்ரி 1150 [1737 A.D] வஹ்ஹபிசத்தை பிரகடனப்படுத்தினான். அவன் இஸ்லாத்தில் இஜ்திகாதையும், உலமாக்களையும் நிந்தனை செய்தான். அஹ்லுஸ் சுன்னாவை சேர்ந்தவர்களை காபிர்கள் என்று கூறினான். எங்கள் நேசக்குரிய நபியவர்களின் ரவ்லாவுக்கு செல்பவர்கள், வலிமார்களின் அடக்கச்தலங்களுக்கு செல்பவர்கள், யா நபியல்லாஹ்! அல்லது யா அப்துல் காதிர்! என்று அழைப்பவர்கள் முஸ்ரிக்குகள் என்று கூறினான்.

வஹ்ஹாபியின் கூற்றுப்படி யாராவது,அல்லாஹ்வை தவிர வேறு யாராவது ஏதும் செய்தார் என்று கூறினால் அவர் முஷ்ரிக் அல்லது காபிர் ஆவார். உதாரணமாக "இந்த மருந்து வருத்தத்தை நீக்கியது", இன்னும் நபியின் அல்லது வலியின் கப்ரடியில் நான் கேட்ட பிரார்த்தனையை அல்லாஹ் ஏற்றுக்கொண்டான் என்று கூறினால் அவர் முஷ்ரிக் ஆகுவார் என்று

கூறினார். இவரின் இந்த கூற்றை நிருபிப்பதற்கு அவர் குர் ஆனில் சூரத்துல் பாதிகாவில் வரும் **"இய்யாக்க ந'ஃபுது வஇய்யாக்க நஸ்தஈன்"** என்ற ஆயத்தை முன் வைக்கிறார் "உன்னிடமே வேண்டுகின்றோம்" இந்த ஆயத் தவக்குலை விபரிக்கின்றது[1].

**'அல் உஸூலுல்-அர்பஅ பி-தர்தீத்-இல்-வாஹ்ஹபிய்யா**' என்ற நூல் அதன் 2ஆம் பாகத்தின் கடைசியில் பெர்சியன் மொழியில் அறிவிக்கின்றது:
'வஹ்ஹபிகளும் மற்றைய மத் ஹப் இல்லாத பிரிவினர்களும் **மஜாஸ்**[2] இன்னும் **இஸ்திஆரா** என்பதன் கருத்தை விளங்கி கொள்ள முடியாதவர்கள். யாராவது ஒருவர் ஒரு விஷயத்தை செய்தார் என்று கூறினால் அவர்கள் அவருடைய கூற்று மஜாஸ் ஆக இருந்தபோதும் அவரை முஷ்ரிக் அல்லது காபிர் என்று கூறுகிறார்கள். ஆனால் அல்லாஹு த்தஆலா குர் ஆனின் அநேக ஆயத்துக்களில் உண்மையில் அவன் தான் செய்பவன் ஆனால் மனிதன் மஜாஸ் ஆக இருக்கும் என்று சொல்கிறான்.

---

[1] இந்த ஆயத்துக்குரிய சரியான பொருளை அஹ்லுஸ் ஸுன்னா உலமாக்கள் தவ்ஹீத் மற்றும் தவக்குல் பற்றியவகளை Endless Bliss எனும் நூலின் 3ம் பாகம் 35வது அத்தியாயத்தில் விரிவாக எழுதப்பட்டுள்ளது. தவ்ஹீதின் சரியான பொருளை அறிந்தவர்கள் வஹ்ஹாபிகளை பற்றி விளங்குவார்கள். அவர்கள் தம்மை முவஹ்ஹிதுகள் என்று அழைத்தாலும் அவர்கள் முவஹ்ஹிதுகள் (தவ்ஹீதின் நம்பிக்கையாளர்கள்) இல்லை.

[2] மஜாஸ் என்றசொல் அதன் வெளிப்படையான பொருளில் பாவிக்கப்படுவதில்லை. ஆனால் அதன் பண்புகளை ஒத்த கருத்தில் பாவிக்கப்படுகின்றது. அல்லாஹ்வுக்கு சிறந்ததாக இருக்கும் ஒருசொல் ஒரு மனிதனுக்கு மஜாசியாக ( உருவகமாக, சைகையாக) பாவிக்கப்படும்போது, வஹ்ஹாபிகள் அதை அதன் வெளிப்படையான பொருளில் விளங்கிவிட்டு அதை சைகையாக பாவிப்பவரை , சொல்பவரை அவர்கள் இணைவைப்பவர்கள், காபிர்கள் என்று அழைக்கிறார்கள். அந்த சொற்கள் திருக்குர்'ஆனிலும் ஹதீதிலும் சைகையாக கூறப்பட்டுள்ளது என்பது அவர்களுக்கு தெரியாது.

'சூரா யூசுபின் 57ஆவது ஆயத்தில்' "**தீர்மானம்(ஹுக்கும்) அல்லாஹ்வுக்கு மட்டும் உடையது**" அதாவது தீர்மானிப்பவன் அல்லாஹு த ஆலா மட்டும்தான். 'சூரா நிசாவில்' 65

வது ஆயத்தில் அவன் கூறுகிறான் "**அவர்களிடையே உள்ள கருத்து வேறுபாட்டிற்கு உம்மை மத்தியஸ்தராக(யுகக்கிமூக்க) ஆக்கும் வரைக்கும் அவர்கள் நம்பிக்கை கொண்டவராக மாட்டார்கள்.**" முந்திய ஆயத்தில் அல்லாஹு மட்டும்தான் ஹாகிம்(நீதிபதி) என்றும் பிந்தியதில் மனிதன் உருவகமாக ஹாகிம் நீதிபதி என்று கூறுகிறான்.

உயிர் கொடுப்பவனும் எடுப்பவனும் அல்லாஹு தான் என்று ஒவ்வொரு முஸ்லிமும் அறிந்திருகின்றான். சூரா யூனுஸ் 56 ஆவது ஆயத்தில் **"அவன் தான் உயிர் கொடுக்கிறான் உயிர் எடுக்கிறான்"** சூரா zசுமர் 42 ஆவது ஆயத்தில் "**அல்லாஹு தான் ஒருவருடைய மரணவேளையில் அவரை மரணிக்க செய்கிறான்**". சூரா அஸ் ஸஜதா வின் 11ஆவது ஆயத்தில் அவன்

மஜாஸ் ஆக கூறுகிறான்: **“உயிரை எடுப்பதற்கு பதிலாக நியமிக்கப்பட்ட மலக்கு உயிரை கைப்பற்றுகிறார்.”**

அல்லாஹு த ஆலா ஒருவன் தான் நோயாளிக்கு சுகத்தை அளிக்கிறான். சூரா அஷ் ஷுஅறா 80ஆவது ஆயத்து தெரிவிக்கின்றது **“நான் நோயாளியாகும் போது அவன்தான் எனக்கு சுகமளிகின்றான்”.** சூரா ஆலா இம்ரான் இன் 49ஆவது ஆயத்தில் ஈஸா அலைஹிஸ்ஸலாம்: **“நான் குருடர்களுக்கும், தோல் நோய்[1] பிடித்தவர்களையும் சுகப்படுத்துகிறேன், இன்னும் நான் அல்லாஹ்வின் அனுமதி கொண்டு மரித்தவரை உயிர்ப்பிக்கின்றேன்”** ஒரு மனிதனுக்கு பிள்ளை கொடுப்பவன் அவன். சூரா மரியம் 18வது ஆயத்து கூறுகிறது: ஜிப்ரயில் அலைஹிஸ் ஸலாம் கூறினார் (மஜாசிz) **“நான் உங்களுக்கு ஒரு தூய ஆண் பிள்ளை தருகிறேன்.”**

அல்லாஹு தஆலாதான் மனிதனின் உண்மையான உரிமையாளன் (சொந்தமுள்ளவன்). சூரா பகரா 257ஆவது ஆயத்து வெளிப்படையாக கூறுகிறது: **“அல்லாஹு தஆலாதான் அவனை நம்பிக்கை கொன்டவர்களின் வலி**” (பாதுகாவலன், பாதுகாப்பவன்). சூரா மாஇதாவின் 56ஆவது , சூரா அஹ்zசாப் 6 ஆவது ஆயத்துகளில் **“அல்லாஹ்வும் அவனது தூதரும்” (அலைஹிஸ் ஸலாம்) வலி”** என்று கூறும்போது, மற்றும் **“அல்லாஹ்வின் தூதர் நம்பிக்கையாளர்களை பாதுகாக்கின்றார் அவர்களை அவர்கள் பாதுகாப்பதைவிட”** எனும்போது மனிதனும் “வலி” உருவகமாக பாதுகாவலன் என்று அர்த்தம் கொடுக்கின்றது. உண்மையான உதவியாளன் அல்லாஹு தஆலா, அல்லாஹு மனிதனையும் (மு’ஈன்) உதவியாளன்(உருவகமாக) என்று குறிப்பிடுகிறான். சூரா மா இதா 3ஆவது ஆயத்தில் **”மற்றவர்களுக்கு நல்லமுறையிலும் தக்வாவுடனும் உதவி செய்யுங்கள்”** வஹ்ஹாபிகள், (அல்லாஹ்வுக்கு அல்லாமல்) ஒரு நபருக்கு இன்னொருவரின் அப்து(அடிமை, வேலைக்காரன்) என்று அழைக்கும் முஸ்லிமை முஷ்ரிக் (இணைவைப்பவர்) என்று கூறுகின்றனர். உதாரணத்திற்கு : அப்துன் நபி, அப்தர் ரசூல்; ஆனால், சூரா அன்நூர் இல் 32வது ஆயத் கட்டளை யிடுகிறது : “உங்களது திருமணமாகாத பெண்களையும், உங்கள் அடிமைகளில் பக்தி யுடயவர்களையும் மற்றும் பெண்ணடிமைகளையும் திருமணம் செய்து கொடுங்கள்”. உண்மையான ரப் அல்லாஹு த ஆலா, ஆனால் வேறு சிலரும் ரப் என்று உருவகமாக அழைக்கப்பட முடியும். சூரா யூசுபின் 42வது ஆயத்தில் : “உங்கள் ரப்பின் முன்னிலையில் என்னை நினைவுபடுத்துங்கள்”.

---

[1] ஒரு தோல் (வெண் குஷ்டம்) நோய் பிடித்த மனிதன் முற்றாக அல்லது பகுதியளவில் பாதிக்கப்பட்ட மனிதன்

வஹ்ஹாபிஹள் ‘**இஸ்திகாதா**’ என்பதை மிகவும் எதிர்கிறார்கள். அள்ளாஹ் அல்லாத பிறரிடம் உதவி கேட்பது, அல்லது பாதுகாப்பு கேட்பது அன்பவற்றை அவர்கள் இணை வைப்பு என்கிறார்கள். உண்மையில் இஸ்திகாதா என்பது அள்ளாஹ்விடம் இருந்துதான் என்பது எல்லா முஸ்லிம்களுக்கும் தெரியும். ஆனாலும், உருவகமாக இன்னொருவரிடம் இஸ்திகாதா கேட்பது அனுமதிக்கப்பட்டுள்ளது. சூரா அல் கஸ்ஸாஸ் 15வது ஆயத்தில் “**அவருடைய இன மக்கள் அவரிடம் எதிரிகளுக்கு எதிராக இஸ்திகாதா**

**தேடினர்".** ஒரு ஹதீத் ஷரீப் சொல்கிறது; **"அவர்கள் மஹ்ஷரில் ஆதம் அலைஹிஸ் ஸலாத்திடம் இஸ்திகாதா செய்வார்கள்." அல்-ஹிஸ்ன் அல் ஹஸின்** இல் கூறப்பட்ட ஒரு ஹதீத்தில் **"உதவி தேவைப்பட்ட ஒருவர் ஓ அல்லாஹ்வின் அடிமைகளே! உதவி செய்யுங்கள் என்று கூறவேண்டும்".** இந்த ஹதீது அண்மையில் இல்லாத ஒருவரிடம் உதவி தேடும்படி [1] எங்களுக்கு கட்டளை பிறப்பிக்கின்றது. அல்-உஸூலுல் அர்ப'ஆ வின் மொழி பெயர்ப்பு இங்கு முடிகின்றது.

ஒவ்வொரு சொல்லுக்கும் ஒரு பிரத்தியோக பொருள் உண்டு அதுதான் உண்மையான பொருள். அந்த சொல் அதன் உண்மையான அர்த்தத்தில் பாவிக்கப்படாத போது அது வேறு அர்த்தங்களில் பாவிக்கப்படும்போது **மஜாஸ்** என்று அழைக்கப்படும். அல்லாஹ்விற்கு பிரத்தியோகமான ஒரு சொல் அது மனிதனுக்கு மஜாஸ் ஆக பாவிக்கப்ப்படும்போது வஹ்ஹாபிகள் அது அதன் உண்மையான பொருளில் பாவிக்கப்பட்டதாக கொள்கிறார்கள். அதனால் அந்த சொல்லை பாவிப்பவர்களை முஷ்ரிக் அல்லது காபிர் என்று அழைக்கின்றனர். ஆனால், குர்ஆனில் மற்றும் ஹதீதில் அவை மனிதனுக்கு மஜாஸ் ஆக பாவிக்கப்பட்டிருப்பதை கவனிக்கவேண்டும்.

ரசூளுள்ளாஹ் அலைஹிஸ் ஸலாம் மற்றும் அவ்லியா சபா'அத் கேட்பது என்பது அல்லாஹு தஆலாவிடம் இருந்து திரும்பிவிடுவது அல்லது அவன் தான் படைப்பவன், செய்து முடிப்பவன் என்பதை மறந்து விடுவதல்ல. இது மேகத்திலிருந்து மழையை பொழிவிப்பது போல், மற்றும் நோய் நிவாரணத்திற்கு மருந்து எடுப்பதுபோல், இன்னும் போரின் வெற்றிக்கு பீரங்கிகள், குண்டுகள், விமானங்கள் பாவிப்பது போல். அல்லாஹு தஆலா எல்லாவற்றையும் ஒரு காரணியை முன்வைத்தே படைக்கிறான், செய்து முடிக்கிறான். அவைகளை வைத்திருப்பதும் பாவிப்பதும் ஷிர்க் அல்ல. நபிகள் நாயகம் ஸல்லல்லாஹுஅளிஹி வசல்லம் அவர்கள் காரணியை பாவித்து இருகிரார்கள். நாங்கள் நீர் அருந்த ஒரு அருவிக்கு செல்கிறோம் அது அல்லாஹ் படைத்தது, பாண் வாங்குவதற்கு பேக்கரிக்கு செல்கிறோம் அதுவும் அல்லாஹ் படைத்தது, நாங்கள் ஆயுதங்கள் செய்கிறோம் பயிற்சி கொடுக்கிறோம் வெற்றியை தருவது அல்லாஹ், இதைப்போல் நாங்கள் எங்கள் மனத்தை அல்லாஹு த ஆலா எங்கள் தேவைகளை ,பிரார்த்தனைகளை ஏற்றுக்கொள்வதற்காக ரசூலுல்லாஹ்வின் அல்லது ஒரு வலியின் ஆன்மாவின் மீது செலுத்துகிறோம். அல்லாஹுதஆலா படைத்த ஒரு ஒலியைகேட்பதர்காக ரேடியோவை பாவிக்கின்றோம். ரேடியோ பெட்டியும் மின்காந்த அலைகளும் அந்த ஒளியை கேட்பதற்கு ஒரு காரணியாகவே பயன்படுத்தப்படுகிறது.

---

[1] **அல்-உசூலுல் அல் அற்ப'அ பி தர்தீத் அல் வஹ்ஹாபிய்யா** (பாரஸிக மொழியில் உள்ளது) 2ஆம் பாகம் 1346[1928 A.D.] மீள் பதிப்பு இஸ்தான்புல், 1395 ( 1975A.D.). இந்த நூல் இமாம் ரப்பாணி ரஹ்மாதுல்லாஹி த ஆலா அவர்களின் பேரன் முஹம்மத் ஹசன் ஜான் சாஹிப், அவர்களால் எழுதப்பட்டது. ஜான் சாஹிப் அவர்கள் வாஹ்ஹபிசதுக்கும் லா-மதுஹபி களுக்கு எதிராகவும் அரபியில் எழுதிய தரீக் அன் நஜாத் என்ற நூல்(உருது மொழிபெயர்ப்புடன் ) இந்தியாவில் 1350 இல் வெளியிடப்பட்டது.

அல்லாஹ்வை மறப்பதற்கு அல்ல. அவன்தான் ரேடியோவுக்கும் மின்காந்த அலைகளுக்கும் அந்த சக்தியை கொடுத்தவன். அல்லாஹு த ஆலா அவனுடைய எல்லையற்ற ஆற்றலை அவன் படைத்த எல்லாவற்றிலும் மறைத்து வைத்துள்ளான்.

ஒரு இணைவைப்பவன் அள்ளாஹுவைபற்றி நினைப்பதில்லை. அனால் ஒரு முஸ்லிம் காரணிகளை பாவிக்கும்போது அவன் அள்ளாஹுவை நினைக்கின்றான் ,அள்ளாஹு தஆலா அந்த காரணிகளுக்கு அந்த வேலையை செய்வதற்கு வினைத்திறனையும் வசதிகளையும் கொடுக்கின்றான். அவன் எதை விரும்புகிறானோ அதை அள்ளாஹ் விடம் எதிர்பார்க்கிறான். அவன் எதைப்பெறுகிறானோ அது அள்ளாஹ்விடம் இருந்து வந்தது என்று அவனுக்கு தெரியும். மேற்குறிப்பிட்ட ஆயத்தின் பொருள் இது சரி என்று காட்டுகின்றது. அதனால் தான் நாங்கள் தொழுகையில் சூரா பாதிஹாவை ஓதும்பொழுது ஒரு நம்பிக்கை கொண்டவன் சொல்கிறான்: ஓ, எனது ரப்பே!(நாயனே!) நான் எனது தேவைகளையும், விரும்பியவைகளையும் பெற்றுக்கொள்வதற்காக இந்த பொருட்களையும் விஞ்ஞான காரணிகளையும் வைத்துள்ளேன், உன்னுடைய நேசத்துக்குரிய அடியார்களை உதவிக்கு அழைக்கின்றேன். அப்படி செய்வதன் மூலம் நான் எப்போதும் நம்புகிறேன் நீ மட்டும் தான் எனது தேவைகளை உருவாக்கி எனக்கு அளிப்பவன். உன்னிடம் இருந்து மட்டும்தான் எதிர் பார்க்கிறேன். ஒரு நம்பிக்கை கொண்டவன் இப்படி சொல்வது இணை வைத்தல் என்று சொல்லமுடியாது. அவர்கள் காரணிகளாக வைப்பது நபிமார்களின் ஆன்மாக்களிடம் அவை அள்ளாஹு த ஆலா வினால் படைக்கப்பட்டவை. சூரா பாத்திஹாவின் இந்த ஆயத்; அவர்கள் உண்மையான முஸ்லிம்கள் இணை வைப்பவர்கள் அல்ல என்று தெளிவாக கூறுகின்றது. வஹ்ஹாபிகளும் பொருள்களை காரணிகளையும் பாவிக்கிறார்கள். அவர்களது விருப்பங்களை இந்த காரணிகளை பாவித்து பெற்றுக்கொள்கிரார்கள். ஆனால் நபிமார்களையும் வலிமார்களையும் காராணியாக பாவிக்கும் போது இணை வைத்தல் என்கிறார்கள்.

முஹம்மத் இப்னு அப்துல் வஹ்ஹாபின் கூற்றுக்கள் எல்லாம் அவரது சுய விருப்பமாகும். மார்க்க அறிவு அற்றவர்கள் அவரது பேச்சை எளிதாக நம்பி விடுகிறார்கள். ஆனால் அஹ்லுஸ் ஸுன்னாவின் உண்மையான இஸ்லாமிய அறிஞர்கள் எல்லாம் காபிர்கள் என்கிறார்கள். வஹ்ஹாபிகளின் தலைவர்கள் எல்லாம் தனது சுய விருப்பங்களை பின்பற்றி அதிகாரங்களை பெற்றதுடன் அவர்களின் நிலங்களையும் எல்லைகளையும் விஸ்தரித்து கொண்டவர்கள். அராபிய குடிமக்களை கட்டாயப்படுத்தி வஹ்ஹாபிகளாக மாற்றினார்கள். அவர்களை நம்பாது எதிர்த்தவர்களை கொலை செய்தார்கள். கிராம மக்கள் பயத்தின் காரணமாக முஹம்மத் இப்னு சஊதை தரிய்யாவி அமீராக ஏற்றுக்கொண்டார்கள். இப்னு ஸ'ஊதின் வீரர்களாக வந்தவர்கள் அவர்களின் விருப்பபடி வஹ்ஹாபிகளாக மாறாதவர்களை, அவர்களின் கற்பையும், சொத்துக்களையும் சேதப்படுத்தினார்கள்.

ஷெய்க் சுலைமான், முஹம்மத் இப்னு அப்துல் வஹ்ஹாபின் சகோதரர். சுன்னி முஸ்லிம்களின் அறிஞராக இருந்தவர்கள் தனது **அஸ்- சவாயிக் அழ-இலாஹிய்யா பிர்ரத்தி அலா-அல்-வஹ்ஹாபிய்யா** எனும் நூலில்

வஹ்ஹபிசத்தை எதிர்த்து எழுதியும் வஹ்ஹபிச நச்சு கருத்துகள் பரவுவதையும் தடுத்து நின்றார்கள். மிகவும் பெறுமதியான இந்நூல் 1306இல் அச்சிடப்பட்டு பிரசுரிக்கப்பட்டது. இது ஒப்செட் அச்சாக 1395இல் இஸ்தான்புல்லில் வெளிடப்பட்டது. முஹம்மதின் ஆசிரியர்கள் கூட அபுல்வஹ்ஹாப் பிழையான வழியில் செல்கிறான் என்று கூறி அவனுடைய பிழையான நூலை எதிர்த்தார்கள். அவன் வழி தவறி விட்டான் என்று அறிவித்தார்கள். வஹ்ஹாபிகள் குர் ஆனுக்கும் ஹதீதுக்கும் பிழையான விளக்கம் கொடுக்கிறார்கள் என்று ஆதாரத்துடன் விளக்கினார்கள். ஆனால் அவை அனைத்தும் உண்மையான முஸ்லிம்களுக்கு எதிரான அடாவடிகள் அதிகரிக்க காரணமாயின.

வஹ்ஹாபிசம் அறிவு மூலம் பரப்பபட்டதல்ல, அக்கிரமங்கள் மூலமும் இரத்தகளறி மூலமும் பரப்பப்பட்டது. இரத்தக்கறைபடிந்த கொடூரமான மக்களில் தரிய்யாவின் முகம்மதி இப்னு ஸ'ஊத் மிகவும் கெட்டவன், கல்மனம் பிடித்தவன். இவர் பனு ஹனீப கிளையை சேர்ந்தவன். முசைலமதுல் கத்தாப் ஒருநபி என நம்பிய மூடர்களின் பரம்பரையில் வந்தவன். இவன் ஹிஜ்ரி 1789 [1765 A. D.] இல் மரணமானான். இவனுக்கு பிறகு வந்த அப்துல் அஸீஸ் என்பவர் 1217இல் ஒரு ஷீ'அவினால் கொல்லப்பட்டார். அவருக்கு பின் வந்த அவருடைய மகன் ஸ'ஊத் 1231 இல் மறைந்தார். அவருடைய மகன் அப்துல்லாஹ் 1240இல் இஸ்தான்புளில் கொல்லப்பட்டார். அப்துல் அசீஸின் பேரனான தர்கி பின் அப்துல்லாஹ் அரசாட்சியை பொறுப்பேற்றார். அதன் பின்னர் அவரின் மகன் பைசால் 1254இல் பதவி ஏற்றார். அவர்மகன் அப்துல்லாஹ் 1282இல் பதவி ஏற்றார். அவரின் சகோதரரும் அவரின் மகன் அப்துல் அஸீஸ்உம் குவைத்தில் குடியேறினார்கள். பின்னர் 1319இல் அப்துல் அஸீஸ் ரியாத்துக்கு வந்து அமீர் ஆக பதவி ஏற்றார். 1918இல் பிரிடிசாரின் உதவியுடன் 1351இல் மக்காவை கைப்பற்றி சவூதி அரேபியா என்ற தேசத்தை நிறுவினார். 1991இல் வெளியிடப்ப்பட்ட ஒரு பத்திரிகை செய்தியின்படி ஸஊதி மன்னர் பஹ்த் ஆப்கானிஸ்தானின் முஜாஹிதீன்களுக்கு எதிராக போரிடுவதற்காக ரசியாவுக்கு நான்குபில்லியன் டொலர்களை கொடுத்தார்.

வஹ்ஹைபிகள் தாங்கள் அல்லாஹ் ஒருவன் என்பதை பலமாக நம்புவதையும் இணைவைபதிளிருந்து தப்பியுள்ளதாகவும், முஸ்லிம்கள் அறுநூறு வருடங்கள் இணை வைத்தார்கள் என்றும் அவர்களை காப்பதற்காகவே இவர்கள் முயற்சி செய்வதாகவும் கூறுகிறார்கள். அதற்கு ஆதாரமாக சூராஹ் அஹ'காப் இன் 5வத் ஆயத்தையும் , சூரா யூனுஸ் இன் 106வது ஆயத்தையும் முன் வைகிறார்கள். இருந்த போதிலும், குர்'ஆனின் எல்லா தப்சீர்களும் இந்த இரண்டு ஆயத்துகளும் இனைவைப்பவர்களுக்காக இறக்கப்பட்டது என்று ஏகமனதாக கூறுகின்றன.

இதில் முதலாவது ஆயத்; "**அல்லாஹ்விடமிருந்து விரண்டோடி கியாமநாள் வரைக்கும் கேட்கமுடியாத வைகளை வணங்குபவர்களை விட வழி தவறியவர்கள் எவரும் இல்லை**". இரண்டாவது ஆயத்: "**மக்கா காபிர்களிடம் கூறுங்கள்; அல்லாஹுவை தவிர எதற்கும் பிரயோசனமில்லாத மற்றும் தீங்கும் செய்ய முடியாதவைகள் எதையும் வணங்ககூடாது என்று கட்டளை பிறப்பிக்கப்பட்டு இருக்கின்றேன்**".

**அல்லாஹ்வை தவிர வேறு எதையும்வணங்கினால் உங்களுக்கு நீங்களே தீங்கு செய்கிறீர்கள். தண்டிக்கப்படு வீர்கள்". கஷ்ப்f அஷ்ஷுபுஹாத்** எனும் நூலில் சூரா zசுமர் இன் 3வது ஆயத்தை பிழையாக அர்த்தப்படுத்துகிறது: "**அல்லாஹ்வை தவிர வேறுஎதையும் தமது பாதுகாவலர்களாக ஏற்று கொண்டவர்கள் கூறுகிறார்கள்; அவைகளை நாங்கள் வணங்கினால், அவைகள் அல்லாஹு தாலாவிடம் அவை எங்களுக்காக பரிந்துரைக்கும், இன்னும் அவை எம்மை அள்ளாஹ்விடம் சேர்த்துவைக்கும்**".இந்த ஆயத் சிலைகளை வணங்கும் இணைவைப்பவர்களின் வார்த்தைகளைக் கூறுகிறது. ஆனால், இந்த நூல் இதை ஷபாஅத்தை எதிர்பார்க்கும் முஸ்லிம்களை இணைவைப்பவர்களுக்கு வேண்டு மென்றே ஒப்பாக்கு வதுடன், இணைவைப்பவர்களும் தங்கள் தெய்வங்கள் சக்தியற்றவை அனால் அல்லாஹ்தான் படைப்பவன் என்று நம்பிக் கொண்டிருந்தார்கள் என்றும் பிழையாக விவரிக்கின்றது. ரூஹுல் பயானில் இதன் விளக்கம் பின் வருமாறு தரப்பட்டுள்ளது,; மனிதபடைப்பு தன்னை படைத்த வனை ஏற்றுகொள்ளும் திறனுடனேயே படைக்கப்பட்டுள்ளது. அவன் எல்லா படைப்பு களையும் படைத்தவன். எல்லா மனிதனும் தன்னை படைத்தவனை வணங்குவதற்கும் அவனை நெருங்குவதற்கும் விருப்பமுள்ளவனாகவே படைக்கப் பட்டுள்ளான். இருப்பினும், இந்த திறனும் விருப்பமும் நப்சுக்கு பிரயோசனமற்றது. ஷைத்தானும் கெட்ட நண்பர்களும் இந்த மனிதனை ஏமாற்றுவார்கள்.[அதனால் அவனுடனிருக்கும் உள்விருப்பம் அழிக்கப் படும்]. அதனால் மனிதன்[படைத்தவனையும், கடைசி(கியாமத்) நாளையும் கம்யுனிஸ்டுகளை போல் அல்லது மார்க்கமற்றவர்களை போல் நிராகரிப்பவனாக அல்லது இணைவைப்பவனாக மாறுகிறான். ஒரு இணை வைப்பவன் அல்லாஹ்வை நெருங்க முடியாது, அறியவும் முடியாது.

மஃ'ரிபா மிகவும் பெறுமதிமிக்கது. இந்த அறிவு இணைவைப்பை நீக்கி தவ்ஹீதை உறுதிப்படுத்துகின்றது. அதன் அடையாளம் நபிமார்களை 'அலைஹிஸ் ஸலாமும் அவர்களின் வேதங்களையும் நம்பிக்கை வைத்து அதன் படி நடப்பதுமாகும். இது தான் அல்லாஹ்வின்பால் நெருங்குவதற்குரிய ஒரேவழி. சுஜூதின் நற்பெறுமதி இயல்பாகவே ஷைத்தானுக்கும் கொடுக்கப்பட்டது. ஆனால், அது அவனுடைய நப்சுக்கு பொருந்த வில்லை அவன் அதை மறுத்தான். பண்டைய கிரேக்க தத்துவ ஞானிகள் நபிமார்களில் நம்பிக்கை வைக்காது அவர்களின் நப்ஸின் விருப்பபடி சொந்த புத்தியை பாவித்து கடவுளை நெருங்குவதற்கு முயற்சித்தனர் அதனால் காபிர்களாகினர்.

முஸ்லிம்கள் அல்லாஹுவை நெருங்குவதற்கு இஸ்லாத்தின் படி நடந்து அதைக் கொண்டு அவர்களின் இதயங்கள் ஆன்மீக வெளிச்சங்களால் நிரம்பிவிடும். அல்லாஹ்வின் பண்புகளில்ஒன்று ஜமால்(அழகு) என்பது அவர்களின் ஆன்மாக்களில் பிரதிபலிக்கும். இணைவைப்பவர்கள் அல்லாஹ்வை நெருங்குவதற்கு அவர்களின் நப்சுகளையும், பழுதடைந்த இதயதையும், நூதனங்களையும் பின்பற்றுகிறார்கள், நபிமார்களை அல்ல. அதனால் அவர்களின் இதயம் கறுத்து அவர்களின் ஆன்மா கறைபடிந்து மறைந்துவிட்டது. அல்லாஹு தஆலா இந்த ஆயத்தின் கடைசியில் அவர்கள்

வார்த்தையில்: "நாங்கள் சிலைகளை வணங்குவது அவை எங்களுக்காக பரிந்துரைக்கும் என்பதற்காக" பொய் கூறுகிறார்கள் என்று கூறுகிறான்.

மேற்குறிப்பிட்டவைகளிளிருந்து அவர்கள் பின்வரும் பின்வரும் ஆயத்துகளை சுட்டிக்காட்டுவது அநீதியானது என்று விளங்கும்.
சூரா லுக்மான் இன் 25வது ஆயத்: '**நீங்கள் நிராகரிப்பவர்களை யார் வானத்தை யும் பூமியையும் படைத்தது என்று கேட்டால்? அவர்கள் நிச்சயமாக அல்லாஹ் தான் படைத்தான் என்று கூறுவார்கள்.**" சூரா அஸ் Zசுஹ்ருப் இன் 87எவது ஆயத்: "**நீங்கள் அல்லாஹுவை தவிர மற்றவைகளை வணங்குபவர்களை யார் அவற்றை படைத்தது என்று கேட்டால்? அவர்கள் நிச்சயமாக அல்லாஹ் தான் படைத்தான் என்று கூறுவார்கள்.**" அவர்கள் சிலை வணங்குபவர்களும் அல்லாஹ்தான் எல்லாவற்றையும் படைப்பவன் என்று தெரிந்து இருந்தார்கள் என்பதற்கு சான்றாக முன் வைக்கிறார்கள். அவர்கள் சிலைகளை வணங்குவது அவை அவர்களுக்காக கியாமநாளில் பரிந்துரைக்கும் என்பதற்காக. இந்த காரணத்திற்காக அவர்கள் இணை வைப்பவர்களாகவும், காபிர்களாகவும் ஆனார்கள்."[1]

முஸ்லிமான நாங்கள் நபிமார்களை 'அளஹிஸ்ஸலாம்' அல்லது அவ்லியாக்களை வணங்குவதில்லை. அவர்கள் அல்லாஹ்வின் துணையாளர்கள் அல்லது இணையாளர்கள் இல்லை என்று சொல்கிறோம். அவர்கள் மனிதர்களாக படைக்கப்பட்டவர்கள் மேலும் அவர்கள் யாரும் வணங்குவதற்கு தகுதி அற்றவர்கள் என்று நம்புகிறோம். அவர்கள் அள்ளாஹ்வின் அன்புக்கு பாத்திரமான அடியார்கள் என்றும் அவர்களுக்காக அடியார்களுக்கு கருணை காட்டுவான் என்றும் நம்புகின்றோம். அள்ளாஹ் மட்டும் தான் இலாப நட்டங்களை உண்டாக்குபவன். அவன் மட்டும்தான் வணங்குவதற்கு தகுதியானவன்.

இணை வைப்பவர்கள் அவர்களின் அறிவுக்கு அவர்களின் சிலைகள் ஒன்றும் செய்ய முடியாதவை என்று தெரிந்தும், அவர்கள் நபிமார்களை பின்பற்றாததால் அவர்கள் இந்த மறைக்கப்பட்ட அறிவை பெற்றுக்கொள்ள முடியவில்லை. ஆதலால், அவர்களது சிலைகள் வணக்கத்துக்கு ததியானவை என்று நம்பிக்கை கொள்வதுடன் வணங்குவதாகவும் கூறுகிறார்கள்.

அவர்களது சிலைகள் வணக்கத்துக்கு ததியானவை என்று கூறுவதால் அவர்கள் இணை வைத்தவர்கள் ஆகிறார்கள். அப்படியல்லாமல், அவர்கள் பரிந்துரை வேண்டும் என்பர்க்காக என்று கூறினால் அவர்கள் இணை வைத்தவர்களாக மாட்டார்கள். அதன் படி, அஹ்லுஸ் சுன்னாவினரை இணை வைப்பவர்களுடன் ஒப்பிடுவது முற்றிலும் பிழையானது. இந்த எல்லா ஆயத்துக்களும் சிலை வணங்கியவர்களுக்கும், காபிர்களுக்கும் இறக்கி வைக்கப்பட்டவை. **கஷ்ப்f அஷ் ஷுபுஹாத்** எனும் நூல் பிழையான அர்த்தங்களை கூறுவதுடன் சுன்னி முஸ்லிம்களை இணை வைப்பவர்கள் என்று கூறுவதற்கு சூழ்ச்சி செய்துள்ளது. வஹ்ஹாபி முஸ்லிம் அல்லாதவர்களை கொல்ல வேண்டும், அவர்களது சொத்துக்கள் பறிமுதல் செய்ய வேண்டும் என்றும் இந்த நூல் பரிந்துரை செய்கின்றது.

அப்துல்லாஹ் இப்னு உமர் ரலியல்லாஹு த ஆலா அன்ஹு அவர்களின் இரண்டு ஹதீதுகள் கூறுகின்றன: "**அவர்கள் சரியான வழியிலிருந்து தவறி விட்டார்கள். அவர்கள் நிராகரிப்பவர்களுக்கு இறக்கப்பட்ட ஆயத்துகளை முஸ்லிம்களுக்கு சுட்டி காட்டுவார்கள்**". மற்றது "**எனது உம்மாவுக்காக நான் பயப்படுவதில் எல்லாவற்றிலும் மிகவும் கொடுமையானது குர் ஆனுக்கு அவர்களின் சொந்த விருப்பபடி விளக்கம் கூறுவதும், தவறான மொழிபெயர்ப்பும் ஆகும்**".

இந்த இரண்டு ஹதீதுகளும் லா மதுஹபீ மக்கள் தோன்றுவார்கள் அவர்கள் குர் ஆனில் நிராகரிப்பவர்களுக்கு இறக்கப்பட்ட ஆயதுக்களுக்கு பிழையான விளக்கம் கொடுத்து அதை முஸ்லிம்களுக்கு எதிராக பாவிப்பார்கள் என்பதை முன்னறிவிப்பு செய்துள்ளது.முஹம்மது இப்னு அப்துல் வஹ்ஹாபின் கருத்துக்கள் பிழையானதும் பயங்கரமானது என உணர்ந்த மதீனாவின் அறிஞர் ஷைக் முஹம்மது சுலைமான் அல்- மதனி அவர்கள் அவனுக்கு புத்திமதிகள் கூறியவர்களுள் ஒருவர். (1194[1780A.D]மதீனாவில் மறைந்தார்கள்). இவர்கள் மதீனாவின் பெரிய பிக்ஹு அறிஞர்களில் ஒருவர், ஷாபி'ஈ மதுஹபை சேர்ந்தவர்கள் பல நூல்களை எழுதியவர்கள். இவர்கள் இப்னு ஹஜர் அல்- மக்கி அவர்கள் மின்ஹாஜ் எனும் நூலுக்கு வழங்கிய விவரணம் அத் துஹ்பத் அல் முஹ்தாஜ் என்பது மிகப்பிரபலம் பெற்றது. இவர்களின்

---

[1] இராக்கின் அறிஞர் ஜமீல் ஸிது'க்கி அஸ் ஸவாஹி ரஹ்மாதுல்லாஹி அலைஹி அவர்களின் அல்-fபஜ்ர் அஸ்-ஸாதிக் பிர்ரத்தி அலல் முன்கிரித் தவாசுல் இல்- வல் கராமாதில் வல் ஹவாரிக் எனும் நூலில் [எகிப்தில் ஹிஜ்ரி 1323இல் வெளியிடப்பட்டது. 1396இல் இஸ்தன்புளில் மறு பதிப்பு. இந்த ஆயதுக்கு பிழையான விளக்கம் அளிக்கப்பட்டுள்ளதாகவும் உண்மையான விளக்கத்தையும் கூறுகின்றது. அறிஞர் ஜமீல் ஸிது'க்கி அஸ் ஸவாஹி ரஹ்மாதுல்லாஹி அலைஹிஅவர்கள் இஸ்தான்புல் பல்கலைகளகத்தில் இல்முல் கலாம் கற்பித்தவர். இவர்கள் 1355இல் மறைந்தார்கள். அல் முன்ஜித் எனும் நூலின் 1956ம் ஆண்டின் பதிப்பு இவர்களின் படத்தையும் இணைத்துள்ளது.

இரண்டு பாகம்களை கொண்ட **அல்- பதாவா** எனும் நூலில் அவர்கள் சொல்கிறார்கள்.: ஓ; முஹம்மது இப்னு அப்துல் வஹ்ஹாப்! முஸ்லிம்களை தூற்றாதீர்! அல்லாஹ்வுக்காக உனக்கு புத்தி சொல்கிறேன்! யாராவது அல்லாஹு வைத்தவிர வேறு எவராவது எதையும் செய்கிறார் என்று கூறினால் அவருக்கு உண்மையை விளங்கப்படுத்து. ஆனால், வசீலாவை காரணிகளாக எடுத்து கொள்பவர்களும், காரணிகளும் பயன்படும் சக்தியும் அல்லாஹ்வினால் படைக்கப்பட்டவை என நம்பும் முஸ்லிம்களை காபிர் எனக் கூறமுடியாது. நீ ஒரு முஸ்லிம்தான். எல்லா முஸ்லிம்களையும் வழி தவறியவர்கள் என்று கூறுவதை விட ஒரு முஸ்லிமை வழிகெட்டவன் என்பது மிகச் சரியானது. சமூகத்தைவிட்டு தூரமாகுபவன் அவன் வழி கெடுவதற்கு சாத்தியங்கள் கூடுதலாகும். சூரா நிசா வின் 114வது ஆயத் நான் கூறுவது சரி என்பதை நியாயப்படுத்துகிறது.: " **ஒருவன் சரியான வழி காட்டுதல்களை கற்றபிறகு நபி அலைஹிஸ்ஸலாத்துக்கு எதிராகவும் மற்றும் நம்பிக்கை யாளர்களின் நம்பிக்கைகும் அவர்களின் இபாததுக்கும் மாற்றமாக நடந்து வழி தவறுவானாயின் நாங்கள் மறுமையில் அவனை**

**காபிராகவும் வழி தவறியவனாகவும் (அவன் அதில் மிக நெருக்கமாக இருந்தவன்) எழுப்பி அவனை நரகத்தில் தூக்கி எறிவோம்".**

வஹ்ஹாபிகள் எண்ணிக்கையற்ற பிழையான கோட்பாடுகளை கொண்டவர்கள். அவை மூன்று கொள்கைகளை அடிப்படையாக கொண்டது.

1. அ'மால்(நடைமுறைகள்) அல்லது இபாதத்துகள்(வணக்கங்கள்) என்பன ஈமானில் உள்ளவை. இவைகளை பர்ளு என்று நம்பி இருந்தும் இவைகளை சோம்பல் காரணமாக தொழுகையை விடுவது, கஞ்சத்தனம் காரணமாக சக்காத்தை விடுவதனால் காபிர் ஆகின்றார். அவர் கொல்லப்படவேண்டும், அவருடைய சொத்துக்கள் பறிக்கப்பட்டு வஹ்ஹாபிகளிடையே பங்கிடப் படவேண்டும். அஷ்ஷிஹுரிஸ்தானி கூறுகிறார்: அஹ்லுஸ் ஸு ன்னாவின் அறிஞர்கள் ஏகமனதாக கூறியுள்ளார்கள் வணக்கம் ஈமானில் உள்ளடக்கப்பட்டது அல்ல. ஒரு முஸ்லிம் பர்ளு ஆன வணக்கம் ஒன்றை அவன் பர்ளு நம்பி இருந்தும் சோம்பல் காரணமாக அதை விட்டால் அவன் நிராகரிப்பவன் ஆகமாட்டான்.

   தொழுகையை பொறுத்தவரை ஏகோபித்த ஒற்றுமை காணப்படவில்லை. ஹம்பலி மதுஹபின்படி தொழுகையை சோம்பல் காரணமாக விட்டவன் நிராகரிப்பவன் ஆகின்றான்.[1] தெநாஉல்லாஹ் பாநிபூதி ரஹ்மாதுல்லாஹி அலைஹி அவர்கள் தனது **மா-லா புத்தா** என்ற நூலில் ஒரு முஸ்லிம் ஒரு பெரும் பாவம் செய்வதன் மூலம் நிராகரிப்பவன் ஆக மாட்டான். என்று கூறுகிறார்கள். அவன் நரகத்துக்கு அனுப்பப்பட்டு தண்டனை அனுபவித்தபின் உடனேயோ பிந்தியோ அவன் சுவர்கத்துக்கு நுழைவிக்கப்படுவான். அவன் சுவர்க்கத்தில் தொடர்ந்து தங்கியிருப்பான். இந்த நூல் பார்சி மொழியில் எழுதப்பட்டு டில்லியில் ஹிஜ்ரி 1376இல் அச்சிடப்பட்டு வெளியிடப்பட்டது. அது இஸ்தன்புல் ஹக்கீகத் கிடாபேவி இனால் ஹிஜ்ரி 1410இல் மீள் பதிப்பு செய்யப்பட்டது. ஹம்பலி மதுஹபில் தொளுகையைவிட்டவன் மட்டும்தான் நம்பிக்கைல்லாதவனாக(காபிர்) மாறுவான் என்று சொல்லப்பட்டுள்ளது. இது மற்ற வணக்கங்களை விட்டவனுக்கு கூறப்படவில்லை. அகவே வஹ்ஹாபிகள் ஹம்பலி மதுஹபை சேர்ந்தவர்கள் என்று கருதுவது பிழையாகும். மேல்குறிப்பிட்டாவாறு அஹ்லுஸ்ஸுன்னாவை

[1] அல் -மிலால் வான் நிஹால் (துருக்கி) பக்கம் 63 கெய்ரோ எகிப்து ஹிஜ்ரி 1070

   சேராதவர்கள் ஹம்பலியும் அல்ல[2]. நான்கு மதுஹபிலும் இல்லாதவர்கள் அஹ்லுஸ்-ஸுன்னாவை சேர்ந்தவர்கள் அல்ல.

2. அடுத்து அவர்கள் கூறுவது நபிமார்கள் 'அலைஹிமுஸ்ஸலாம்களிடம் அல்லது அவ்லியா கிராம்களிடம் (ரஹ்மாதுல்லாஹி அலைஹும்) ஷாபாஅத்தை வேண்டி நிற்பது அல்லது நபிமார்கள் அவ்லியாக்களின் சியாரம்களை தரிசிப்பது, அவர்களை வசீலாவாக வைத்து பிரார்த்தனை செய்வது என்பன ஒருவனை காபிராக மாற்றும். அவர்கள் கூறுகிறார்கள் இறந்தவர்களுக்கு எந்த உணர்வுகளும்(கேள்வி,பார்வை ) இல்லை.

ஒரு இறந்த மனிதனுடன் பேசுவது அவனை காபிர் ஆக்கும் என்று இருந்தால் எங்கள் நபிகள் நாயகம், சல்லல்லாஹுஅலைஹி வசல்லம், அவ்லியாக்கள், மற்றும் அறிஞர்கள் இதை செய்திருக்க மாட்டார்கள். எங்கள் நபிகள் நாயகம், சல்லல்லாஹு அலைஹி வசல்லம் அவர்கள் மதீனாவில் உள்ள ஜன்னத்துல் பகி அடக்கத் தலத்துக்கும், உஹது ஷுஹதாக்களின் கப்ருகளையும் பார்வையிடுவதையும் வழக்கமாகக் கொண்டவர்கள். இது வஹ்ஹாபிகளின் நூலான **பத்ஹுல் மஜீதில்** 485வது பக்கத்தில் நபியவர்கள் பேசியதாகவும் வாழ்த்தியதாகவும் குறிப்பிடப்பட்டுள்ளது.

எங்கள் நபிகள் நாயகம், ஸல்லல்லாஹுஅலைஹி வசல்லம் எப்பொழுதும் அவர்களின் பிரார்த்தனையில் : **அல்லாஹும்ம இன்னீ அஸ்அலுக்க பி ஹக்கிஸ் ஸா'இலினா அலைக்க"** (யா ரப்பி! உன்னுடன் கேட்கின்றேன் நீ யாருக்கெல்லாம் அவர்கள் கேட்டதை கொடுத்தாயோ அவர்கள் பொருட்டால் கேட்கிறேன்) என்று கேட்பார்கள் இன்னும் எங்கள் பிரார்த்தனையில் இவ்வாறு கேட்குமாறு அறிவுறுத்தினார்கள். அலி ரலியல்லாஹு த ஆலா அன்ஹு அவர்களின் தாயாரின் ஜனாஸாவை கப்ருக்குள் தங்கள் கையாலேயே வைத்தார்கள். அப்பொழுது அவர்கள்: **இஃ'பிர் லிஉம்மி பாத்திமத்த பிந்தி அசத் வ வஸ்ஸி' அலைஹா மத்'க்ஹலஹா பி ஹக்கி நபிய்யிக வால் அன்பியா இல்லதீனா மின் கப்லி இன்னக்க அர்ஹுமுர் ராஹிமீன்** (யா ரப்பி! தாய் பாத்திமா பிந்தி ஆசத் அவர்களின் பாவங்களை மன்னிப்பாயாக, அவர்கள் தற்போது இருக்கும் இடத்தை விஸ்தீரனப் படுத்துவாயாக, எனது இந்தப்பிரார்தனையை உனது நபியின்மீது நீ வைத்திருக்கும் அன்பின் பொருட்டாலும் எனக்கு முன் வந்த நபிமார்கள் பொருட்டாலும் ஏற்றுக்கொள்வாயாக; நீ கருனையாளர்களுக்கு எல்லாம் கருனையாளன். ஒரு மேன்மை மிக்க அன்சாரி சஹாபி உத்மான் இப்னு ஹனிப் ரலியல்லாஹு த ஆலா அன்ஹு அறிவித்த ஹதீத் ஒன்றில் கண் பார்வை தெரியாஆத ஒருவர் ரசூளுல்லாஹ்விடம் வந்து கண்பார்வை கிடைக்க பிரார்த்திக்குமாறு கேட்டபொது அவரிடம் எப்படி பிரார்த்தனை செய்வது என்று சொல்லிகொடுத்தார்கள். வுளு செய்து இரண்டு ரக்க'அத்துகள் தொழுதபின்னர் பின்வருமாறு பிரார்த்திக்குமாறு கூறினார்கள்: **அல்லாஹும்ம இன்னீ அஸ்அலுக்க வ அத்தவஜ்ஜஹு இலைக்க பினபிய்யிக்க முஹம்மதின் நபிய்யிர் ரஹுமா, யா முஹம்மத் இன்னீ அத்தவஜ்ஜஹு பிக்க இலா ரப்பீ பீ ஹாஜாத்தீ ஹாதிஹிஹீலி- தக்திய லீ அல்லாஹும்ம சஃப்பிஹு fபிய்ய."** இந்த பிரார்த்தனையில் கண்பார்வை இல்லாதவர் தனது பிரார்த்தனை ஏற்றுக் கொள்ளப்

[1] எங்கள் Advice for the muslim ஐ பார்க்கவும்

படுவதற்கு முஹம்மத் அலைஹிஸ்ஸலாமை வஸீலாவாக வைத்துகேட்குமாறு அறிவுறுத்தப்பட்டுள்ளார். சஹாபத்- அல்-கிராம்கள் இந்த பிரார்த்தனையை அடிக்கடி கேட்டுள்ளதாக **அஷி'அத் அல்-லாமா'அத்** எனும் நூலில் இந்த ஹதீது கூறப்பட்டுள்ளது. மேலும் **அல்-ஹிஸ்ன் அல்-ஹஸ்ன்** என்ற நூலிலும் அது குறிக்கும் கருத்துடன் " **நான் உன்னிடம் உன்**

**தூதரை முன் வைத்து திரும்புகின்றேன்**’” என்று எழுதப்பட்டுள்ளது. இந்த பிரார்த்தனைகள் அல்லாஹுத்த ஆலா வின் அன்புக்கு பாத்திரமானவர்களை தமது பிரார்த்தனைக்கு உதவியாளர்களாக (வசீலா) வைத்து அவர்களின் பொருட்டால் தனது தேவையை கேட்பது அனுமதிக்கப்பட்டுள்ளது என்பதை நிரூபிக்கின்றன.

**ஜாமி’ அல் அஷ்ஹர்** இன் புகழ் பெற்ற அறிஞர் ஷெய்க் அலி மஹிபுஸ் (இவர் ஹிஜ்ரி 1361இல் மறைந்தவர்) தனது நூல் **அல்-இப்தா** வில் இப்னு தைமிய்யாவையும் அப்து வையும் அதிகமாக புகழ்கின்றார். எனினும், அதன் 213ஆம் பக்கத்தில் பெரிய அவ்லியாக்கள் ‘ரஹீமஹுல்லாஹு த ஆலா அன்ஹும்’ அவர்களின் மறைவுக்குப்பின் நோய்களை குணப்படுத்துதல், நீரில் மூழ்குகுபவர்களை காப்பாற்றுதல். பகைவர்களிடம் இருந்து காப்பாற்றுவது, காணமல் போன பொருட்களை கண்டுபிடிப்பது போன்ற உலக தேவைகளை செய்தார்கள் என்று கூறுவது சரி அல்ல கூறுகின்றார். அவ்லியாக்கள் பெரியவர்கள் என்பதால் அல்லாஹு த’ஆலா இவ்வாறான செயல்களை அல்லாஹ் அவர்களிடம் விட்டுவிட்டான் அவர்கள் நினைத்த மாதிரி எல்லாம் செய்யலாம், அவர்களை பின்பற்றுபவர்கள் பிழை செய்ய மாட்டார்கள் என்பது எல்லாம் சரி அல்ல. ஆனால், அவர்கள் உயிருடன் இருந்தாலும்சரி அல்லது மறைந்து விட்டாலும் அவர்களுக்கு அல்லாஹ் அவனுடைய நிஃக்மத்துக்களை சொரிந்து கொண்டுதான் இருக்கிறான். அவ்லியாக்களில் அவன் விரும்புவர்கள் மூலமாக அவனுடைய கராமாத்துகள் மூலமாக அவன் நோயை சுகப்படுத்துகிறான், நீரில் மூழ்கக்கூடியவர்களை காப்பாற்றுகிறான், பகைவர்களிடமிருந்து காப்பாற்றுகிறான், தொலைந்து போனவைகளை திரும்ப கொடுக்கின்றான். இது தத்துவார்த்தமானது. உண்மையில், குர்’ஆன் இந்த உண்மைகளை கூறுகின்றது.[1].

அப்தல் கனி அன் நப்லுஸீ ’ ரஹ்மாதுல்லாஹி த ஆலா அலைஹி அவர்கள் அபு- ஹுரைரா ரலியல்லாஹு அன்ஹு கூறியதாக புகாரியிலுள்ள ஒரு ஹதீது குதுசியை எழுதுகிறார்கள்: “**எனது அடியார்கள் பர்லுகள் மூலம் என்னை நெருங்குவது போல் வேறு எவ்வாறும் நெருங்க முடியாது, எனது அடியார்கள் மேலதிகமான நபில் வணக்கங்களை செய்யும்போது நான் அவர்களை மிகவும் விரும்புகிறேன் அவர்கள் என்னுடன் கேட்கிறார்கள், என்னுடன் பார்கிறார்கள்,என்னை எல்லாவற்றிலும் பற்றி பிடிக்கிறார்கள். என்னுடன் நடக்கிறார்கள், அவர்கள் எதைக்கேட்டாலும் நான் அதை அவர்களுக்கு கொடுக்கின்றேன். அவர்கள் நம்பினால் நான் காப்பாற்றுகின்றேன்”.**

இங்கு மேலதிக நபிலான வணக்கங்கள் என்று கூறப்பட்டவை [**மராக் அல்-பலாஹ்** எனும் நூலிலும் அட் தஹாவியின் விரிவுரையிலும் தெளிவாக எழுதப்பட்டுள்ளது] பர்ளான வணக்கங்களை செய்வதுடன் இந்த மேலதிக சுன்னா வணக்கங்களையும் நிறைவற்றுவது. இந்த ஹதீது பர்லான வணக்கங்களை செய்தபின் மேலதிக நபில் வணக்கங்களை செய்பவர் அல்லாஹுத்தஆலாவின் அன்பை பெறுவதுடன் அவரின்

[1] ஷெய்க் அலி மஹிபுஸ் அல்-இப்தா p. 213 கெய்ரோ ,1375[1956 A.D.]; அப்துல்லாஹ் அத் தகூக்கி மற்றும் யூசுப் அத் தசவி பேராசிரியர் ஜாமி அல் அஷ்ஹர் மேல்படி நூலுக்கு புகழ் உரை எழுதி உள்ளனர்.

பிரார்த்தனைகளும் ஏற்றுக் கொள்ளப்படும் என்பதை காட்டுகிறது.[1] அவர்கள் இங்கு உயிருடன் இருந்தாலும் அல்லது மறைந்தாலும் அவர்கள் மற்றவர்களுக்காக பிரார்த்தனை செய்யும்போது அவர்கள் யாருக்காக பிரார்த்தனை செய்தாரோ அவர் அவரது தேவையை பெற்றுக் கொள்வார். அவர்கள் மறைந்த போதும் அவர்கள் கேட்கிறார்கள். அவர்களிடம் கேட்கும்போது அவர்கள் வாழ்ந்து கொண்டிருக்கையில் செய்தது போல் அதை வெறும் கையாக அனுப்புவதற்கு அவர்களுக்கு விருப்பம் இல்லை. இந்த காரணத்தினால் , ஒரு ஹதீது கூறுகிறது ; **"உங்களுக்கு வாழ்க்கையில் ஒரு கஷ்டம் ஏற்படும்போது, கப்ரில் உள்ளவர்களிடம் உதவி கேளுங்கள்".** இந்த ஹதீது ஷரீபின் கருத்து மிகத்தெளிவானது. அதை வேறு விதமாக (த'வில்) விளக்கம் சொல்வது அனுமதிக்கப்படவில்லை. அலூசியின் விளக்கம் பிழையானது.

ஒரு முஸ்லிம் அவர் மறைந்த பின்னும் முஸ்லிம்தான் அவர் நித்திரையில் இருப்பது போன்றது. நபிமார்களும் மறைந்தபின்னும் நபிமார்கள் தான்.அவர்கள் நித்திரையில் இருப்பது போன்றதுதான். உண்மையில் ஆத்மாதான் முஸ்லிம் நபியும் அதைபோன்றது தான். ஒரு மனிதன் மரணித்ததும் அவரின் ஆன்மா மரணிப்பதில்லை. இந்த உண்மை இமாம் அப்துல்லாஹ் அன் நசபி இன் "**உம்தத்அல்அகாயித்**" என்ற நூலில் எழுதப்பட்டுள்ளது. இது லண்டனில் 1259இல் அச்சிடப்பட்டுள்ளது.. இது போன்று அவ்லியா(ரஹ்மாஹும் அல்லாஹ்) என்பவர் மரணித்த பின் அவர் நித்திரையில் இருப்பது போன்றது.இதை நம்பாதவன் அறியாத வக்கிரபுத்தி படைத்தவன். அவ்லியாக்கள் மரணித்த பின்னரும்[2] கராமாத்தை நிகழ்த்த கூடியவர்கள் என்பதை நாங்கள் எங்களது வேறு ஒரு நூலில் நிரூபித்து இருக்கிறோம். ஹனபி மதுஹபின் அறிஞர் அஹமத் இப்னு செய்யத் முஹம்மத் அல் மலிக்கி அல் ஹமாவி மற்றும் ஷாபி'ஈ அறிஞர் அஹமத் இப்னு அஹமத் அஸ் ஸு ஜாயி மற்றும் அஷ் ஷவ்பாரி அல் மிஸ்றி என்போர்கள் எழுதிய நூல்களில் அவ்லியாக்களின் கராமாத்துகள் அவர்களின் மரணத்திற்கு பின்னரும் நிகழ்கின்றன , மேலும் தவஸ்ஸூல் மற்றும் இஸ்திஹாதா [கீழேபார்க்கவும்] அவர்களின் கபுரடியில் என்பன அனுமதிக்கப்பட்டுள்ளன (ஜாயிஸ்)[3] என்பதை சான்றுகளுடன் நிரூபித்துள்ளார்கள்.

முஹம்மத் ஹாதிமி எஃபெந்தி ரஹீமஹுல்லாஹு த ஆலா அன்ஹு அவர்கள் (கொன்யாவில் 1176/1762 இல் மறைந்தார்கள்.) எழுதியுள்ளார்கள் அவ்லியாக்களின் கராமத் உண்மையானவை. வலி என்பவர் ஒரு ஆரிபு பில்லாஹ் (அல்லாஹு தா ஆலாவையும் அவனது பண்புகளையும் அறிந்தவர்). அவர்கள் இபாதத் ,தா'அத் களை செய்பவர். அவர் பாவங்களையும் தனது நப்ஸின் விருப்பங்களையும் தவிர்ப்பதில் மிக கவனமாக இருப்பவர்கள். அல்லாஹ்வினால் காரணிகளுக்கும், விஞ்ஞான அறிவுகளுக்கும் அப்பால் செய்யக்கூடியவைகள் "**ஹாரிக்குள் ஆதா**"(அதிஸயங்கள் ) என்று அழைக்கப்படும். அவை எட்டு வகைப்படும். மு'ஜிஸா, கராமா, இ'ஆனா, சிஹ்ர், இப்திலா, இசாபத் அல்

அய்ன்(கண்ணூறு, கொடிய கண் பார்வை), இர்ஹாஸ் என்பன. **கராமா** அல்லது காராமத் என்பது ஒரு ஒரு ஆரிப் பில்லாவினால் நிகழ்த்தப்படும்

---

[1] அப்துல் கனி அன்னப்லூசி, அல் ஹடீகத் அன் நதியயா ப. 182 இஸ்தான்புல் 1290

[2] அல் ஹதீகா அன் நதியா ப.290

[3] இந்த மூன்று நூல்களும் அஹமத் சய்னி தாஹ்லான் ரஹ்மாதுல்லாஹி அலைஹி அவர்களின் அத் துறார் அஸ் ஸநிய்ய பிர் ரத்தி அலல் வஹ்ஹாபிய்யா எனும் நூலுடன் கெய்ரோவில் ஹிஜ்ரி 1319 இல் ஒரேநேரத்தில் வெளியிடப்பட்டது.போட்டோ கோபி பிரதி இஸ்தன்புளில் ஹிஜ்ரி 1396இல் வெளியிடப்பட்டது.

வினோதமான நிகழ்வு. அவர் ஒரு ஆள்ளாஹ்வின் வலியாக இருப்பார், நபி அல்ல. அபு இஸ்ஹாக் இப்ராஹீம் அல்இஸ்பாராணி ஒரு ஷாபிஈ அறிஞர் சில கராமாக்களை ஏற்றுக்கொள்ளவில்லை. எல்லா மு'தசிலாக்களும்[1] கராமாவை ஏற்றுக்கொள் வதில்லை. அவர்கள் கூறுகிறார்கள் அவை மு'ஜிசாக்களுடன் குழப்பமடையலாம் ஆகையால் நபிமார்களில் நம்பிக்கை வைப்பது கஷ்டமாகலாம் என்று கூறுகின்றனர். ஆனால், ஒரு கராமாவை நிகழ்த்தும் வலி ஒருபோதும் தான் நபி என்று கூறியதில்லை, அவர் கராமா நிகழ்த்த விரும்புவதுமில்லை.[2] நபிமார்க்ளுக்கூடாகவோ, வலிமாகள் மூலமாகவோ அல்லாஹ்விடம் பிரார்த்தனை செய்வது அனுமதிக்கப்பட்டுள்ளது ஏனெனில் அவர்களது மு'ஜிசாவோ கராமாவோ அவர்களின் மரணத்துடன் நின்று விடுவது இல்லை. இவ்வாறான பிரார்த்தனை **தவஸ்ஸுல்** அல்லது **இஸ்தி காதா** என்று அழைக்கப்படும். அர் ரம்ளியும் இதைத்தான் கூறியுள்ளார். அல்-இம்மாமுல் ஹரமைன் கூறினார்கள். மரணத்துக்கு பின்னர் கராமா நிகழ்த்துவதை ஷீயாக்கள் மட்டும் தான் நிராகரித்தார்கள். எகிப்தின் பிரபலமான மாலிக்கி அறிஞர் அலி அஜ'ஹுரி கூறினார்கள் வலியானவர் அவர் வாழும்போது உறையில் இடப்பட்ட வாளைப் போன்றவர் அவர் மரணித்து விட்டால் அவரின் செயல்பாடு உறையில் இருந்து வெளிவந்த வாளைப்போன்று அதன் இயல்பு அதிகரிக்கின்றது என்று கூறினார்கள். இந்த அறிக்கை அபு அலி சன்ஜியின் நூற் அல் ஹிதாயா எனும் நூலிலும் கூறப்பட்டுள்ளது. இது கு'ஆண், ஹதீது மற்றும் இஜ்மா உல் உம்மா வினால் காராமத் என்பது உண்மை என்று அத்தாட்சிப்படுத்தப்பட்டுள்ளது. அவ்லியாக்களின் லட்சக்கனக்கான கராமாத்துகள் பல பெறுமதியான நூல்களில் கூறப்பட்டுள்ளன.[3]

இப்னு ஹுதைமா அத் தார குத்னி மற்றும் தபராணியிலும் கூறப்பட்டுள்ள ஷஹீகான ஹதீத் ஒன்று அப்துல்லா இப்னு உமர் ரலியல்லாஹு த ஆலா அவர்கள் கூறுகிறார்கள்: "**எனது கபுரை தரிப்பவர்களுக்கு ஷபா அத்து செய்வது எனக்கு (வாஜிப்)கடமை ஆகிவிட்டது".** இமாம் மனாவி தனது **குநூஸ் அத் தகாயிக்** எனும் நூலில் இந்த ஹதீதை தெரிவித்து உள்ளார்கள். மேலும், இப்னு ஹிப்பான் ரலியல்லாஹு தாலா அறிவிக்கும் இன்னொரு ஹதீதை குறிப்பிட்டுள்ளார்கள்: "**எனது மறைவிற்கு பிறகு எனது கபுரை தரிசிப்பது நான் உயிருடன் இருக்கும்போது தரிசிப்பதை போன்றது"** . இன்னும் தபரானியில் வந்துள்ள ஹதீது : "**எனது கபுரை தரிசிப்பவருக்கு நான் சபா'அத்து செய்வேன்".** அப்துல்லாஹ் இப்னு உமர் ரலியல்லாஹு த ஆலா அன்ஹு அவர்கள் அறிவிக்கும் பின்வரும் இரண்டு ஹதீதுகம் மர்பூ ; முதலாவது இமாம் அல் பஸ்ஸார் இனாலும் இரண்டாவது ஸஹேஹ் முஸ்லிமிலும் பதிவானது. "**எனது கபுரை தரிசிப்பவர்களுக்கு நான்**

**சபா'அத்து  செய்வது எனக்கு ஹலால் ஆக்கப்பட்டுள்ளது." இறுதி தீர்ப்பு நாளின் போது எனது கபுரை தரிப்பதர்காக மதீனா வருபவர்களுக்கு நான் சபா அத்து செய்வேன்."[4].**

______________________________________________

[1] பிழையான நம்பிக்கையை கொண்ட கூட்டத்தினர் மு'தசிலாக்கள்.

[2] அல்லாஹு தாலா எல்லாவற்றையும் ஆதத் இல் இலாஹிய்யா (காரணிகளின் விதிப்படியே) படைக்கின்றான்.சிலநேரங்களில் அவன் ஆதத் இல் இலாஹிய்யாவை நிறுத்திவிட்டு வழக்கத்துக்கு மாறாக அவனுடைய அன்புக்குரிய அடிமைக்காக படைக்கின்றான் அது அதிசயம் அல்லது அதிசய நிகழ்ச்சி என்று அழைக்கப்படும். அதிசய நிகழ்ச்சி ஒன்று நபிமார்கள் மூலமாக நடக்கும்போது அது மு'ஜிசா என்று அழைக்கப்படும். அது வலியின் மூலமாக் நடக்கும்போது அது கராமத் என்று அழைக்கப்படும். அல்லாஹ்வின் சில நேரங்களில் அவனின் எதிரிகள் மூலமாக சில அதிசயங்களை நிகழ்த்துகிறான்அவை இஸ்தித்ராஜ் என்று அழைக்கப்படும். அல்லாஹ்தான் இஸ்தித்ராஜய் நிகழ்த்துகிறான் அந்த எதிரியை இன்னும் மோசமாகுவதர்காக என்று கூறுகின்றான்.

[3] பெரிகா பக்கம் 269

[4] மிர் அத்துல் மதீனா ( மிர் அத்துள் ஹரமைன்) பக்கம் 106

தபரானியிலும் அட் தார குத்னியிலும் மற்றும் அப்துர் ரஹ்மான் இப்னு ஜவ்ஸி அறிவிக்கும் பின்வரும் ஹதீது மிகவும் மகிழ்ச்சியான செய்தியாகும். "**ஒரு ஹஜ்ஜை நிறைவேற்றும் ஒருவர் அதன் பின் எனது கபுரை தரிசிப்பாராயின் அது நான் உயிருடன் இருக்கும்போது தரிசித்ததற்கு சமனாகும்**." இன்னொரு ஹதீது அட் தார குத்னியில் வந்துள்ளது: "**ஹஜ்ஜை நிறைவெற்றிய பின் என்னை தரிசிக்காதவர் எனக்கு நோகடித்தவராவார்".** தாரகுத்னி கூறுகிறது ரசூளுல்லாஹ்வை ( அலைஹிஸ் ஸலாம் ) தரிசிப்பதை புறக்கணித்தவர்(ஹஜ் செய்தும் கூட) மன்னிக்க முடியாதவர்.

மதீனா பல்கலைகழகத்தின் தலைவர் அப்துல் அசீஸ் எழுதிய **தஹ்கீக் வ ஈதாஹ்** எனும் நூலில் கபுரை தரிசிக்க சிபாரிசு செய்யும் மேல் கூறிய ஹதீதுகள் எந்த ஆதாரமும் இல்லாதது என்று குறிப்பிடுகிறார். ஷேகுல் இஸ்லாம் இப்னு தைமிய்யா மேற்கூறப்பட்ட ஹதீதுகள் எல்லாம் மவ்து. இருந்தபோதிலும், அவைகளின் சனாதுகள் விவரமாக அஸ் சர்கானியின் **அல் மவாஹிபுக்கு** எழுதிய விவரணம் 8அம் பாகத்திலும் வபா அல் வபா வின் 4ஆம் பாகத்திலும் எழுதப்பட்டுள்ளது. இந்த ஹதீதுகள் ஹசன்[1] என்றும் எழுதப்பட்டுள்ளது இப்னு தைமிய்யாவின் கூற்று ஆதரமில்லாதது. மதீனா பல்கலைக்கழகத்தின் தலைவர் அஹ்லுஸ் ஸுன்னா அறிஞர்களின் நூல்களை தூற்றுவதற்கும் அதே நேரம் வஹ்ஹபிகளின் நூற்களை உலகம் முழுவதும் பரப்புவதற்கும் முயற்சிக்கின்றார்.

இவர்கள்தான் உண்மையான முஸ்லிம்கள் என்று முஸ்லிம் மற்ற முஸ்லிமல்லாத நாடுகளை நம்ப வைப்பதற்காக அவர்கள் "**ராபிதத் அல் ஆலம் அல் இஸ்லாமியா**" என்ற ஒரு ஸ்தாபனத்தை மக்காவில் உருவாக்கி அதன் மூலம் அறியாதவர்களையும் இன்னும் பணத்துக்கு ஆசைப்படும் முஸ்லிம்களை கல்விமான்களையும் ஒவ்வொரு நாடுகளில் இருந்தும் தெரிவு செய்து அவர்களுக்கு நூறு தங்க காசுகளின் அளவுக்கு சம்பளம் கொடுத்து அதன் மூலம் அவர்களின் புதிய இஸ்லாமிய கொள்கைகளை பரப்புவதற்கு முயற்சிக்கின்றனர். அஹ்லுஸ் ஸுன்னா அறிஞர்களின் நூல்களை

வாசித்திராத இன்னும் இந்த வஹ்ஹாபிகளின் நூலில் என்ன இருக்கிறது என்றும் அறியாத இந்த மார்க்கவாதிகளை அவர்கள் அவர்களின் வஹ்ஹாபிச கொள்கைகளை பரப்புவதற்கு பாவிக்கின்றார்கள். இந்த நிலையத்திலிருந்து **உலக முஸ்லிம் ஒற்றுமைக்குரிய பாத்வா** என்ற பெயரில் அவர்களின் கொள்கைகளை உலகம் முழுவதும் பரப்புகின்றார்கள். ஹிஜ்ரி 1395/ 1975 A.D இல் அவர்கள் வெளியிட்ட பாத்வாவில் சொல்கிறார்கள்: ஜூம்'ஆ தொழுவது முஸ்லிம் பெண்களுக்கு பர்ளு. ஜூம்'ஆ மற்றும் பெருநாள் குத்பாக்கள் அவரவர்களின் தேச மொழியில் நிகழ்த்தலாம். மவ்தூதியை பின்பற்றிய 'சப்ரி' என்று பெயருடைய ஒரு வழிகேடன் மக்காவிலுள்ள இந்த பித்னா ,பசாத் சென்டரின் ஒரு அங்கத்தவன். குறிப்பிட்ட பத்வாவை இந்தியாவுக்கு உடனடியாக எடுத்து சென்று அங்குள்ள சம்பளம் கொடுக்கப்பட்ட செல்வந்த மனிதர்களிடம் சொல்லி பெண்களை உடனடியாக ஜும்ஆவுக்கு செல்ல காட்டாயப்படுத்தி வெவ்வேறு மொழிகளில் குத்பாவும் ஆரம்பிக்கப்பட்டது. இந்த பிழையான நடைமுறையை தடுப்பதற்காக இந்தியாவிலிருந்த உண்மையான அஹ்லுஸ் சுன்னா ஆலிம்கள் பெறுமதிமிக்க இடங்களிலிருந்து ஒரு பாத்வாவை தயாரித்து அவற்றை வெளியிட்டார்கள். வஹ்ஹாபிகளால் இந்த உண்மையான பாத்வாவை மறுக்க முடியாது போனது. தென் இந்தியாவின் கேரளாவிலிருந்து

---

[1] தயவு செய்து Endless Bliss இன் 2ம் பாகம் 6வது அத்தியாயத்தை பார்க்கவும்.

நூற்றுக்கணக்கான மார்க்கத்தை கற்ற மக்கள் தாம் ஏமாற்றப்பட்டதை உணர்ந்து தவ்பா செய்து திரும்பவும் அஹ்லுஸ் ஸு ன்னாவில் இணைந்து கொண்டார்கள். நம்பத்தகுகுந்த இடங்களிலிருந்து பெறப்பட்ட நன்கு வெவ்வேறு பாத்வாக்கள் அச்சிடப்பட்டு எல்லா இஸ்லாமிய நாடுகளுக்கும் அனுப்பி வைக்கப்பட்டது. அந்த நாடுகளில் இருந்த மேன்மை மிக்க மார்க்க அறிஞர்களும் மார்க்க சம்பந்தமாக அதிகாரங்களில் இருந்தவர்களும் முஸ்லிம்களின் கவனத்தை ஈர்த்து முஸ்லிம்களிடையே ஏற்படவிருந்த பிளவுகளையும் குழப்பங்களையும் தவிர்க்க முயற்சித்தனர். அல்லாஹ்வுக்கே நன்றி. உலகின் மூலை முடுக்குகளில் உள்ள அப்பாவிகள் , கவனமுள்ள இளைஞர்கள் பிழைகள் நடைபெறுவதை தடுக்க முடியும்.

ஜூம்'ஆ குத்பா சம்பந்தமான விசயங்களை விளக்கும்போது, தக்பீர் இப்திதாஹ் மற்றும் தொழுகையின் பிரார்த்தனையின்போது இப்னு ஆபிதீன் ரஹீமஹுுள்ளஹு த ஆலா அன்ஹு அவர்கள் **ரத்துல் முஹ்தாரில்** எழுதுகிறார்கள் குத்பாவை அரபி தவிந்த எனைய மொழிகளில் நிகழ்த்தும்போது, அது தொழுகையை ஆரம்பிப்பதற்கு சொல்லப்படும் (தக்பீர் இப்திதாஹ்) அல்லாஹு அக்பர் சொல்வதை வேறு பாசையில் கூறுவது போலாகும். தக்பீர் இப்திதாஹ் என்பது தொழுகையின் திக்ர் போன்றது. தொழுகையில் வேறுபாசையில் திக்ர் மற்றும் பிரார்த்தனைகளை அரபியை தவிர்ந்த வேறு பாசைகளில் கூறுவது மக்ரூஹ் தஹ்ரீமாவாகும். ஹசரத் உமர் 'ரலியல்லாஹு தஆலா அன்ஹு' அவர்கள் இதை தடை செய்துள்ளார்கள். தொழுகையின் வாஜிப்கள் எனும் அத்தியாயத்தில் ஒரு மக்ரூஹ் தஹ்ரீமாஹ் வை செய்வது சிறிய பாவங்களில் ஒன்றாகும் என்று

அவர்கள் எழுதுகிறார்கள். இதை ஒருவர் தொடர்ந்து செய்தால் அவர் "அதாலா"வை[1] (மார்க்கத்தில் நம்பகத்தன்மையை ) இழக்கிறார்.

இது அத் '**தஹ் தாவி**'யில்: சிறு பாவங்களை தொடர்ந்து செய்யும் ஒருவர் fபாசிக் ஆகிறார். இமாமத் செய்பவர் பாசிக் அல்லது பித்அத் செய்பவராக இருந்தால் அவரது ஜமாஅத்தில் கலந்து கொள்ளாமல் தொழுகைக்காக வேறு மஸ்ஜிதுக்கு செல்லவேண்டும். ஏனெனில் குத்பாவின் பகுதியை அல்லது முழுதாக வேறு மொழியில் செய்வது மக்ரூஹும் பித்ஆவும் பெரும்பாவம். ஆசியாவிலும் ஆபிக்காவிலும் சஹாபாக்களும் தாபி ஊன்களும் கேட்பவர்கள் அரபியை விளங்கிக்கொள்ள முடியாதவர்களாக இருந்த போதும் குத்பாவை அரபியிலேயே செய்தனர். அவர்களுக்கு மார்க்க கல்வி பரவாமல் இருந்து அவர்களுக்கு அது தேவைபட்டபோதும் குத்பாவை அவர்கள் முழுவதுமாக அரபியிலேயே நிகழ்த்தினர். இதன் காரணத்தினால், ஒட்டமான் ஷெய்குல் இஸ்லாம்களும் உலகப்பிரசித்தி பெற்ற மார்க்க அறிஞர்களும் அறுநூறு வருடங்களாக மக்களுக்கு அவர்களுக்கு விளங்கிக்கொள்ள கூடிய துருக்கிய மொழியில் குத்பா செய்வதற்கு அவசியம் இருந்தும் அது மார்கத்தில் அனுமதிக்கப்படாததால் அவர்கள் செய்யவில்லை.

ஹசரத் அபூஹுரைரா ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்கள் கூறியதாக இமாம் பைஹகீ யால் கூறப்பட்ட ஹதீத்: "**ஒரு மனிதன் எனக்கு சலாம் உரைக்கும் போது எனது உடம்பிற்கு எனது உயிர் கொடுக்கப்பட்டு அவரின் சலாத்தை நான் கேட்கிறேன்**" இந்த ஹதீதை மேற்கோள்காட்டி இமாம் பைஹகீ ரஹிமஹுல்லாஹ் தஆலா அவர்கள் நாயகம் அவர்கள் அவர்களது கபுரில் நமக்கு அறிய முடியாதவகையில் உயிருடன் இருப்பதாக கூறுகிறார்கள்.

---

[1] 'நேர்மை'; அவர் மார்க்க சம்பந்தமான விடயங்களில் நம்பகத்தன்மையை இழக்கிறார்; அவர் சாட்சியங்கள் ஏற்றுக்கொள்ளப்படமுடியாது.

மேலும், மதீனாவின் அப்துல் அஸீஸ் இப்னு அப்துல்லாஹ் அவர்களின் அல்-ஹஜ் வல் -உம்ராஹ் எனும் நூலில் 66ம் பக்கத்தில் இந்த ஹதீதை மேற்கோள் காட்டி நபி அலை ஹிஸ்ஸலாம் அவர்கள் வபாத்தானதாகவும், அதே பக்கத்தில் அவர்கள் எங்களுக்கு அறியமுடியாத வகையில் உயிருடன் வாழ்ந்து வருவதாகவும் கூறுகிறார். அவரது கூற்றுக்கள் ஒன்றுக்கொன்று முரணானது. உண்மையில் இந்த ஹதீத் நபிகளாரின் ஆன்மா அவர்களின் உடம்புக்கு கொடுக்கப்பட்டு அவர்க சலாத்தை பெற்றுக் கொள்கிறார்கள். மேலும் அந்த நூலின் 73ம் பக்கத்தில் கூறப்பட்டுள்ள இரண்டு ஹதீதுகள். ஒருவர் ஒரு கபுரை தரிசிக்கும்போது : "**அஸ் சலாமு அலைக்கும் அஹ்லத் தியாரி மின்அல் மு'மினீன்**" என்று சலாம் சொல்லவேண்டும் என்று அறிவுறுத்துகின்றன. இந்த ஹதீதுகள் எங்களை கபுருகளுக்கு சலாம் சொல்லுமாறு கட்டளை இடுகின்றன. யாராவது கேட்க கூடியவர்களுக்கு சலாம் சொல்லலாம் அல்லது உரையாடலாம்; இந்த லா மதுஹபிகள் இந்த ஹதீதுகளை மேற்கோள் காட்டினாலும் அவர்கள் மரணித்தவர்களால் கேட்க முடியாதென்றும், மரணித்தவர்களால் கேட்க முடியும் என்று கூறுபவர்களை அவர்கள் இணை வைப்பவர்கள் என்றும் கூறுகிறார்கள். அவர்கள் குர்ஆன் ஆயத்துகளையும் ஹதீதுகளையும் பிழையாக பொருள் கொள்கிறார்கள்!.

ரசூலுல்லாஹ் சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்கள் கபுரில் உயிருடன் நாம் அறிய முடியாத நிலையில் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள் என்று பல ஹதீதுகள் கூறுகின்றன. அவற்றில் சில பலமானவை என குறிப்பிடத்தக்கவை. பின் வரும் இரண்டு ஹதீதுகள் ஆறு பிரபலமான ஹதீது கிரந்தங்களில் உள்ளவை. “**எனது கபுரில் கூறப்படும் சலவாத்துக்களை நான் கேட்கின்றேன். தூர இடங்களில் கூறப்படும். சலவத்துகளை எனக்கு அறிவிக்கப்படும்.” “எனது கபுரடியில் ஒருவர் சலவாத்தை கூறினால் அல்லாஹு த ஆலா ஒரு மலக்கை அனுப்பி அந்த சலவாத்தை எனக்கு அறிவிக்கப்படுகின்றது. நான் இறுதிதீர்ப்பு நாளில் அவருக்காக பரிந்துரை செய்வேன்”** [1] .

ஒரு முஸ்லிம் ஒரு மரணித்த அவர் வாழும்போது அறிமுகமான ஒருவரின் கபுருக்கு சென்று அவருக்கு சலாம் உரைத்தாள் அந்த கபுரில் உள்ளவர் அவரை இனம்கண்டு அவருக்கு பதில் அளிப்பார்.இப்னு அபீ த் துன்யா அவர்களால் கூறப்படும் ஹதீது அறிவிக்கின்றது மரணித்த முஸ்லிம் சலாம் சொல்பவரை இனம்கண்டு அவருக்கு பதில் கூறுவதுடன் மகிழ்ச்சி அடைகிறது. சலாம் ஒன்னவர் அறிமுகமற்றவாராக இருந்தலும் அவர்கள் மகிழ்ச்சியடைவதுடன் சலாத்தை ஏற்றுக்கொள்கிறது. நல்ல முஸ்லிகளும் ஷஹீதானவர்களும் ரஹீமஹுல்லாஹு தஆலா அன்ஹும் சலாம் சொன்னவர்களை இனம் கண்டு அவர்களுக்கு பதில் கூறுகின்றார்கள் என்றால் ரசூளுல்லாஹு சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்கள் பத்தி சொல்லமாட்டார்களா? சூரியன் எல்லா இடங்களுக்கும் அதன் ஒளியாய் பாய்ச்சுவது போல் எங்கள் நாயகம் சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்களும் சலாம் கூறும் அனைவருக்கும் அதே சமயத்தில் பதில் கூறுவார்கள்[2].

ஒரு ஹதீத் ஷரீப் கூறுகிறது; **“நான் உயிருடன் இருக்கும்போது கேட்பதுபோல் எனது மரணத்திற்கு பிறகும் நான் கேட்பேன்** ”

---

[1] பரிந்துரைக்கப்பட்ட சலவாத்து பின்வருமாறு: அல்லாஹும்ம சல்லி அலா சய்யிதினா முஹம்மதின் வ அலா ஆலி சய்யிதினா முஹம்மத்.

[2] கபுரை தரிக்கும்போது எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதை Endless Bliss இன் 5வது பாகம் 17ம் அத்தியாயத்தை பார்க்கவும்.

அபுய’லா கூறிய இன்னொரு ஹதீது கூறுகிறது. “**நபிமார்கள் (அலைஹிஸ் சலாம்) அவர்கள் கபுரில் உயிருடன் இருக்கிறார்கள். அவர்க தொழுகிறார்கள்**”. இப்ராஹீம் இப்னு பிஷார் மற்றும் செய்யித் அஹ்மத் ரிபாயி மற்றும் அநேக அவ்லியாக்கள் (ரஹீமஹுள்ளஹு தஆலா அன்ஹும் கூறியுள்ளார்கள் அவர்கள் ரசூலுள்ளஹு சல்லள்ளஹு அளிஹி வசல்லம் அவர்களுக்கு கூறிய சலாத்துக்கு நபியவர்களிடம் இருந்து பதில் வந்ததை அவர்கள் கேட்டதாக கூறியுள்ளார்கள். மா பெரும் அறிஞர் ஹசரத் ஜலாலுத்தீன் சுயூத்தி அவர்களிடம்” செய்யித் அஹமத் கபீர்ரிபாஈ ரஹ்மதுள்ளாஹி அலைஹி அவர்கள் ரசூலுல்லாஹ்வின் புனிதமான கையை முத்தமிட்டார்கள் என்று சொல்லப்படுவது உண்மையா? என்று ஒரு கேள்வி கேட்கப்பட்டது. அதற்கு பதில் கூறும் முகமாக **ஷரfப் அல் முஹ்காம்** என்ற நூலை எழுதினார்கள். இந்த நூலில் அவர்கள் ரசூலுல்லாஹ் அவர்கள் நமக்கு விவரிக்க முடியாத முறையில் கபுரில் உயிர்வாழ்ந்து கொடிருக்கிரர்கள் சலாத்துக்கு பதில் கொடுக்கிறார்கள் என்று ஏற்றுக்கொள்ளக்கூடிய

வழமையான அத்தாட்சிகளுடன் நிருபிதுக்காட்டியுள்ளர்கள். மூசா அலை ஹஸ்ஸலாம் அவர்கள் கபுரில் தொழுது கொன்டிருந்ததையும் விளக்கியுள்ளார்கள்.

அன்னை ஆயிஷா சித்தீகா ரலியல்லாஹு அன்ஹா அவர்கள்ல் தெருவித்த ஹதீத் ஒன்று சொல்கிறது: **“நான் கைபரில் நன்சூட்டப்பட்ட இறைச்சியை உண்டதனால் வருத்தத்துக்கு உள்ளானேன், அந்த நஞ்சின் காரணமாக எனது இரத்தக்குழாய் வேலைசெய்யாமல் விட்டது”.** இந்த ஹதீது நமது நாயகம் சல்லள்ளாஹு அளிஹி வசல்லம் அவர்களுக்கு அல்லாஹ் நுபுவ்வதுக்கும் மேலதிகமாக ஷஹாதத்தும் கொடுத்தான் சூரா இம்ராநில் 169வத் ஆயத்தில் அல்லாஹுத்த ஆலா பிரகடனப்படுதுகிறான். “**அல்லாஹுத்த ஆலாவின் வழியில் கொல்லப் பட்டவர்களை மரித்தவர் என்று நினைக்க வேண்டாம் அவர்கள் உயிருடன் இருக்கிறார்கள் அவர்கள் ஊட்டமளிக்கப்படுகிரார்கள்”.** எங்கள் நபியும் அள்ளாஹ்வின் வழியில் நஞ்சூட்டப்பட்டார்கள் என்பதில் சந்தேகமில்லை. அவர்கள் குர்ஆனில் கூறப்பட்ட இந்த வழியில் அதி உயர்ந்த இடத்தில் இருப்பவர்கள்.

இப்னு ஹிப்பான்னில் வரும் ஒரு ஹதீது **“நபிமார்களின்** (அலைஹிஸ் ஸலாம்) **புனித உடல்கள் ஒருபோதும் அழிவதில்லை. ஒருமுஸ்லீம் என்மீது சலவாத்து சொன்னால் ஒரு மலக்கு அந்த சலவாத்தை எனக்கு எத்தி வைத்து இன்னாருடைய மகன் இன்னார் உங்கள் மீது ஒரு சலவாத்து சொன்னார் என்று சொல்லுவார்.”** இப்னுமாஜாவில் வரும் இன்னொரு ஹதீத்: **வெள்ளிகிழமை களில் என்மீது சலவாத்து சொல்லுங்கள் நீங்கள் ஓதிய உடனேயே அது எனக்கு அறிவிக்கப்படும்.”** அபுதர்தா ரலியல்லாஹு தஆலா அன்ஹு அங்கு நபியவர்களுடன் இருந்த சஹாபாக்களில் ஒருவர் உங்களின் மறைவிற்கு பின்னரும் அறிவிக்கப்படுமா என்று கேட்டார்கள். அதற்கு நபி அலைஹிஸ்ஸலாம் கூறினார்கள்; **ஆம், எனது மறைவிற்கு பின்னரும் அறிவிக்கப்படும். நபிமார்களின் உடலை அழிப்பது பூமிக்கு ஹராமாக்கப்பட்டுள்ளது. அவர்கள் மரணத்தின் பின் அவர்கள் உயிருடன் இருப்பார்கள், ரிஸ்கு கொடுக்கப்படுகிறார்கள்**”. என்று கூறினார்கள். [இந்த ஹதீது தனாவுல்லாஹ் பாநிபுதி அவர்களின் ‘**மவ்தா-வால் குபூர்**’ என்ற நூலின் கடைசி பாகத்தில் எழுதப்பட்டுள்ளது. இதன் பெர்சியன் பதிப்பு 1310இல் டில்லியில் செய்யப்பட்டுள்ளது. இதன் மறு பதிப்ப்பு 1990 இல் ஹகீகத் கிதாபேவி இச்தான்புல்.]

ஹசரத் உமர் ரலியல்லாஹு அன்ஹு குத்சை(ஜெருசலத்தை) வென்ற பின் ரசூலுல்லாஹ்வின் புனித கபுருக்கு சென்று சலாம் உரைத்தார்கள். ஹசாரத் உமர் இப்னு அப்துல் அஸீஸ் ரலியள்ளாஹு அன்ஹு அவர்கள் அல்லாஹ்வின் பெரிய வலியாக இருந்தார்கள். அவர்கள் டமஸ்கஸ் இலிருந்து மதீனாவுக்கு அதிகாரிகளை அனுப்பும்போது தனது சலாத்தை நபிகளாரின் கபுருக்கு சென்று கூறுமாறு சொல்லி அனுப்புவார்கள்.

ஹசரத் அப்துல்லாஹ் இப்னு உமர் ரலியல்லாஹு த ஆலா அன்ஹு ஒவ்வொரு பிரயானத்திலிருந்து திரும்பியதும் நேரடியாக ஹுஜ்ரத் அஸ்

ஸ’ஆதாவுக்கு போவார்கள். முதலில் ரசூலுல்லாஹ் அலைஹிஸ் சலாம் அவர்களையும் அதன் பிறகு அபூபகர் ரலியல்லாஹு த ஆலா அன்ஹு அவர்களையும் அதன் பின் அவர்களின் தப்பன் உமர் ரலியல்லாஹு தாலா அன்ஹு அவர்களையும் தரிசிப்பார்கள் சலாம் சொல்வார்கள். இமாம் நாபி கூறுகிறார்கள் ஹசரத் அப்துல்லாஹ் இப்னு உமர் ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்கள் ரசூலுள்ளாஹ்வின் புனித கப்ருக்கு செல்வதையும் அவர்கள் அஸ்ஸலாமு அளிக்க யா ரசூலுல்லாஹ் என்று கூறுவதையும் நான் நூறு முறைகளுக்கு மேல் கண்டுள்ளேன் என்று கூறியுள்ளார்கள்.

ஒருமுறை ஹசரத் அலி ரலியல்லாஹு தஆலா அன்ஹு அவர்கள் மஸ்ஜித்க்குள் சென்று ஹசரத் பாத்திமா ரலியல்லாஹு தாலா அன்ஹா அவர்களின் கபுரை பார்த்து விம்மிவிம்மி அழுதார்கள் அதன்பின் ஹுஜ்ரத் அஸ் ஸஆதாவுக்கு சென்று அதை விட அதிகமாக அழுதார்கள். பின்னர் அஸ்ஸலாமு அலைக்க யா ரசூலுள்ளாஹ் அஸ்ஸலாமு அலைக்குமா ஓ எனது சகோதரர்களே என்று ஹதரத் அபூபகர், ஹசரத் உமர் ரலியல்லாஹு த ஆலா அன்ஹுமா அவர்களைபார்த்து கூறினார்கள்.

இமாமுல் அஃ’லம் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களின் படி; ஒருவர் ஹஜ்ஜை முதல் செய்து முடித்தபின் மதீனத்துல் முனவ்வராவுக்கு சென்று ரசூலுள்ளாஹ் சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்களை தரிக்க வேண்டும். அப்துல் லைத் அஸ் சமர்கந்தி அவர்களின் பத்வா விலும் இது எழுதப்பட்டுள்ளது.

**ஷிபா** எனும் நூளை எழுதிய காதி இயாத் என்பவர்,ஷாபி’ஈ மதுஹபின் அறிஞர் இமாம் நவவி, ஹனபி மதுஹபின் அறிஞர் இப்னு ஹமாம் ரஹீமஹுல்லாஹ் அன்ஹும் கூறியுள்ளார்கள் ரசூலுல்லாஹ்வின் கபுரை தரிசிப்பது அவசியம் என்று உம்மமாவில் இஜ்மா ஒன்று இருந்தது. சில அறிஞர்கள் அது வாஜிப் என்று கூறுகிறார்கள். ஆனால் அது உண்மையில் சுன்னத் ஆகும். இது வஹ்ஹாபிகளின் நூல் **பத்ஹுள் மஜீதி**லும் எழுதப்பட்டுள்ளது.

சூரா நிசாவின் 63வத் ஆயத்து: “**அவர்கள் தங்கள் நப்சுக்கு தீங்கு இழைத்துவிட்டு உங்களிடம் வந்து (எனதுநபியிடம்) அல்லாஹ்வின் மன்னிப்பை தேடுவார் களாயின் அதை என்னுடைய நபியும் அவர்களை மன்னித்துவிட்டால் அவர்கள் அல்லாஹு தஆலாவை அவர்களின் பிழை பொறுக்குதலை ஏற்பவனாகவும் மன்னிப்பவனாகவும் கண்டு கொள்வார்கள்**.” இந்த ஆயத் கிராம்: ரசூலுள்ளாஹ் சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்கள் சபாஅத்து செய்வார்கள் அவர்களது சபாஅத்து ஏற்றுக்கொள்ளப்படும் என்றும், தூர இடங்களிளிருந்தாலும் அவர்களது கபுரை தரிக்குமாறும் அவர்களிடம் சபா அத்தை வேண்டுமாறும் கட்டளை இடுகிறது.

ஒரு ஹதீது கூறுகிறது ; **“மூன்று மஸ்ஜிதுகளுக்கு செல்வதற்காக நீண்ட தூர பிரயாணம் செய்வது விரும்பத்தக்கது.”** இந்த ஹதீது நீண்ட தூரம் பிரயாணம் செய்து மக்காவிலுள்ள மஸ்ஜிதுல் ஹராம் , மதீனாவில் உள்ள மஸ்ஜிதுன்னபவி, ஜெருசலத்தில் உள்ள மஸ்ஜிதுல் அக்ஸா.

ஹஜ்ஜுக்குபோகும் ஒருவர் மஸ்ஜிதுன்னபவியிலுள்ள புனித கபுரை தரிக்காதவர் இந்த நன்மையை இழக்கிறார்.

இமாம் மாலிக் ரஹ்மாதுல்லாஹி அலைஹி அவர்கள் ரவ்லாவிர்க்கு செல்பவர்வர்கள் நீண்ட நேரம் தங்குவது மக்றூஹ் என்று கூறியுள்ளார்கள்.
இமாம் ஜைனுலாபிதீன் ரஹ்மாதுல்லாஹி அலைஹி அவர்கள் கபுரை தரிசிக்கும்பொழுது. ரவ்லா அல் முதஹ்ஹரா பக்கம் இருந்த தூணுக்கு அருகில் செல்லாமல் நின்ற நிலையிலேயே தரிசிப்பார்கள். அன்னை ஆயிஷா ரலியல்லாஹு தாலா அன்ஹு அவர்கள் மறையும் வரை கிப்லாவை முன்னோக்கி வெளியே செல்லும் கதவிற்கு பக்கத்தில் நின்று கொண்டுதான் தரிசிப்பார்கள்.

ஒரு ஹதீது ஷரீப் கூறுகிறது "**எனது கபுரை கொண்டாடும் இடமாக ஆக்காதீர்கள்**.". ஹதீது கலை அறிஞர் ஹசரத் அப்துல் அசீம் அல் முன்சிரீ அவர்கள் இந்த ஹதீதுக்கு விளக்கம் கொடுக்கும்போது ' பெருநாட்களைப்போன்று வருடத்துக்கு ஒருமுறை என்னை தரிப்பது போதுமென்று நினைக்காதீர்கள். என்னை அடிக்கடி தரிசியுங்கள்' என்பது தன இதன் பொருள் என்று கூறியுள்ளார்கள். இன்னொரு ஹதீது ஷரீப்; "**உங்கள் வீடுகளை கபுறுஸ்தானமாக ஆக்கி விடாதீர்கள்.**" இதன் பொருள் நமது வீடுகளை தொழும் இடமாக ஆக்கிக்கொள்ளுங்கள். இதன்மூல ஹசரத் அப்துல் அசீம் அல் முன்சிரீ அவர்கள் கூறிய விளக்கம் சரி என்று விளங்குகிறது. கபுறுஸ்தானங்களில் தொழுவது அனுமதிக்கப்படவில்லை. இந்த ஹதீது ஷரீப் எனது கபுரை தரிசிப்பதற்கு குறித்த நாளொன்றை அமைத்துக்கொள்ளாதீர்கள் என்றும் பொருள்படும். யூதர்களும் கிறிஸ்தவர்களும் அவர்கள் நபிமார்களை தரிசிக்கும்போது, எல்லோரும் ஒன்றாக கூடுவது, இசை வாத்தியங்களை வாசிப்பது பாடுவது இன்னும் சில சடங்குகளை நடத்துவதை வழக்கமாக கொண்டிருந்தார்கள். மேல்கூறப்பட்ட ஹதீது அவர்களைப்போல் நடக்கவேண்டாம் என்பதை இலகுவாக கூறுவதுடன், தடுக்கப்பட்ட செயல்களைக் கொண்டு நாங்கள் கொண்டாடும் நாளாக இடமாக ஆக்கிக் கொள்ளக் கூடது என்று வலியுறுத்துகிறது. நாங்கள் தரிசித்து சலாம் சொல்லி, பிரார்த்தனை செய்து நீண்டநேரம் தங்கிவிடாமல் அமைதியாக வெளியேறுவது சிறந்தது.

இமாமுல் அஃ'லம் அபு ஹனீபா ரஹ்மதுள்ளாஹி அலைஹி அவர்கள் கூறியுள்ளார்கள் புனித கபுரை (ரவ்லாவை) தரிசிப்பது மிகவும் பெருமதியான சுன்னாவாகும். இன்னும் சில அறிஞர்கள் வாஜிப் என்று கூறுகிறார்கள். இதன் காரணமாக ஷாபி'ஈ மதுஹபில் புனித கபுரை தரிசிப்பதை ஒரு நேர்சையாக செய்வதும் அனுமதிக்கப்பட்டுள்ளது.[1]
அல்லாஹு தஆலா: "**நாம் உம்மை படைக்காவிட்டால் இந்த உலகத்தையே படைத்திருக்க மாட்டேன்**"[2] என்று கூறுகிறான். இது முஹம்மத் சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அல்லாஹ் வுக்கு மிகவும் அன்பிற்கு உரியவர் (ஹபீப் அல்லாஹ்) என்று தெரிவிக்கின்றது. இவர்களின் பொருட்டால் கேட்டால் ஒரு சாதாரணமான மனிதன் கூட மறுக்கமாட்டான். அதனால்தான் விரும்பப்பட்டவர் பொருட்டால், விரும்புபவனிடம் கேட்பது இலகுவானது. ஒருவர் ஓ! அல்லாஹ் ; உன்னுடைய ஹபீப் முஹம்மத் சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் பொருட்டால் உன்னிடம் இதை

கேட்கிறேன் என்று சொல்லி கேட்க வேண்டும். இந்த பிரார்த்தனை மறுக்கப்பட மாட்டாது. சிறிய உலக விடயங்களுக்காக ரசூலுள்ளாவை 'சல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' வசீலாவாக்குவது விரும்பதக்கதல்ல.[3]

---

[1] Endless Bliss இன் 5வது பாகம் 6வது அத்தியாயத்தை பார்க்கவும்.

[2] இந்த ஹதீது இமாம் ரப்பானியின் மக்தூபதில் 3ம் பாகம் , 122 ம் கடிதத்தில் எழுதப்பட்டுள்ளது.

[3] மிர் அத்துல் மதீனா பக்கம் 1282

இமாமுல் அஃலம் அபு ஹனீபா ரஹ்மதுள்ளாஹி அலைஹி அவர்கள் கூறுகிறார்கள்; அவர்கள் மதீனாவில் இருக்கும்போது சாலிஹீன்களில் ஒருவரான ஷெய்க் அயுப் அஸ் சஹ்தியாணி மஸ்ஜித் ஷரீபுக்குள் நுழைந்தார்கள். நான் அவர்களை பின்தொடர்ந்தேன் ஹசரத் ஷெய்க் அவர்கள் கிப்லாவை பின்னோக்கி கபுரை முன்னோக்கி நின்றுருந்தார்கள் பின் வெளியே போனார்கள். ஹசரத் இப்னு ஜமாஆ அவர்களது **மன்சக் அல்கபீர்** எனும் நூலில் எழுதுகிறார்கள்; புனித கபுரை தரிசிப்பதற்காக மின்பருக்கு பக்கத்தில் இரண்டு ரகா அத் தொழுது பிரார்தித்த பின்னர் '**ஹுஜாரத் அஸ் ஸ ஆதா**' வுக்கு கிப்லாபக்கம் உள்ள வழியால் வரும்போது நபி அவர்களின் புனித முகம் உங்களுக்கு இடது பக்ககமாக இருக்கும். நீங்கள் **அல் மர்கத் அஸ் ஷரீப் ( நபிகளாரின் புனித கபுரின்)** சுவருக்கு இரண்டு மீட்டர் தள்ளி நிற்க வேண்டும். பின்னர் கிப்லா சுவரை பின்னுக்கு ஆக்கி மெல்ல திரும்பி '**முவாஜஹத் அஸ்ஸஆதா**' முன்னுக்காகும் வரை சென்று சலாம் சொல்லவேண்டும் இந்த முறைதான் நான்கு மதுஹபுகளிலும் சொல்லப்பட்டுள்ளது.

அப்தல் ஃகனி அன் நப்லூசி ரஹீமஹுல்லாஹு த அஆலா நாவீன் தீங்குகளில் 23வதை விளக்கும் போது எழுதுகிறார்கள்: அல்லஹ்விடம் பிரார்த்திக்கும் போது நபியின் அல்லது வலியின் உரிமையின் பொருட்டு அல்லாஹ்விடம் எதையாவது கேட்பது '**மக்ரூஹ் தஹ்ரீமா**'வாகும். எந்த படைப்பும் அல்லாஹ்விடம் கேட்பதற்கு எந்த உரிமையும் பெற்று இருக்கவில்லை என்றும் கேட்டதை கொடுக்க வேண்டும் என்றும் இல்லை என்று சொல்லப்படுகிறது. இது உண்மையானது. இருந்தும், அவன் அவனுடைய அன்புக்குரிய அடியார்களுக்கு உறுதியளித்துள்ளான் மேலும் அவர்களுக்கு உள்ள உரிமையை தன்மீது அனுமதித்துள்ளான். அவர்களது விருப்பத்தை ஏற்றுக்கொள்வான். குர்ஆனில் கரீமில் கூறுகிறான் அடியார்களுக்கு உரிமையை அவன் தன்மீது ஏற்படுத்தியுள்ளான். உதரணத்திற்கு; "**அடியார்களுக்கு உதவுவது எம்மீது கடமையாகி விட்டது**[1]. அல்'**பாதாவா அல்பஸ்ஸாஸிய்யா**' வில் கூறப்பட்டுள்ளது; நபியவர்கள் பொருட்டாலோ அல்லது வலியின் ( உயிர் வாழும் அல்லது மறைந்த) அவர்களின் பெயரைக் குறிப்பிட்டு பொருட்டாலோ கேட்பது அனுமதிக்கப்பட்டுள்ளது. **ஷிர்'அ** வின் விரிவுரையில் தெரிவிக்கின்றது; ஒருவர் அல்லாஹ்விடம் பிரார்த்திக்கும்போது தனது நபியை அலைஹிஸ் சலாமை இடையில் (வஸீலா) வைத்து பிரார்த்திப்பது அவசியமாகும். இந்த உண்மை **அல் ஹிஸ்ன் அல் ஹாசின்** இல் எழுதப்பட்டுள்ளது. மேலுள்ளவற்றிளிருந்து முஸ்லிம் அறிஞர்கள் அல்லாஹு தாலாவிடம் அவது நபியின்மீது அவன் கொண்டுள்ள அன்பு மற்றும் உரிமையை வைத்து பிரார்த்திக்கலாம் என்று கூறியுள்ளார்கள். அல்லாஹ்மீது மனிதனுக்குள்ள

உரிமையின் பொருட்டு இப்படி பிரார்த்திப்பது இணைவைத்தல் என்று ஒருவருமே கூறவில்லை. வஹாபிகள் மட்டுமதான் இப்படி கூறுகிறார்கள்.

அவர்கள் **அல்'பாதாவா அல்பஸ்ஸாசிய்யா**'வை **பத்ஹுல் மஜீதில்** புகழ்ந்தாலும் அதன் பத்வாக்களை சான்றாக எடுத்துக்கொண்டாலும் இந்த விடயத்தில் எதிர்ப்பு தெரிவிக்கிறார்கள். அல் ஹாதிமி நாவின் தீங்குகளை பற்றி விளக்கும்போது; உங்களது உரிமையை என்று நபி அல்லது வலி குறிக்கும்போது அது அவர்களின்நுபுவ்வத்து மற்றும் விலாயத்தை குறிக்கும். எங்கள் நபி அலைஹிஸ் ஸலாம் அவர்களும் இந்த நோக்ககத்தில் தான் கூறினார்கள் "**உனது நபியின் உரிமையின் பொருட்டால்"** மற்றும், யுத்த நேரங்களில் அவர்கள் அல்லாஹு த ஆலாவின் உதவியை முஹாஜிரீன்களில் உள்ள ஏழைகளின் பொருட்டால் கேட்பார்கள்

---

[1] அல் ஹதீகா

அநேக முஸ்லிம் அறிஞர்கள் கூட பின்வருமாறு பிரார்த்திப்பார்கள்.: "அவர்கள் உன்னிடம் கேட்கும்போது அவர்கள் கேட்டதை எல்லாம் நீ கொடுத்தாயே அப்படிப்பட்ட மக்களின் பொருட்டால்.." என்று கேட்பார்கள். இன்னும் முஹம்மத் கஸ்ஸாலியின் பொருட்டால்' மற்றும் இந்த பிரார்தனைகளாய் அவர்களின் நூல்களில் எழுதினார்களே ஆவர்களின் பொருட்டால்'[1]. '**அல் ஹிஸ்ன் அல் ஹாசின்**' எனும் நூலில் இவ்வாறான அநேக பிரார்தனைகள் எழுதப்பட்டுள்ளன. '**தப்சீர் ரூஹுல் பயான்**' சூரா மா'இதா வின் 18வது ஆயத்துக்கு விளக்கம் கூறுகையில் பின்வரும் ஹதீது உமர்-அல்-பாரூக் ரலியள்ளாஹு தஆலா அன்ஹு கூறியதாக குறிப்பிடுகின்றது: ஆதம் அலைஹிஸ் ஸலாம் தவறு செய்த போது அவர்கள் கூறினார்கள்; **"ஓ எனது ரப்பே! முஹம்மது அலைஹிஸ் ஸலாம் பொருட்டால் என்னை மன்னித்துவிடு**". **அல்லாஹு தஆலா: நான் இன்னும் முஹம்மதை படைக்கவில்லை. நீ அவரை எப்படி அறிந்து கொண்டாய் என்று கேட்டான். ஓ ரப்! நீ என்னைப்படைத்து எனக்கு மெல்லிய உயிரைக்கொடுத்தாய் நான் மேலே பார்த்தேன். "லா இலாஹ இல்லள்ளாஹ் முஹம்மதுன் ரசூலுள்ளாஹ்" என்ற வசனம் அரசின் ஓரங்களில் எழுதப்பட்டிருந்தது. 'நீ உனது மிகவும் அன்புக்குரியவரது பெயரை மட்டும் தான் உன்னுடைய பெயருடன் எழுதி இருந்தாய். நீ அவரை மிகவும் விரும்புகிறாய் என்று எண்ணினேன்' அப்போது ஓ ஆதம்! நீ சொல்வது உண்மை. நன் படைத்தவைகளில் அவரை மிகவும் விரும்புகிறேன். அதனால் நான் உன்னை அவர் பொருட்டால் மன்னிக்கிறேன். முஹம்மத் இல்லாதிருந்தால் நான் உன்னை படைத்து இருக்க மாட்டேன்."** இந்த ஹதீது ஷரீப் இமாம் பைஹகீ யின் **தலாயில்** மற்றும் அலுசி யின் **ஒகாலிய்யா** வில் கூறப்பட்டுள்ளது**.**

வஹ்ஹாபிகள் எழுதுகிறார்கள்: இமாம் சைனுல் ஆபிதீன் அலி ரஹீமஹுல்லாஹு தாலா ஒருவர் ரசூலுல்லாஹ் சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்களின் அவர்களின் கபுருக்கு பக்கத்தில் தொழுவதை கண்டார்கள். அவரை இமாம் அவர்கள் குறுக்கிட்டு பின்வரும் ஹதீதை கூறிக்காட்டினார்கள். : **எனக்கு சலவாத்து கூறுங்கள். நீங்கள் எங்கிருந்தாலும் உங்கள் சலவாத்து எனக்கு அறிவிக்கப்படும்**. இது

நிகழ்வை பிழையாக அறிவிக்கின்றது, மற்றும் தொடர்கிறது... ஆகவே கபுருக்கு பக்கத்தில் பிரார்த்திப்பதற்காக போவதும் சலவாத்து சொல்வதும் கபுரை கொண்டாடும் இடமாக ஆக்குவதாகும், இது தடுக்கப்பட்டுள்ளது. மஸ்ஜிதுன் நபவிக்கு தொழுகைக்கு செல்பவர்கள் சலாம் சொல்வதற்காக கப்ருக்கு செல்வது தடுக்கப்பட்டுள்ளது. சஹாபாக்கள் யாரும் இப்படி செய்யவில்லை. அப்படி செய்ய முற்படுபவர்களை அவர்கள் தடுத்து இருக்கிறார்கள். பிரார்த்தனைகள், சலாம்கள் சொல்வதைத்தவிர உம்மத்தினரின் மற்ற செயல்கள் நபிகளாருக்கு அறிவிக்கப்படும்[2]. இன்னும் அவர் சொல்கிறார் சவூதி அரசாங்கம் நபியவர்களின் கபுருக்கு அருகில் இராணுவத்தை காவல் கடமையில் வைத்துள்ளது மக்கள் அங்கு செல்வதை தடுப்பதற்காக.[3].

ஹசரத் யூசுபுன் னபஹாணி அவர்கள் தனது நூளில் பல இடங்களில் இந்த பொய்களை மறுத்து எழுதியுள்ளார்கள்: இமாம் சைன் அல் ஆபிதீன் ரஹ்மாதுல்லாஹி அலைஹி இவ்வாறு நபியவர்களின் அலைஹிஸ் ஸலாம் அவர்களின் புனித கபுருக்கு செல்வதை

---

[1] ஹாதிமீ , பரிக்கா, இஸ்தான்புல் , 1284.

[2] பத்ஹுல் மஜீத் பக்கம் 259; மேலே பக்கம் 53இல் இந்த நூலைப்பார்க்க.

[3] ibid, பக்கம் 234

தடுக்கவில்லை. ஆனால் அவர்கள் இஸ்லாத்தில் இல்லாத மரியாதை குறைந்த செயல்களை தடுத்தார்கள். அவர்களின் பேரன் இமாம் ஜ'பார் சாதிக் ரஹ்மாதுள்ளாஹி தஅலா அவர்கள் வழமையாக ஹுஜ்ரத் ஸ ஆதா ( ரவ்ளா ஷரீப்)வை தரிசிக்கும் பழக்கம் உடையவர்கள். அவர்கள் ரவ்லா முதஹ்ஹரா பக்கமாக உள்ள தூணின் பக்கம் நின்று கொண்டிருப்பார்கள் .அவர்கள் சலாம் சொல்லிவிட்டு சொல்வார்கள் அவர்களுடைய புனிதமான் தலை இந்தப்பக்கம் இருக்கிறது என்று சொல்வார்கள். "**எனது கபுரை கொண்டாடும் இடமாக ஆக்கிவிடாதீர்கள்**". இன் பொருள்; எனது கபுரை குறித்த சில நாட்களில் மட்டும் தரிசிக்காமல் வழமையாக எல்லா நாட்களிலும் தரிசியுங்கள் என்பதாகும் [1].

அபு அப்துல்லாஹ அல் குர்தூபி அவர்களின் **அத் ததுகிரா** வில் எழுதுகிறார்கள். 'நபிகளாரின் உம்மாவின் செயல்கள் அவர்களுக்கு ஒவ்வொரு காலையிலும், மாலையிலும் அறிவிக்கப்படும்". (பக்கம் 88,106) கலீபா மன்சூர் அவர்கள் நபி அலைஹிஸ்ஸலாம் அவர்களின் கபுரை தரிக்க செல்லும் பொழுது இமாம் மாலிக் ரஹ்மதுள்ளாகி தஆலா அலைஹி அவர்களிடம் நான் அவர்களின் கபுரை முன்னோக்கவா அல்லது கிப்லாவை முன்னோக்கவா என்று கேட்டார்கள். அதற்கு இமாம் அவர்கள் நீ எப்படி நபி அவர்களிடமிருந்து உனது முகத்தை திருப்பிக் கொள்வாய் என்று கேட்டார்கள்.? அவர்கள் தான் உனதும் உனது தந்தை ஆதம் அலைஹிஸ் ஸல்லாதின் பவமன்னிபுக்கு காரணமானவர்கள். (பக்கம் 89,116). ஹதீது ஷரீஃப்களில் "**கபுருகளை தரிசியுங்கள்**" என்பது கட்டளை ஆகும். இதில் ஹராம் ஒன்று நடை பெருமானால் அந்த தரிசிப்பு மட்டுமல்ல அந்த ஹராமும் மன்னிக்கப்படும். (பக்கம் 92). இமாம் நவவி அவர்களின் **அத்காரி**ல் சொல்கிறார்கள். நபியவர்களின் கபுரை, மற்றும் நல்லடியார்களின்

கபுரையும் அடிக்கடி தரிசித்து அங்கு சில நேரம் தங்குவது சுன்னாவாகும். ( பக்கம் 98). இப்னு ஹூமாம் தனது **பத்குல் கதீர்** இல் தார குத்ணியிலும் அல் பஸ்ஸர் இலும் பதிவு செய்யப்பட ஹதீதை மேற்கோள் காட்டுகிறார்கள். "**ஒருவர் என்னை தரிப்பதற்கான நோக்கத்துடன் மட்டுமே வந்து வேறு ஒன்றும் செய்யாமல் தரிசிப்பாரானால் இறுதி தீர்ப்பு நாளையில் அவருக்காக் நான் மன்றாடுவேன்**". (பக்கம் 100). அல்லாஹு தஆலா அவனுடைய வலிமார்களை கராமத்துகளை கொடுத்து ஆதரவு காட்டியுள்ளான். அவர்களுடைய கராமாத்துகள் அவர்களுடைய மறைவிற்கு பின்னரும் அடிக்கடி நிகழ்வதை பார்த்துள்ளோம். அவர்கள் அவர்களின் மறைவிற்கு பின்னரும் உதவி செய்கிறார்கள். அவர்களை அல்லாஹு த ஆலாவிடம் எங்களுக்காக பரிந்துரைக்க அனுமதிக்கப்பட்டுள்ளது. ஆனால் அவர்களை பரிந்துரைக்க முன்வைக்கும்பொழுது இஸ்லாமிய வரம்புகளுக்கு உட்பட்டதை மட்டும் கேட்க வேண்டும். உதாரணத்திற்கு: நீங்கள் இதை செய்து தந்தால் நான் இவ்வளவு தருவேன் அல்லது எனது உறவினரின் நோயை சுகப்படுதினால் இது செய்வேன் இது போன்றவை அறியாதவர்களால் கூறப்படுபவை. எப்படியாகிலும், இவை நிராகரிப்பையோ அல்லது இணை வைப்பையோ உண்டாக்காது ஏனெனில் ஆக முட்டாள் தனமான ஒருவர் கூட ஒரு வலி அதை செய்பவர் என்று கூறுவதில்லை. அல்லாஹ் அதை செய்வதற்கு அந்த வலியானவர் காரணமாக இருக்க வேண்டும் என்று எதிர்பாக்கிறார். வலி என்பவர் அல்லாஹ்வின் நேசத்துக்குரிய ஒரு மனித படைப்பு என்று நினைத்து சொல்கிறார் எனக்கு வேண்டுமானதை நீங்கள்

---

[1] ஷவாஹிதல் ஹக், பக்கம் 80, 3வது பதிப்பு கெய்ரோ 1385[1965 A.D.} அடுத்த ஆறு மேற்கோள்களும் இந்த நூலில் பக்கத்துடன் குறிபிடப்பட்டுள்ளது.

அல்லாஹ்விடம் செய்துகொடுக்கும்படி கேளுங்கள். அல்லாஹ் உங்களது பிரார்த்தனையை மறுக்கமாட்டான். ரசூலுல்லாஹ் சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்கள் கூறியுள்ளார்கள்; "**மனிதர்களில் பலர் இருக்கிறார்கள் அவர்கள் மிகவும் தாழ்ந்தவர்களாகவும் ஒன்றுக்கும் பிரயோசனம் இல்லாதவர்களாகவும் இருப்பார்கள். ஆனால் அவர்கள் அல்லாஹுவின் நேசத்துக்குரிய அடிமைகளாகும். அவர்கள் எதையாவது செய்ய நாடினால் அல்லாஹ் அதை செய்து முடிக்கிறான்**."[1] முஸ்லிம்கள் இந்த ஹதீதுக்கு அடிபணிந்தவர்களாக, அவ்லியாக்களை பரிந்துரைக்குமாறு வேண்டுகிறார்கள். இமாம் அஹமத், இமாம் அஸ் ஷாபி'ஈ , இமாம் மாலிகி இமாமுல் அஃ'லம் அபுஹனீபா ஆகியோர் கூறியுள்ளார்கள் புனித நல்லடி யார்களின் கபுருகளை கொண்டு பறக்கத் தேடுவது அனுமதிக்கப்பட்டது (ஜாயிஸ்). நாங்கள் அஹ்லுஸ் ஸுன்னாவை அல்லது மதுஹபுகளை சேர்ந்தவர்கள் என்று கூறுவோர் இந்த இமாம்கள் கூறியதை சொல்ல வேண்டும். இல்லாவிட்டால், அவர்களை நாங்கள் சுன்னிகள் என்பதைவிட பொய்யர்கள் என்று கூற வேண்டும். (பக்கம் 118). **அல் பதாவா அல் ஹிந்திய்யா** னும் நூலில் வேறு ஒருவருக்காக ஹஜ் செய்வது சம்பந்தமாக எழுதப்பட்டுள்ளது. ஒரு இபாதத்தை செய்து அதன் தவாபை தருமம் செய்வது அனுமதிக்கப்பட்டுள்ளது என்று கூறப்பட்டுள்ளது. ஆகவே, தொழுகை,

நோன்பு, சக்கத்து, சதகா, ஹஜ்ஜ், குர் ஆன் ஓதுதல், திகிர், நபிமார்களின் அவ்லியாக்களின் ஷுஹதாக்களின் சாலிஹான முஸ்லிம்களின் கபுருகளை தரிசிப்பது, மய்யிதுகளுக்கு கபன் கொடுப்பது, மற்றும் தான தருமங்கள், பரிசுகள் நற்செயல்கள் போன்றவைகளின் தவாபை தானம் செய்வது அனுமதிக்கப்பட்டுள்ளது. மேல்கூறப்படவையிலிருந்து அவ்லியாகளின் கபுரை தரிசிப்பது நன்மையான விடயம் என்று விளங்குகிறது.

மேல்கூறப்பட்டவைகள் அரபியிலும் ஆங்கிலதிலும் உள்ள பல நூல்களில் விரிவாக எழுதப்பட்டுள்ளன. அல்லாஹு த ஆலா முஸ்லிம்களை ஒற்றுமைப்படுமாறு கட்டளை யிட்டுள்ளான். ஆகவே, முஸ்லிம்கள் எல்லோரும் அஹ்லுஸ் சுன்னா மேன்மைமிக்க அறிஞர்கள் அவர்களின் நூல்களில் மாற்றும் போதனைகளில் காட்டிய '**அஹ்லுஸ் ஸுன்னா வல் ஜமாஅ**' வின் **இஃ'திகாதை** கற்று அதை நம்பிக்கை கொண்டு சரியான வழியில் ஒன்றுபட வேண்டும். எமது நபி சல்லள்ளாஹு அலை ஹி வசல்லம் அவர்கள் கூறியுள்ளார்கள். **சரியான ஒரே வழி அஹ்லுஸ் ஸுன்னாவின் வழியாகும்.** நாங்கள் அஹ்லுஸ் சுன்னாவின் ஒற்றுமையிலிருந்து தவறுவதை விட்டு மிகவும் கவனமாக இருப்பதுடன், மதத்தின் அதிகாரத்தில் இருக்கும் மார்க்கத்தை அறியாத மூடர்களின் மற்றும் முஸ்லிம்களை வழிகெடுக்க முயற்சிக்கும் வழி தவறியவர்களின் ஏமாற்று பிரச்சாரங்கள், நூல்கள் வெளியீடுகளினால் வழி தவறி விடாமல் மிகவும் கவனமாக இருக்கவேண்டும். அல்லாஹு த்த ஆலா சூரா நிசாவின் 114வது ஆயத்தில் : இஸ்லாத்தின் ஒற்றுமையில் இருந்து பிரிபவர்கள் நரகம் செல்வார்கள் என்று கூறுகிறான். ஒருவர் இந்த நான்கு மதுஹபுகளை கொண்ட அஹ்லுஸ் சுன்னாவில் சேராமல் விலகி முஸ்லிம்களின் ஒற்றுமையை கெடுக்கும் லா-மதுஹபிகள் வழிதவறியவர்கள் அல்லது முஸ்லிம் அல்லாதவர்கள். என்பதற்கு இது தெளிவானது ஆதாரங்களும் சான்றுகளும் ஆகும் [2].

**அத் தவஸ்ஸுலு பின் நபி வ ஜஹாலத் அல் வஹ்ஹாபிய்யின்** என்ற நூல் இப்னு தைமிய்யா **அஹ்லுஸ் சுன்னாவின்** வழியிலிருந்து விலகிச்சென்றுள்ளார் என்பதை

---

[1] இந்த ஹதீது பத்ஹுல் மஜீதிலும் 381 ஆம் பக்கத்தில் கூறப்பட்டுள்ளது.

[2] மாபெரும் அறிஞர் அத் தஹ்தாவியின் **காஷியாத்து துர்ரல் முக்தார்**, பாகிஸ்தானில் **பத்ஹுல் மஜீத்துக்கு** மறுப்பாக எழுதிய **அல் பஷாயிர் அலல் முன்கிரித் தவஸ்ஸுலி பில் மகாபிர்**

தகுந்த ஆதாரங்களுடன் நிரூபிக்கின்றது. வஹாபிசம் என்பது இப்னு தைமிய்யாவின் வழிகேடுடன் பிரிட்டிஷ் உளவாளி ஹம்பெர்ஸ் இன் பொய்யும் அவதூறும் கலந்த கலவை ஆகும்.[1]

3. வாஹ்ஹபிகள் கூறுகிறார்கள் "கபுரின் மேல் 'குப்பா' (டோம்) எழுப்புவதும், வணங்குவதற்காக எண்ணை விளக்குகளை எரிப்பதும், கபுரடியில் பரிமாறுவதும், மரித்தவர் பேரில் நேர்த்தி செய்வதும், குப்ரை(நிராகரிப்பை) உண்டாக்கும். மக்கா மதீனாவில் இருந்தவர்கள் இன்னும் குப்பாவையும் சுவரையும் இதுவரை வணங்குகிறார்கள்".

பார்வைக்காக(காட்சிப்படுத்தலுக்காக) அல்லது அலங்கரத்துக்காக(அழகுக்காக) கபுரின் மேல் குப்பா கட்டுவது ஹாராம்.

அழிக்கப்படுவதிலிருந்து பாதுகாப்புக்காக கட்டினால் அது மக்ரூஹ், திருடன் அல்லது மிருகங்கள் உள்ளே போவதை தடுப்பதற்காக எனின் அனுமதிக்கப்படும். ஆனால் அது தரிசிப்பதற்குரிய இடமாக இருக்கக்கூடாது. அதாவது; குறித்த நேரங்களில் மட்டும் தரிசிக்கலாம் என்று இருக்கக்கூடாது. முன்னர் கட்டப்பட்ட கட்டடம் ஒன்றினுள் அடக்குவது மக்றூஹ் அல்ல. சஹாபத் கிராம்கள் ரசூலுல்லாஹ் சல்லாள்ளஹுஅலைஹி வசல்லம் அவர்களையும் மற்றைய இரண்டு கலீபாக்களையும் கட்டடத்திற்குள்தான் அடக்கினார்கள். யாரும் அதை எதிர்க்கவில்லை. ஹதீத் ஷரீப்கள் தெரிவிக்கின்றன, அவர்களின் ஏகோபித்த முடிவு பிளையானதாக இருக்க முடியாது. மாபெரும் இஸ்லாமிய அறிஞர் இப்னு ஆபிதீன் எழுதியுள்ளார்கள். சில அறிஞர்கள் முஸ்லிம் நல்லடியார்கள் அவ்லியாக்கள் கபுருகளின்மேல் சீலையால் மூடுவது. ஒரு தலைப்பாகை வைப்பது மக்றூஹ் என்று கூறியுள்ளார்கள். அல் பத்தாவா அல் ஹுஜ்ஜா எனும் நூலில் கபுரை சீலையால் மூடுவது மக்றூஹ் என சொல்லப்படிகிறது. ஆனால் கபுரில் உள்ளவரின் மேன்மையை உணர்த்துவதற்கும், அவர்கள் அவமரியாதை செய்யப்படக்கூடாது வருபவர்கள் கவனமாக அழகிய முறையில் மரியாதையாக நடந்து கொள்ள வேண்டும் என்ற நோக்கத்தில் கபுரை மூடுவது மக்றூஹ் அல்ல. **அல் அதில்லத் அஸ் ஷரீ'ஆ** வில் தடை செய்யப்படாத செயல்கள் அதன் நோக்கத்தை கொண்டு தீர்மானிக்கப்படும். ஆம், சஹாபத் கிராம்களின் காலத்தில் குப்பாக்கள் கட்டுப்படவில்லை, போர்வைகளால் மூடப்படவில்லை என்பது உண்மை. ஆனால் அவர்களில் யாரும் ரசூலுள்ளாஹ் சல்லாள்ளாஹுஅலைஹி வசல்லம் அவர்களையும் அவர்களின் இரண்டு தோழர்களையும் (இரண்டு கலிபாக்கலையும்) ஊரே அறையில் அடக்குவதற்கு எதிர்ப்பு தெரிவிக்க வில்லை.

இந்த காரணத்திற்காக மேலும் "**"கபுருகளை மிதிக்காதீர்கள்"** என்ற கட்டளைக்கு அடிபணிந்தும், இன்னும் அவை தடுக்கப்பட்டு இருக்கவில்லை. அவை பின் வந்தவர்களால் செய்யப்பட்டு வந்த நடைமுறைகள் என்பதால் அவை பித்'ஆ வாக முடியாது. அனைத்து பிக்ஹு நூல்களும் கூறுகின்றது; விடைபெறும் தவாபை செய்தபின் கஃ'பாவுல் முஅஸ்ஸமா'வுக்குரிய மரியாதை கொடுப்பதற்காக மஸ்ஜிதுல் ஹராமை விட்டு வெளியேறுவது அவசியமாகும். எனினும் சஹாபாக்கள் அவ்வாறு செய்ய வேண்டிய அவசியம் இருக்கவில்லை ஏனெனில் அவர்கள் எப்பொழுதும் கஃ'பாவுக்கு மரியாதை செயபாவர்களாக இருந்தார்கள். ஆனால் பின்வந்த சந்ததியினர் அந்தளவு மரியாதை கொடுக்காத காரணத்தினால் எங்களுடைய அறிஞர்கள்

---

[1] தயவு செய்து Confessions of a British Spy, எனும் நூலை பார்க்கவும் இது ஹக்கீகத் கிதாபேவி யில் உள்ளது

மஸ்ஜிதை விட்டு பிரியும் போதுபின்னோக்கி நடந்தி வெளியே செல்ல வேண்டும் என்று கூறியுள்ளார்கள். இப்படி செய்வதன் மூலம் சஹாபாக்கள் மஸ்ஜிதுக்கு கொடுத்த மரியாதையை எமக்கும் சாத்தியமாக்கினார்கள். இதைப்போல், சாலிஹீன்கள் (நல்லடியார்கள் அவ்லியாக்களின் ) கபுருகளை போர்த்துவதன் மூலம் , குப்பாக்களை கட்டுவதன் மூலம்

சஹாபாக்கள் அவர்களுக்கு கொடுத்த மரியாதையை நாங்களும் கொடுப்பதற்கு முடியுமாகும். பெரும் அறிஞர் அப்துல் கனி அன் நப்லுசி அவர்கள் இதை மிக விளக்கமாக தனது நூல் **கஷ்ப் அன் நூர்**[1] இல் கூறியுள்ளார்கள். அரேபியாவில் கபுர் ஸ்தலங்கள் '**மஷ்ஹத்**' என்று அழைக்கப்படும். மதீனா முனவ்வராவில் ஜன்னத்துல் பக்கீயில் பல மஷ்ஹதுகள் உள்ளன . லா-மதுஹபிகள் அவற்றை எல்லாம் உடைத்து விட்டார்கள். அப்பொழுது இருந்த இஸ்லாமிய அறிஞர்கள் கல்லறைகள் கட்டுவதையும் தரிசிப்பதையும் இணைவைப்பு என்றோ நிராகரிப்பு என்றோ கூறவில்லை. அவர்கள் யாருமே அவற்றை உடைக்கவுமில்லை.

இப்ராஹீம் அல் ஹலபி ரஹீமஹுல்லாஹு த ஆலா அவர்களின் **அல் ஹலபி அல் கபீர்** என்ற நூலில் கடைசியில் எழுதுகிறார்கள். ஒருவருக்கு ஒரு நிலம் இருந்து அதை அவர் ஒரு அடக்கஸ்தலமாக ஆக்கவிரும்பி ஒரு கல்லறை கட்டுவதற்கு இடமிருந்தால் குப்பாவுடன் கூடிய கல்லறை கட்ட அனுமதிக்கப்படுகின்றது. அதில் பின்னர் அடக்கம் செய்யலாம். வெறும் நிலம் இல்லாத போது அந்த கல்லறை உடைக்கப்பட்டு அந்த மய்யித்தும் தோன்டப்படலாம். இது மையானதிற்காக வக்பு செய்யப்பட்ட இடமாக இருப்பதால். அந்த கல்லறை கட்டடங்கள் சிலைவனக்கங்கள் இடம்பெறுமாக இருந்தால் அல்லது வணங்கப்படுவதாக இருந்தால் அவற்றை உடைப்பது அவசியமாகும்.

உலகில் முதலாவது இஸ்லாமிய கல்லறை ஹுஜ்ரத் அல் முஅத்தராவாகும் ரசூலுல்லாஹ் சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அடங்கப்பட்ட இடம் எங்கள் ரசூலுல்லாஹ் சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்களின் அன்பு மனைவி ஹசரத் ஆயிஷா ரலியல்லாஹுத்தஆலா அன்ஹா அவர்களுக்கு சொந்தமான அறையில் திங்கள் கிழமை ரபியுல் அவ்வல் 12இல் ஹிஜ்ரி 11இல் அவர்கள் இவ்வுலகை விட்டு பிரிந்தார்கள். புதன்கிழமை இரவு அதே அறையில் அடக்கம் செய்யப்பட்டார்கள். ஹஸரத் அபுபகர், ஹஸரத் உமர் ரலியல்லாஹுத்தஆலா அன்ஹுமாவும் அதே அறையில் அடக்கம் செய்யப்பட்டார்கள். எந்த சஹாபியும் இதை எதிர்க்கவில்லை. ஆனால் இந்த சஹாபிகளின் ஏகோபித்த ஒற்றுமை இன்று எதிர்க்கப்படுகின்றது. சந்தேகத்துக்கு இடமான ஒரு ஆதாரத்தை(தலீல்) வைத்து பிழையான விளங்கப்படு வதன்மூலம் (தஃவீல்), **இஜ்மா அல் உம்மா** வை மறுப்பது நிராகரிப்பை உண்டாக்காது. அது பித்'ஆவை உண்டாக்கும்.

ஹசரத் ஆயிஷா ரலியல்லாஹுத்தஆலா அன்ஹா அவர்களின் அறை 3மீட்டர் உயரமானது, சுமார் 3மீட்டர்கள் நீளமும் 3மீட்டர் அகலமும் உள்ளது, சுடப்படாத காய்ந்த கற்களைக்கொண்டு கட்டப்பட்டது. இரண்டு கதவுகளைக் கொண்டது ஒன்று மேற்கு பக்கமாகவும் உள்ளது. ஹசரத் உமர் ரலியல்லாஹுத்தஆலா அன்ஹு அவர்கள் காலத்தில் **ஹுஜ்ரத் அஸ்ஸ'ஆதா** வைச் சுற்றி ஒரு பணிவான சுவர் கல்லினால் கட்டினார்கள். ஹசரத் அப்துல்லாஹ் இப்னு சுபைர் ரலியல்லாஹுத்தஆலா அன்ஹு

---

[1] இப்னு ஆபிதீன் காஷியாத்து துர்ரல் முக்தார் ( ரத்துல் முஹ்தார் ) பக்கம் 232, 5ம் பாகம் புலக் 1272; கஷ்ப் அன் நூர் மற்றும் ஜலாலுத்தீன் சுயுத்தி ரஹீமஹுல்லாஹு த ஆலா அன்ஹு ,தன்வீர் அல் கலாக் பி இம்காணி று'யத்தின் நபி ஜிஹ்றான் வால் மலக் இவை

அல் மின்ஹாத் அல் வஹ்ஹபிய்ய என்ற பெயரில் இஸ்தன்புளில் ஒன்றாக பிரசுரிக்கப்பட்டது. 1393[1973 AD ]
அவர்கள் கலீபாவாக ஆனதும் இந்த சுற்றுமதிலை அகற்றிவிட்டு கரும் கல்லினால் திரும்பவும் கட்டி சாந்து பூசி அழகு படுத்தினார். இந்த சுவர் வரை கூரை இருக்கவில்லை. வடக்கு நோக்கி கதவு இருந்தது. ஹசரத் ஹசன் ரலியல்லாஹு த ஆலா அவர்கள் ஹிஜ்ரி 49இல் மரணித்த போது அவர்களின் கடைசி வக்குறுதிக்கேற்ப அவர்களின் சகோதரர் ஹசரத் ஹுசைன் ரலியல்லாஹுத்தஆலா அன்ஹு அவர்களின் ஜனாஸாவை ஹுஜ்ரத் அஸ் ஸ'ஆதா வின் கதவுக்கருகில் கொண்டு வந்து அவர்களின்
உடல் உள்ளே கொண்டு சென்று தொழுகையும் ரசூலுள்ளஹ்வின் சபா'அத்துக்காக பிரார்த்தனையும் செய்ய முனைந்த போது அங்கு சிலர் அவர்களை அங்கேயே அடக்கம் செய்யப்போகிறார்கள் என்று நினைத்து இதை எதிர்த்தார்கள். அந்த நிலைமையை கட்டுப்படுத்துவதர்காக உடல் உள்ளே கொண்டு செல்லப்பட வில்லை , அதன் பின்னர் ஜன்னத்துல் பக்கீ'யில் அடக்கம் செய்யப்பட்டது. இதன் பின்னரும் இது நடக்காமலிருக்க அறையின் கதவுகலும் வெளிப்பக்க கதவும் சுவர் கட்டப்பட்டது.

ஆறாவது உமய்யத் கலீபா வலீத் அவர்கள் மதீனாவின் கவர்னராக இருக்கும்போது அறையை சுற்றி சுவர்ளை உயர்த்தி கட்டி மேலே ஒரு சிறிய குப்பாவும் அமைத்தார்கள். அவர் கலீபாவான பொழுது அவரின் இடத்துக்கு கவர்னர் உமர் இப்னு அப்துல் அஸீஸ் வந்தார். கலீபாவின் உத்தரவுப்படி மதீனாவின் கவர்னர் உமர் இப்னு அப்துல் அஸீஸ் மஸ்ஜிதுஸ் ஷரீபை ஹிஜ்ரி 88 [ 707A.D.] விரிவாக்கினார் இதன் காரணத்தால் ரவ்லாவை சுற்றி கதவுகள் இல்லாமல் இரண்டாவது சுவர் எழுப்பட்டு கூரையும் செய்யப்பட்டது. இது ஐந்து பக்கங்களை கொண்டதாயிற்று. [1]

பத்ஹுல் மஜீத் கூறுகிறது: ஒருநபர் மரம், கல், கபுறுகள் மூலமாக பரக்கத்தை பெற்றுக்கொள்ள நினைத்தால் அவர் இணை வைத்த காபிர் ஆகுவார். கபுருகள் குப்பாக்கள் கட்டுவதன் மூலம் சிலை வடிவம் கொடுக்கப்பட்டுள்ளது. மேலும், ஜாஹிலியா காலத்து மக்கள் பக்தியுள்ள மனிதர்களையும் சிலைகளையும் வணங்கினார்கள். இன்று அதைப்போன்றும் அதைவிட மேலாகவும் கபுருகளிலும் சியாரங்களிலும் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றது. நல்லடியார்களிடம் இருந்து ஆசி பெறுவது என்பது 'அல் லாத்'[2] சிலை வணகுவது போன்றது. இந்த இணை வைபவர்கள் அவ்லியாக்களால் அவர்களின் பிரார்த்தனைகளை கேட்கமுடியும் பதில் அளிக்க முடியும் என்று நினைகின்றார்கள். அவர்கள் கூறுகிறார்கள் நேர்ச்சை வைப்பது, உணவுகள் கொடுப்பதன் மூலம் மரணித்தவரை நெருங்குவதாக கூறுகிறார்கள். இவை அனைத்தும் பெரும் சிலை வணக்கத்தின் வழிகளாகும். அவர்கள் அவர்களை என்ன மாதிரி அழைத்தாலும் இணை வைப்பவர் இணை வைப்பவர்தான். மரணித்தவரிடம் பிரார்த்திப்பது, மிருகங்களை பலியிடுவது, நேர்ச்சை செய்வது போன்ற செயல்கள் என்னவிதத்தில் செய்யப்பட்டாலும் அவை சிலை வணக்கம் தான். இன்று சிலை வணங்குபவர்கள் மரியாதை கவ்ரவம் (த'லிம்) மற்றும் தபர்ருக் என்ற வார்த்தையை பிரயோகித்து அவை ஆகும் என்று கூறுகிறார்கள். இந்த கூற்றுக்கள் ஆவதும் பிழையானவை.[3]

இந்த பொறுப்பற்ற கீழ்த்தரமான தாக்குதல்களுக்கு இஸ்லாமிய அஹ்லுஸ் ஸுன்னா அறிஞர்களால் அளிக்கப்பட்ட பதில்களை நாங்கள் மொழிபெயர்த்துள்ளோம் அவற்றை பலநூல்களில் எழுதியும் வருகின்றோம்.

---

[1] Advice for the Muslim என்ற நூலின் 15வது கட்டுரையை பார்க்கவும்.

[2] இஸ்லாத்திற்கு முன் ஜாஹிலிய்யா காலாத்தில் வணங்கப்பட்ட சிலைகளில் பிரதானமானது.

[3] பாத்ஹுல் மஜீத் பக்கம் 133

**அல் உசூலுல் அர்ப'ஆ பி தர்தீத் அல் வஹ்ஹபிய்யா** எனும் நூலின் முதலாவது அத்தியாயத்தில் வரும் பந்தி ஒன்றினை மொழிபெயர்த்து அடுத்த பந்தியில் தருகிறோம். வஹ்ஹாபிகள் மக்களை எப்படி எமாற்றியுள்ளர்கள் என்பது ஆர்வமுள்ள வாசகர்கள் சிந்தித்து முஸ்லிம்கள் ஒற்றுமைபடுவதற்கு முயற்சி செய்வார்களாக.

குர்'ஆனுல் கரீம், ஹதீது ஷரீப், சலபுஸ்ஸாலிஹீங்களின் சொல் மற்றும் செயல்கள் மற்றும் அநேக அறிஞர்களின் படி அல்லாஹுவை தவிர வேறு ஒருவருக்கு **த'சீம்** மரியாதை செய்வது அனுமதிக்கப்பட்டது. சூரா ஹஜ்ஜின் 32வது ஆயத்து கூருகிறது: **ஒருவர் அல்லாஹு த'ஆலாவுடைய "ஷ'ஆ'யிரு"க்கு கௌரவம் (யு-அzஸ்ஸிம்) கொடுப்பது ஒருவரின் இதயத்தின் தக்வா. ஆகவே, அல்லாஹு த'ஆலாவுடைய ஷ'ஆ'யிர் க்கு கௌரவம் கொடுப்பது வாஜிப் ஆகிறது**. **ஷ'ஆ'யிர்** என்பது அடையாளம் அல்லது குறியாகும். அப்துல் ஹக் தஹ்லவி ரஹீமஹுல்லாஹு தஆலா கூறுகிறார்கள்; ஷ'ஆ'இர் என்பது ஷ''ஈரா வின் பன்மை ஆகும். இது அறிகுறி(அலாமா) என்று பொருள்படும். அல்லாஹ்வை நினைவு படுத்தும் எதுவும் அல்லாஹ்வுடைய **ஷ'ஈரா** வாகும்.

சூரா அல் பகராவின் 158வது ஆயத் கூறுகிறது: **அஸ்ஸபாவும் அல்மர்வாவும் அல்லாஹ்வின் ஷா'ஆ'யிர்களில் இல் உள்ளதாகும்.** இந்த ஆயத்திலிருந்து சபா, மர்வா மலைகள் மட்டுமல்லாது இன்னும் பல ஷா'ஆ'யிர்கள் உள்ளன என்பது இந்த ஆயத்திலிருந்து விளங்குகின்றது. இன்னும் அரபாத், மினா, முஸ்தலிபா என்னும் இடங்கள் மட்டும் ஷ'ஆ'யிர்கள் அல்ல. ஷா வலியல்லாஹ் அத்தஹ்லவி ரஹீமஹுல்லாஹு தஆலா அவர்கள் அவர்களின் ஹுஜ்ஜத் அல்லாஹில் பாலிஃஹா வில் 69ம் பக்கத்தில் குறிப்பிடுகிறார்கள். அல்லாஹ்வின் மிகப்பெரிய ஷ'ஆயிர்கள் குர்'ஆனுல் கரீம் , கஃ'பா அல்முஅzஸ்ஸமா, எங்கள் நபி அலைஹிஸ் ஸலாத்து வஸ்ஸலாம், மற்றது தொழுகை ஆகும். ஷா வலியல்லாஹ் அத்தஹ்லவி ரஹீமஹுல்லாஹு த ஆலா அவர்களின் அல்தாப்f அல் குத்ஸ் இல் 30ம் பக்கத்தில் கூறுகிறார்கள்: அல்லாஹு த ஆலாவின் ஷ'ஆ'யிர்களை அன்பு வைப்பது என்பதன் பொருள் குர்'ஆனுல் கரீம் , கஃபா அல் முஅzஸ்ஸமா, எங்கள் நபி அலை ஹிஸ் ஸலாத்து வஸ்ஸலாம் அல்லது அல்லாஹ்வை நினைவு படுத்தும் எதையும் குறிக்கும். அவ்லியாக்களை அன்பு வைப்பதும் அதே மாதிரி தான்.[1] மஸ்ஜிதுல் ஹரமுக்கு அருகில் உள்ள சபா மற்றும் மர்வா மலைகள், இரண்டுக்குமிடையில் ஓடிய நபி இஸ்மாயில் அளஹிஸ் ஸலாத்தின் அன்னை ஹசரத் ஹாஜறாவும் அல்லாஹ்வின் ஷ'ஆயிர் களில்

உள்ளவர்கள் அவர்களை நினைப்பது நன்மையானது எனின் படைப்புகளிலேயே அது உன்னதமான உயர்ந்த படைப்பான எங்கள் நாயகம் அலை ஹிஸ்ஸலாத்து வஸ்ஸலாம் பிறந்த இடம், வளர்ந்த இடம், வணங்கிய இடம் சென்ற இடம் அவர்களின் தொழுத இடம், மறைந்த இடம்,அடங்கப்பட்ட புனித ரவ்லா அவர்களின் தோழர்கள், அஹ்லு பைத்துகள் என்பவை ஷி'ஆயிரா வாக முடியாதா? ஏன் அவைகளை நாசம் பண்ணினார்கள்?.
குர் ஆனுல் கரீமை மிக கவனமாகவும்,குறிக்கோளுடனும் ஓதினால் அநேக ஆயத்கள் ரசூலுள்ளாஹ் அலைஹிஸ் ஸலாமை கௌரவிப்பதை (த'சீம்) எடுத்துக் கூறுகின்றன.

---

[1] நபியவர்கள் சொன்னார்கள் **அவ்லியாவைக்** காணும்போது அல்லாஹ் நினைவு கூரப்படுகிறான். இந்த ஹதீத் இப்னு ஷைபாவின் முஸ்னதிலும், **இர்ஷாதுத் தாலிபீனிலும்**, மற்றும் **குநூஸ் அத் தக்காயிக்** கிலும் கூறப்பட்டுள்ளன.இந்த ஹதீது அவ்லியாகளும் ஷ'ஆயிர் என்பதை நிருபிக்கின்றது. **ஜாமிஉல் பதாவா** வில் எழுதப்பட்டுள்ளது; மரியாதையை காட்டுவதற்காக அவ்லியாக்களின் கபுருகளின் மேல் குப்பா கட்டுவது அனுமதிக்கப்பட்டுள்ள்ளது.

சூரா ஹுஜுராத்' இல்.

- **ஓ நம்பிக்கை கொண்டவர்களே! அல்லாஹு தஆலாவையும் அவனுடைய நபியையும் 'ஸல்லள்ளாஹு அலைஹி வசல்லம்' முந்தாதீர்கள். அல்லாஹ்வை பயந்து கொள்ளுங்கள்.**
- **ஓ நம்பிக்கை கொண்டவர்களே! நபியை விட உங்கள் குரலை உயர்த்தி பேசாதீர்கள்!.**
- **நீங்கள் மற்றவர்களை அழைப்பது போன்று நபியை அழைக்காதீர்கள்!. அவ்வாறு செய்பவர்களின் வணக்கங்களின் நன்மைகள் அழிந்து போய்விடும்.**
- **அல்லாஹு த ஆலாவின் நபிக்கு முன் தனது குரலை தாழ்த்தியவர்களின் இதயத்தில் ல்லாஹ் தக்வாவை கொண்டு நிரப்பி விடுவான்.**
- **அவர் அவர்களின் பாவங்களை மன்னிக்கின்றான், பல நன்மைகளை கொடுக்கின்றான். அவருக்கு எதிராக வெளியே சத்தமிடுபவர்கள் சிந்தனையற்றவர்கள். அவர் வரும் வரை காத்திருக்கட்டும்.**

இந்த ஐந்து ஆயத்துகளையும் பக்க சார்பின்றி வாசித்து விளங்குபவர்களுக்கு அல்லாஹு தஆலா எவ்வளவு கண்ணியத்தை(த'சீம்) எங்கள் நபிமேல் சொரிந்திருக்கிறான் என்பது தெரிய வரும். அவன் அவர்கள் மீது கண்ணியமாகவும் தாழ்மையாகவும் நடந்துகொள்ள வேண்டும் என்று உம்மத்துக்கே கட்டளை இடுகின்றான்.

ரசூலுல்லாஹ்வுக்கு கண்ணியம் கொடுப்பதன் முக்கியத்துவம் அவர்களின் குரலை விட சப்தத்தை உயர்த்துபவர்களின் அமல் அத்தனையும் அதன் நன்மைகளுடன் சேர்த்து அழிக்கப்பட்டுவிடும் என்பதிலிருந்து விளங்குகிறது. இந்த ஆயத்து பனிதமீம் கிளையினர் 70 பேர் மதீனாவில் கூடி நபியவர்களை சத்தமிட்டு அழைத்தனர் அதற்கு தண்டமாக இந்த ஆயத் இறக்கப்பட்டது. இன்று சிலர் அவர்கள் பனி தமீம் கிளையை சேர்ந்தவர்கள் என்று கூறுகின்றனர். அவர்களுக்காக தான் ரசூலுல்லாஹ் அலைஹிஸ்

சலாம் கூறினார்கள்: "**குழப்பமும், சித்திரவதை செய்யும் கூட்டத்தினர் கிழக்கில் உள்ளனர். அங்கிருந்தான் சைத்தான் ஒற்றுமையை குழப்புவான்".**என்று நஜ்த் பிரதேசத்தின்(அரபியன் தீபகற்பத்தில் உள்ள) திசையை அவர்களின் புனித கையினால் சுட்டிக்காட்டி கூறினார்கள். லா-மதுஹபிகள் சிலர் நஜ்து தேசத்தை சேர்ந்தவர்கள். அவர்கள் நஜ்திலிருந்து வெளியே பரவியவர்கள். ரசூலுல்லாஹ் எதிர் கூறிய ஒற்றுமையின்மை (நபிவாக்கு) 1200 வருடங்களுக்கு பின் தோன்றியது. அவர்கள் நஜ்திலிருந்து ஹிஜாசுக்கு வந்தார்கள்., அங்கிருந்த முஸ்லிம்களை கொன்றார்கள், சொத்துக்களை கொள்ளையடித்தார்கள், ஆண்களைக் கொன்று பெண்களையும் சிறுவர்களையும் அடிமையாக்கினார்கள். அவர்கள் காபிர்களைவிட கூடுதலான அடிமட்ட தீங்குகளை செய்தனர்.

**இன்னும் என்ன :** மேலுள்ள ஆயத்த்துகளில் திரும்ப திரும்ப கூறப்பட்ட வார்த்தை **ஓ நம்பிக்கை கொண்டவர்களே!** எல்லா நூற்றாண்டிற்கும் உரிய முஸ்லிம்கள் கடைசிநாள் வரைக்கும் தோன்றக்கூடிய முஸ்லிம்களுக்கு ரசூலுள்ளாவிடம் சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்களுடன் மரியாதையாய் நடந்து கொள்ளு மாறும் அவர்கள் கண்ணியத்தை பேணுமாறும் கட்டளை பிறப்பிக்கின்றது. இந்த கட்டளை சஹாபாக்களுக்கு மட்டுமாயிருந்தால் ஓ சஹாபா 'ரலியல்லாஹு த ஆலாஅன்ஹும் அஜ்மஈன் ' என்று வந்திருக்கும். உண்மையில் ஒரு விஷயம்; **ஓ நபியின் மனைவி மார்களே! ஓ மதீனா வாசிகளே!** என்பன குர் ஆனில் வந்த வார்த்தைகள். அதே மாதிரி, **ஓ நம்பிக்கை கொண்டவர்களே!** என்ற வசனம் ; தொழுகை, நோன்பு , சக்கத்து, மற்றும் பர்லான வணக்கங்கள் இறுதி நாள் வரைக்கும் முஸ்லிம்களுக்கு பர்ளு என்பதும் குர் ஆண் வசனம். வஹ்ஹாபிகளின் கூறும் யோசனை நபி சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்கள் உயிருடன் உலகில் இருக்கும்வரக்கும்தான் அவர்களை மதிக்கவேண்டும் மறைந்தபிறகு மதிக்கக்கூடாது, அவர்களிடம் உதவி கேட்கக்கூடாது என்பது இந்த குரான் வசனங்களுக்கு முரண்படுகின்றது. இந்த ஆய்த்துகளின்படி அவர்களின் யோசனைகளை அடிப்படை அற்றது.

மேலும் இந்த ஆயத்துகளின் படி அல்லாஹ்வுடன் மற்றவர்களுக்கும் மரியாதை கொடுப்பது (த'சிம்) அவசியம் என சுட்டி காட்டுகின்றது. சூரா பகராவின் 104வது ஆயத்து எடுத்துரைக்கின்றது: **ஓ நம்பிக்கை கொண்டவர்களே! "றா'இனா"** [ நபியை நோக்கி]என்று கூற வேண்டாம். ஆனால், **"எங்களை பாருங்கள்"** என்று கூறுங்கள் , **நீங்கள் அல்லாஹுவின் கட்டளைக்கு செவி சாயுங்கள்.** (காது கொடுங்கள்). ஈமான் கொன்டவர்கள்' றா'இனா'( இங்கே பாருங்கள், எங்களை பாதுகாருங்கள் ) என்று நபியவர்களுக்கு சொல்வதை வழக்கமாக கொண்டிருந்தனர். றா'இனா என்றால் யூதர்களின் பாசையில் சத்தியம் செய்தல், களங்கப்படுத்தல் என்பது அர்த்தமாகும். யூதர்கள் ரசூளுல்லாஹ்விற்கு இந்த அர்த்தத்திலேயே கூறினார்கள். இது கூடாத அர்த்தத்தையும் கொடுப்பதால் அல்லாஹு த ஆலா அதை தடை செய்தான்.

சூரா அல்-அன்பால் இல் 33வது ஆயத்: "**நீங்கள் அவர்களுடன் இருக்கும்வரை அல்லாஹு த ஆலா அவர்களை தண்டிக்க மாட்டான்"** என்பது அவர்கள் உலக முடிவு வரை தண்டிக்கப்பட மாட்டார்கள். இந்த

ஆயத் வஹ்ஹாபிகள் கூறும் நபியவர்கள் மண்ணோடு மண்ணாகி விட்டார்கள் என்ற வாதத்தை மறுக்கின்றது.

சூரா பகராவின் 34வது ஆயத்: **நாம் மலக்குகளை ஆதமுக்கு சுஜூது செய்யுமாறு பணித்தபோது அவர்கள் எல்லோரும் சுஜூது செய்தார்கள் ஷைத்தான்(இப்லீஸை) தவிர**. ஆதம் அலைஹிஸ்ஸலாம் மரியாதை செய்யப்படவேண்டியவர் (த'சீம்)என்று இந்த ஆயத் கரீம் கட்டளை இடுகின்றது. சைத்தான் அல்லாஹுத்த ஆளாவைத்தவிர வேறு யாருக்கும் மரியாதை செய்ய மாட்டேன் என்று மறுத்தான், நபியை அவமரியாதை செய்தான். அல்லாஹ்வின் கட்டளைக்கு அடிபணிய மறுத்தான். வஹ்ஹாபிகளும் சைத்தானின் முன்மாதிரியையே பின்பற்றுகின்றனர். யூசுப் அலை ஹிஸ் ஸலாத்தின் பெற்றோரும் சகோதரர்களும் மரியாதை செய்யும் விதமாக அவர்களுக்கு முன் சுஜூது செய்தார்கள். அல்லாஹுவை தவிர வேறு ஒருவருக்கு மரியாதை செய்வது இணைவைப்பாக இருந்திருக்குமாயின் அல்லாஹ் அவர்களை ஏவி இருக்கமாட்டான் , அவனுடைய அன்பிற்குரிய அடியார்களை விவரிக்கும்போது '**சஜ்தா**' என்று புகழ்ந்தும் இருக்கமாட்டான். அஹ்லுஸ் ஸுன்னா நம்பிக்கையின் படி அல்லாஹுவை தவிர மற்றவர்களுக்கு சுஜூது செய்வது ஹராம் ஏனெனில் தொழுகையில் செய்யும் சஜதாவை ஒத்திருக்கின்றது என்பதால் தவிர, அது மரியாதைக்காக செய்வது என்பதால் அல்ல.

ஷைத்தான் நஜ்தில் உள்ள ஒரு வயோதிபர் உருவத்தில்தான் ரசூலுல்லாஹ் சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் முன் அடிக்கடி தோன்றுவான். மக்கவில் உள்ள தாருண் நத்வா எனும் இடத்தில காபிர்கள் கூடி இருந்தபோது ஷைத்தான் நஜ்தின் வயோதிபர் உருவத்தில் வந்து அவர்களுக்கு எப்படி நபியவர்களை கொல்வது என்று கற்றுக்கொடுத்தான். அங்கிருந்தவர்கள் அதை ஏற்றுக்கொண்டார்கள். அன்றிலிருந்து ஷைத்தான் **ஷெய்க் அன் நஜ்தி** என்று அழைக்கப்பட்டான். ஹசரத் முஹியித்தீன் இப்னு அரபி அவர்களுடைய **அல் முசாமராத்**: எனும் நூலில் கூருகிர்கள்; குறைசிக்காபிர்கள் கஃ'பா வை திருத்தவேலை செய்யும்போது அங்கிருந்த ஒவ்வொரு கிளை தலைவர்களும் தான்தான் புனித ஹஜருல் அஸ்வத் கல்லை தூக்கி வைக்கவேண்டும் என்ற போட்டி எழுந்தபோது அவர்கள் தீர்மானித்தார்கள் நாளை காலை இந்த வழியால் யார் வருகிறாரோ அவருடைய தீர்ப்பின் பிரகாரம் அவர் யாரை தெரிவு செய்கிறாரோ அவர் தூக்கி வைக்க வேண்டும் என்று ஏற்றுக்கொண்டார்கள். அடுத்த நாள் காலையில் ரசூலுல்லாஹ் தான் முதலில் வந்தார்கள். அவர்கள் இருபத்தைந்து வயதையுடையவர். அவர்கள் கூறினார்கள் முஹம்மத் மிகவும் நம்பிக்கைக்கு உரியவர் உண்மையாளர் அவர் சொலவத நாம் ஏற்போம் என்றார்கள். ரசூலுல்லாஹ் அவர்களை ஒரு காபற்றை (சீலையை)கொண்டுவரச்சொல்லி அதில் அந்த கல்லை(ஹஜருல் அஸ்வத்) தூக்கி வைக்க சொன்னார்கள். நீங்கள் எல்லோரும் சீலையின் கரையை பிடித்து கல் எந்த இடத்தில வைக்க வேண்டுமோ அந்த இடம் வரை தூக்குங்கள் என்றார்கள். அந்த இடம் வந்ததும் தனது புனித கையால் அதை தூக்கி சுவரில் வைக்க வேண்டிய இடத்தில் வைத்து சரிபன்னினார்கள். அந்த நேரத்தில் ஷேக் அன் நஜ்தி தோன்றிஇன்னொரு கல்லை காட்டி அதை பக்கத்தில் உறுதியாக இருக்க வைக்குமாறு கூறினான். அவனுடைய

உண்மையான நோக்கம் எதிர்காலத்தில் அந்தக்கல் விழ வேண்டும் அதனால் ஹஜருல் அஸ்வத் தனது பலமான நிலையை இழக்கவேண்டும் அதன் மூல ரசூலுல்லாஹ் சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் ஒரு சகுனம் அற்றவர் என்று மக்களுக்கு காட்டவேண்டும் என்பதுதான்.

ரசூலுல்லாஹ் ஸல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்கள் அந்த நேரம் **"அஊது பில்லாஹி மினஷ் ஷைத்தானி ர்ரஜீம் "** என்று கூறினார்கள். இதைக்கேட்டதும் உடனே ஷைத்தான் ஓடிப்போய் மறைந்து விட்டான். ஹசரத் முஹியித்தீன் இப்னு அரபி ரஹ்மாதுல்லாஹி தஆலா அலைஹி அவர்கள் தான் ஷைத்தானை ஷெய்க் அன்நஜ்தி என்று கூறப்படும் என்று உலகிற்கு தெரிய வைத்தவர்கள் இதனால்தான் ஹசரத் முஹியித்தீன் இப்னு அரபியை வஹ்ஹாபிகளும் லா மதுஹபிகளும் இந்த பெரிய வலியை வெறுக்கிறார்கள். உண்மையில் அவரை அவர்கள் காபிர் என்கிறார்கள். இதிலிருந்து தெரிகிறது அவர்களின் தலைவன் ஷைத்தான் என்பது. இதன் காரணத்தினால் அவர்கள் ரசூலுள்ளஹ்விடம் சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் இருந்து பெறப்பட்ட இடங்களை நாசப்படுத்துகிரார்கள் உடைக்கின்றார்கள். இந்த இடங்கள் மக்களை இணைவைப்பவர்கள் ஆகுகின்றது என்று அவர்கள் கூறுகிறார்கள். புனிதமான இடங்களில் வணங்குவது இணைவைப்பதாகும் என்றிருந்தால் அல்லாஹ் எங்களை ஹஜ்ஜ் செய்ய கட்டளை இட்டுருக்க மாட்டான். ரசூலுள்ளஹ் சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்கள் க'பாவை தவாப் செய்யும்போது ஹஜருல் அஸ்வத் கல்லை முத்தமிட்டுருக்கமாட்டார்கள். அரபா, மற்றும் முஸ்தலிபாவில் தொழுது இருக்கமாட்டார்கள். மினா வில் கல் எறிந்திருக்க மாட்டார்கள், சபா மர்வாவுக்கிடையில் நடந்திருக்க மாட்டார்கள். இந்த புனிதமான இடங்கள் இந்தளவு கண்ணியத்தை பெற்றிற்றுக்காது.

அன்சாரீன்களின் தலைவர் ஸ'திப்னு முஆத் ரலியல்லாஹு த ஆலா அன்ஹு அவர்கள் ரசூலுள்ளாஹ் சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் இருந்த இடத்திற்கு வந்தார்கள். அப்பொழுது ரசூலுள்ளாஹ் சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் "**உங்கள் தலைவனுக்கு எழுந்து நில்லுங்கள்!"** என்று கூறினார்கள். இந்த கட்டளை ஸ'திப்னு முஆத் அவர்களுக்கு மரியாதை செலுத்துவதற்காக சொல்லப்பட்டது. ஸ'த் நோயுற்றிருந்தார் என்று சொல்வது பிழையானது. ஸ'த் அவர்கள் அவரின் வாகனத்திலிருந்து (மிருகத்திலிருந்து ) இறங்குவதற்கு வசதியாக, அந்த கட்டளை எலல்லோருக்குமானது. அவர்களுக்கு உதவி செய்யவேண்டி இருந்திருப்பின் ஒரு சிலரைத்தான் நபிகள் சொல்லியிருப்பார்கள். ஸ'தும் அதைத்தான் சொல்லியிருப்பார். 'உங்கள் தலைவருக்காக' என்று சொல்ல வேண்டிய அவசியம் இருந்திருக்காது.

அப்துல்லாஹ் இப்னு உமர் ரலியல்லாஹு த ஆலா அன்ஹு அவர்கள் ஒவ்வொரு முறையும் மதீனாவிலிருந்து மக்காவிற்கு ஹஜ்ஜுக்காக செல்லும்போது ரசூலுல்லாஹ் அமர்ந்த புனித இடத்தில் தொழுது பிரார்த்தித்து விட்டுத்தான் செல்வார்கள். அவர்கள் ரசூலுல்லாஹ்வின் மிம்பரில் கைவைத்து தன் முகத்தில் தடவிவிடுவார்கள். இமாம் அஹ்மதிப்னு ஹம்பல் ரஹீமஹுல்லாஹு த அலா அன்ஹு அவர்கள் பரக்கத்துக்காக ஹுஜ்ரத் அஸ்ஸ'ஆதாவை மற்றும் மிம்பரை முத்தமிடுவார்கள். ஆனால்

இதற்கு மாறாக லா-மதுஹபிகள் தாங்கள் ஹம்பலி மதுஹபை சேர்ந்தவர்கள் என்று கூறுவார்கள் ஆனால் அந்த மதுஹபின் இமாம் செய்தது இணைவைப்பு என்பார்கள். இதிலிருந்து இந்த லாமதுஹபிகள் சொல்வது பொய் என்று விளங்குகிறது. இமாம் ஹம்பலி ரஹ்மாதுல்லாஹி அலை ஹி அவர்கள் இமாம் ஷாபி'எ அவர்களின் சட்டையை நீரில் அமிழ்த்தி அந்த நீரை அவர்களின் பரக்கத்திற்காக குடிப்பார்கள். காலிதிப்னு ஸைத் அபு அய்யுப் அல் அன்சாரி ரலியல்லாஹு த ஆலா அன்ஹு அவர்கள் தனது முகத்தை ரசூலுள்ளாஹ் சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்களின் புனித கபுரின் மேல் தேய்ப்பார்கள். ஒருவர் வந்து அவரை எழுப்ப முனையும்போது அவர்கள் என்னைவிட்டுவிடுங்கள் என்று சொல்லி நான் இங்கு வந்தது கல்லுக்கும் மண்ணுக்கும் அல்ல. ரசூலுள்ளாஹ் சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் அவர்களின் காட்சிக்காக என்று கூறினார்கள்.

சஹாபத் அல்கிராம் அலைஹிமூர்ரிள்வான் ரசூலுள்ளஹ்வின் பொருட்களைக் கொண்டு பறக்கத் பெற்றிருக்கிறார்கள். அவர்கள் வுளு செய்த நீரிலிருந்து, அவர்களின் வியர்வையிலிருந்து, மேலாடை, அஷா, வாள், கால் செருப்பு, க்ளாஸ், மோதிரம், அவர்கள் பாவித்த அனைத்திலும் பரக்கத்தை பெற்றுள்ளார்கள். விசுவாசிகளின் அன்னை உம்மு ஸலாமா ரலியல்லாஹு தஆலா அன்ஹா அவர்கள் நபியவர்களின் புனித தாடி யிலிருந்து ஒரு மயிரை வைத்திருந்தார்கள். நோயாளிகள் வந்தால் அவர்களுக்கு அந்த மயிரை நீரில் அமிழ்த்தி நீரை மட்டும் குடிக்க கொடுப்பார்கள். அவர்களின் கிளாசில் நீரை நிரப்பி உடல்நலத்திற்க்காக குடிப்பார்கள். இமாம் புஹாரி ரஹ்மதுள்ளாஹி அலைஹி அவர்களின் கபுரிலிருந்து கஸ்தூரி வாசம் வீசத்டங்கியது. மக்கள் அவர்கள் கபுரில் இருந்து மண்ணை எடுத்துச் சென்றார்கள் பரக்கத்திற்காக. அவர்களின் நடத்தையை[1] எந்த அறிஞர்களும்ம் முப்திகளும் அது சரியில்லை என்று கூறவில்லை. ஹதீது பிக்ஹு அறிஞர்கள் அதை அனுமதித்தார்கள். சஹாபத் கிராம்களின் காலத்தில், மற்றும் தாபிஉன்கள், இன்னும் முதலாவது மில்லேனியம் வரைக்கும் அநேக அவ்லியாக்களும் சாலிஹீன்களும் வாழ்ந்தார்கள் மக்கள் அவர்களை சந்தித்தார்கள் அவர்களின் துஆபரக்கத்தை பெற்றுக் கொண்டார்கள். அவர்களுக்கு மறைந்தவர்களிடம் (தவஸ்ஸுல்) போய் தங்கள் தேவைகளை தபர்ருக்கை பெற்றுக் கொள்ளவேண்டிய அவசியம் பெரிதும் இருக்கவில்லை. அந்த காலங்களில் இந்த மாதிரியான நிகழ்வுகள் மிகவும் அரிதாகவே இருந்தது என்பதால் அவை தடுக்கப்பட்டிருந்தது என்று அர்த்தமல்ல. அது தடுக்கப்பட்டிருந்தால் அதை தடுப்பதற்கும் மனிதர்கள் இருந்திருப்பார்கள். ஒரு அறிஞரேனும் தடுக்கவில்லை. கடைசி காலம் தொடங்கியதிலிருந்து பித்'ஆக்களும் நம்பிக்கையின்மையின் அறிகுறிகள் தென்படத்தொடங்கின. இஸ்லாத்தின் எதிரிகள் இஸ்லாமிய அதிகாரம் பெற்றவர்கள், அறிஞர்கள், விஞ்ஞானிகள் என்ற போர்வையில் இளைஞர்களை____எமாற்றத்தொடங்கினார்கள்.[2] சர்வாதிகாரர்களும், கொடுங்கோலர்களும், நபசுக்கு

---

[1] அல் உஸூல் அல் அற்ப'ஆ பாகம் 1 [2] விஞ்ஞானிகள் என்ற போர்வையில் உள்ளவர்கள் ஷாம் விஞ்ஞானிகள் என்று அழைக்கப்படுகின்றனர். மார்க்கவாதிகள் என்ற போர்வையில் இருப்பவர்கள் சிந்தீக் என்று அழைக்கப்படுகின்றனர்.

அடைமைப்பட்டவர்களும் அவர்களின் நோக்கங்களுக்கு வசதியாக இருந்தமையால் மார்க்கமற்றவர்களுக்கும் முனாபிக்குகளுக்கும் அவர்களின் இயக்கங்களுக்கும் தம் ஆதரவை வழங்கினர்.

அறிஞர்களின் எண்ணிக்கையும் வலிமார்களின் எண்ணிக்கையும் குறையத் தொடங்கியது. அண்மைக்காலமாக அறிஞர்கள் மிகக்குறைவாகவே தோன்றினர். ஆகவே மக்கள் வலிமார்களின் பறக்கத், உதவி பெறுவதற்காக அவர்களின் கபுருகளுக்கும், அவ்லியாக்களிடம் இருந்து கிடைக்கப்பெற்ற பொருள்களையும் கொண்டு பறக்கத் தேடுவது அவர்களுக்கு அவசியமாயிற்று. நிலைமை இவ்வாறு அமைந்தமையால் அவர்களின் செய்கைகளில் ஹராமானவையும் சேர்ந்து விட்டன.

இஸ்லாம் அங்கீகரித்த நடைமுறைகளை தடைசெய்யாமல், இஸ்லாமிய நடைமுறைகளுக்குள் புகுந்துவிட்ட மார்க்கம் அனுமதிக்காத நடைமுறைகள் பித்அத் கள் என்பன அறிஞர்களின் ஏகோபித்த ஒற்றுமையுடன்[1] அகற்றப்படவேண்டும். தயவு செய்து இஸ்தான்புல் ஹகீகத் வெளியீடான **Advice for the Muslim** என்ற நூலை பார்க்கவும். அதன் கடைசி பக்கம் வஹ்ஹபிகள் ஹிஜாஸில் முஸ்லிம்களுக்கு இளைத்த கொடும் வன்முறைகள், கொலை வெறி தண்டனைகள் என்பவற்றை விவரமாக விளக்குகின்றது. முஸ்லிம்கள் கபுருகளின் மேல் கல் வைப்பார்கள். அந்த கல்லில் மரணித்தவரின் பெயர்கள் எழுதப்படும். கபுரை தரிசிப்பவர்கள் அந்தப்பெயரில் உள்ளவரின் ஆத்மாவின் பேரில் பாதிஹா சூறா ஓதி பிரார்த்தனை செய்வார்கள். ஒருவர் ஒரு வலியின் கபுரை தரிசித்தால் அவர் வேறு பிரார்த்தனைசெய்வார் அதில் வலியிடம் தனக்கு பரிந்துரைக்கும்மாறும் பறக்கத் செய்யுமாறும் வேண்டுவார்.

---

[1] அறிஞர் அஹமத் பின் சைனி தஹ்லானின் **அட் துறார் அஸ் சனிய்யா பிர் ரத்தி அலல் வஹ்ஹபிய்யா** எனும் நூலில் இருந்து மேற்கோள் காட்டப்பட்டுள்ளன.எகிப்து 1319,1347 போட்டோகோபி மீள் பதிப்பு இஸ்தான்புல் 1395.1975 AD. இதை வாசிபவர்கல்லின் எல்லா சந்தேகங்களும் தீர்க்கபடும்.

# 7. இறுதி குறிப்பு

அல்லாஹு த ஆலா வின் பண்புகள் எல்லாம் அவனது ஒவ்வொரு படைப்புகளிலும் மிக சிறிய இடங்களில் பிரதிபலிக்கின்றன. உதாரணத்திற்கு;அவனுடைய கருணை மற்றும் அன்பு என்பன வெளிப்படையானது. அதைப்போலவே அவனது கோபம் , தண்டனை, வேதனையும். அவன் ஒவ்வொரு படைப்பிலும் பிரயோசனம் மற்றது ஆபத்து என்பவற்றை படைக்கிறான். மனிதன் இன்பகரமானது என்று கருதும் காமவெறியானது பிரயோசனமானது அதே நேரம் அவனை அது பிழையாக வழி நடத்துகிறது. மிகவும் இரக்கமுள்ள அல்லாஹு தஆலா நபிமார்களை

அனுப்பி ஒவ்வொன்றிலும் உள்ள நன்மை மற்றும் தீமைகளை பற்றி அறிவித்து நன்மையானவற்றை செய்யும்படியும் தீங்கானவற்றை தடுத்தும் கட்டளை இட்டுள்ளான். அவன் ஏவியவற்றை பர்ளு என்றும் தடுத்தவற்றை ஹராம் அல்லது துன்யா என்றும் பெயரிட்டுள்ளான். இந்த கட்டளைகள் (பர்ளு) மட்டும் தடுக்கப்பட்டவை(ஹராம்) என்பவற்றை முழுமையாக ஷரிஅத் என்றழைக்கப்படும். தடுக்கப்பட்டவை என்பதன் கருத்து "துன்யாவை தவிர்ப்பது". தவிர்ப்பது என்பது (ஹாராம் செய்வதை தவிர்த்தல்). துன்யா என்பதன் இன்னொரு பொருள் மௌத்துக்கு முதல் வாழ்வு. எந்த உலக இன்பமும் சுவையும் ஹராம் அல்ல ஆனால் அவற்றை தீங்கான வழியில் பிரயோகிப்பது தடுக்கப்பட்டுள்ளது. அவற்றை பிரயோசனமான வழியில் பாவிப்பது பர்ளு அல்லது சுன்னத். உடலின் வெவ்வேறு உறுப்புகள் அவற்றை பாவிக்கின்றன இன்பத்தை பெறுகின்றன. அதே போல் இதயமும் நப்சும் அதே வகையான உணர்வுகளைப் பெருகின்றன.

மனிதனின் உறுப்புகள் இதயத்தின் கட்டளையின் கீழ் இயங்குகின்றன. இதயத்தை நாம் கல்ப் என்று அழைக்கின்றோம். அது கண்ணால் பார்கக்கூடியது அல்ல. கல்ப் நாங்கள் இதயம் என அழைக்கும் இருதயத்த்தில் அமைந்துள்ள ஒரு சத்தி ஆகும்.

நப்ஸ் என்பது ஹறாமானவற்றை செய்வதில் மகிழ்ச்சியடைகின்றது. ஒரு பக்கம் ஷைத்தானும் நப்சும், மறுபக்கம் கெட்ட தோழர்கள் மற்றும் தீய நண்பர்களின் வழி கெடுக்கும் பேச்சுக்கள், எழுத்துக்கள், பிழையாக வழி நடத்தும் றேடியோ டெலிவிசன் நிகழ்சிகள் என்பன மனிதனை அவற்றின் பால் ஈர்த்து ஹராமானவைகளை செய்வதற்கு இதயத்தை தூண்டுபவை.

இதயத்தில் ஈமான் உள்ள ஒரு மனிதன் அதாவது முஹம்மத் அலைஹிஸ் ஸலாம் ஒரு நபி என்று நம்பிக்கை கொண்டவர் முஸ்லிம். ஒரு முஸ்லிம் அவருடைய செயல்கள் அனைத்தையும் முஹம்மத் அலைஹிஸ் ஸலாத்தின் ஷரியத்தின் அடிப்படையில் அமைத்துக்கொள்ள வேண்டும். அந்த ஷரீஅத்தை உண்மையான அஹ்லுஸ் ஸுன்னா அறிஞர்களிடமும் அவர்களின் நூல்கள் மூலமும் கற்றுக்கொள்ள வேண்டும். மதுஹபை கொண்டிராத அறிஞர்களின் நூல்களை வாசிப்பது கூடாது. அவர் ஷரி'ஆவை ஏற்று நடக்கும்போது அவர் உலக ஆசைகளிலிருந்து தூரமாகுவார். ஹராமானவற்றை விரும்பமாட்டார் அவரது இதயம் ஹராமனவற்றின் ஆசைகளிலிருந்து வெறுமையாகும் போது அல்லாஹ்வுடைய அன்பு அதில் போடப்படும். இது ஒரு போத்தலில் உள்ள நீரை வெளிஎற்றும்போது அதனுள் காற்று நிரம்புவது போல். நாங்கள் அறியாத உணர்வுகள் அதில் உண்டாகும். அது முழு உலகத்தையும், கபுரில் உள்ள வாழ்க்கைகையை கூட அறியும் உணர்வு ஏற்படும். அது எங்கிருந்தாலும் ஒரு சத்தத்தை கேட்கும். எங்காவது ஒரு சத்தம் இருந்தால் அதை கேட்கும்.

அவருடைய எல்லா வணக்கங்களும் பிரார்த்தனைகளும் ஏற்றுக் கொள்ளப்படும். அவர் ஒரு அமைதியான சந்தோசமான வாழ்கையை மேற்கொள்வார்.

அப்துர் ரஹ்மான் ஜெசீரீ d1384அவர்கள் எழுதிய '**அல் பிக்ஹுல் அலல் மதாஹபி ல் அர்ப'அ**' என்ற நூலில் 483வது பக்கத்தில் பின் வருமாறு எழுதப்பட்டுள்ளது: முஸ்லிம்கள் 'உத்ர்'(கட்டளைகளை நிறைவேற்ற அல்லது தடை செய்யப்பட்டவைகளை தவிர்ந் கொள்ள தடையாயுள்ள காரணங்கள்) இல்லாத நிலையில் ஐந்து நேரத்தொளுகைகளை அதற்குரிய குறிப்பிட்ட நேரத்தில் நிறைவேற்ற வேண்டும். அவைகளை குறிப்பிட்ட நேரத்திற்கு முந்தியோ அல்லது பிந்தியோ நிறைவேற்ற அனுமதியில்லை. இஸ்லாம் மார்க்கம் என்பது வசதியும் சலுகைகளும் உள்ள மார்க்கம். கஷ்டமான நேரங்களில் தொழுகைகளை குறிப்பிட்ட நேரத்திற்கு முந்தியோ அல்லது பிந்தியோ தொழுவதற்கு அனுமதி கொடுக்கப்படுகின்றது. இருந்தபோதும், இந்த சலுகைகள் சந்தர்பங்கள் மற்றும் நிலைமைகளை பொறுத்தது. இந்த நிலைமைகளை திருப்தி செய்யாமல் தொளுகைகளை அதற்குரிய குறிப்பிட்ட நேரத்தில் நிறைவேற்றாமல் இருப்பது பெரிய பாவமாக கணிக்கப்படும். இந்த நிலைமைகளும் தான் சார்ந்த மதுஹபை பொறுத்து வேறுபாடும்.

மாலிக்கி மதுஹபின்படி தொழுகைகளை ஜம்'உ(இரண்டு அடுத்து வரும் தொழுகைகளை சேர்த்து அவைகளின் குறிப்பிட்ட நேரத்துக்குள் தொழுவதற்கு) அனுமதி உள்ளது. நீண்ட பிரயாணம் செய்யும் போது(சபர்), நோயுற்று இருக்கும் காலத்தில், மழை காலத்தில், இரவு நேரங்களில் சேறு காரணமாக இந்த அனுமதி வழங்கப்படுகிறது. (Endless Bliss இன் 4ஆவது பகுதி 15ஆம் அத்தியாயத்தை பார்க்கவும்.)
ஷாபி'ஈ மதுஹபில் நீண்ட பிரயானத்திற்கும் , மழைக்கும் மேற்கூறப்பட்ட நிபந்தனைகளை பூர்த்தி செய்யும் போது ஜம்'உ செய்வதற்கு அனுமதி உண்டு.

ஹனபி மதுஹபில் பின்வரும் நபர்களுக்கு மட்டும் ஜம்'உ செய்வதற்கு அனுமதி உண்டு. சபர்; நீண்ட பிரயாணம்,நோய், பெண்களுக்கு விசேடமாக [பாலூட்டுதல், அதிக இரத்தம் வெளியாகுதல்] போன்ற காரணங்களுக்காக, உத்ர் காரணமாக அவர்களின் வுளு செல்லுபடியாகாமல் போகும் நபர், வுளு செய்வதற்கு அல்லது தயம்மம் செய்வதற்கு இயலாத நிலையில் உள்ள நபர், ஒரு கண் தெரியாத நபர், தொழுகை நேரத்தை பின்பற்ற முடியாதவர்கள்: உதாரணத்திற்கு நிலத்திற்கு கீழ் வேலை செபவர்கள், தனது உயிர், அல்லது சொத்து அல்லது கற்பு பாதிக்கப்படும் என்ற அச்சப்படும் நபர், தன்னுடைய தொழில் பாதிக்கப்படும் என்று ஏன்னுபவர்கள்.

இரண்டு தொழுகைகளை ஜம்'உ செய்வது என்பது ளுகர் மற்றும் அஸர் தொழுகைகளை தொழுவதர்காக : அஸர் தொழுகையை ளுகருடன் சேர்த்து முந்தி தொழுவது தக்தீம் என்றும் , ளுகர் தொழுகையை அஸர் தொழுகையுடன் சேர்த்து பிந்தி தொழுவது த'கீர் என்றும் கூறப்படும். இதே போல் மகரிபையும் இஷாவையும் சேர்த்து தொழுவதற்கு அனுமது உண்டு.

# உண்மையான முஸ்லிமாக இருப்பது எப்படி

முஸ்லிம் ஆக இருப்பதற்கு முதலில் செய்யவேண்டியது நமது நம்பிக்கையை அஹ்லுஸ் ஸுன்னா அறிஞர்கள் கூறியிருப்பதுபோல் அவர்களின் நூற்களில் கூறியிருப்பதுபோல் சரிசெய்து கொள்ள வேண்டும். இதன்படி மதுஹபுகள் மட்டும்தான் நரகில் இருந்து காப்பாற்றும். அல்லாஹு தஆலா அவர்களுக்கு அவர்கள் முஸ்லிம் உம்மாவிற்கு செய்த சேவைகளுக்காக எண்ணிலடங்கா நன்மையை கொடுத்தருள்வானாக. இஜ்திகாதின் தரத்தை அடைந்த நான்கு மதுகபுகளின் இமாம்களும், அவர்களினால் பயிற்றுவிக்கப்பட்ட உயரிய நிலையை பெற்ற அறிஞர்களும் அஹ்லுஸ் ஸுன்னா அறிஞர்கள் என அழைக்கப்படுவார்கள். ஈமானை சரிசெய்த பின் **பிக்ஹி**னூடாக அறிவிக்கப்பட்ட வணக்கங்களை செய்வது அவசியமானது. அதாவது ஷரி'ஆவில் கூறப்பட்டுள்ள ஏவல்களை செய்வதும் தடுக்கப்பட்டவைகளை தவிர்ந்து கொள்வது மாகும். ஐந்துநேரதொழுகைகளை எந்தவித தயக்கமுமின்றி, சோம்பலுமின்றி மற்றும் அவற்றுக்குரிய நிபந்தனைகளை, 'த'தில் அர்கான்'களை (தொழுகையில் அசைவின்றி இருக்க வேண்டிய செயல்கள்) மிகக்கவனமாக செய்து முடிக்கவேண்டும். நிசாப்புக்கு மேலதிகமாக பணம் இருப்பவர் சக்கத் கொடுக்கவேண்டும். இமாமுல் அஃ'லம் அபு ஹனீபா கூறுகிறார்கள்: "பெண்கள் ஆபரணங்களாக அணியும் தங்கத்துக்கும் வெள்ளிக்கும் சக்காத் கொடுப்பது அவசியம்."

தேவையற்ற 'முபாஹ்' வைக்கொண்டு ஒருவர் அவருடைய பெறுமதியான வாழ் நாட்களை வீணடிக்ககூடாது. தனது கற்பை ஹராமான விசயங்களில் ஈடுபடுத்தாமல் இருப்பது, அவசியமற்ற கேளிக்கைகளில், இசை வாத்தியங்களை பாடல்களை பாடுவது கேட்பது என்பன தவிர்க்கப்பட வேண்டும். எங்களது நப்ஸு அடையும் இன்பத்தினால் நாங்கள் ஏமாந்து விடக்கூடாது. அவை தேனும் இனிப்பும் கலந்த நஞ்சுமாதிரி .

ஒருவர் புறம் (ஃகீபத்) பேசுவதிலிருந்து தவிர்ந்து கொள்ளவேண்டும். ஃகீபத் என்பது முஸ்லிம் அல்லது சிம்மீஸ்களின் இரகசிய தவறை அவர்கள் இல்லாதபோது பேசுவது. ஹார்பிஸ்'களின் தீங்கைபற்றி முஸ்லிம்களுக்கு சொல்லப்பட வேண்டும். மேலும் இவ்வாறான பாவங்களை மக்கள் முன்னிலையில் பகிரங்கமாக செய்வதனால் ஏற்படும் பாவம், முஸ்லிம்களை படுகொலை செய்வதனால் ஏற்படும் பாவங்கள், வாங்குதல் விற்றல் என்பவற்றில் ஏமாற்றுவதால் ஏற்படும் பாவங்கள் மேலும் அவைகளின் தீங்குகளைபற்றி , இஸ்லாத்தை பற்றி தவறாக மற்றும் பிழையாக எழுதுவதால் மற்றும் பேசுவதால் ஏற்படும் பாவங்கள் பற்றி முஸ்லிம்களுக்கு சொல்லப்படவேண்டும். இந்த எச்சரிக்கைகள் ஃகீபத் ஆகாது.[**ரத்துல் முஹ்தார் 5- 263**].

முஸ்லிம்களுக்கிடையில் கதை சொல்லி திரியக்கூடாது. இந்த இரண்டுவகையான பாவங்களை செய்பவர்களுக்கு பல்வேறு வேதனைகள் செய்யப்படும். பொய் சொல்வதும், மற்றவர்களை தூற்றுவதும் தவிர்க்கப்படவேண்டும். இந்த இரண்டும் எல்லா மதங்களிலும்

தடுக்கப்பட்ட்ள்ளது. அவைகளுக்கான தண்டனை மிகப்பெரியது. முஸ்லிம்களின் தவறை மறைப்பதும், அவர்களின் இரகசிய பாவங்களை தெரியப்படுத்தாமல் இருப்பதும், அவர்களின் பிழைகளை மன்னிப்பதுவும் பெரிய நன்மைகளை கொண்டுவரும். தன்னை விட தாழ்ந்தவர்களுக்கும் தனக்கு கீழே இருப்பவர்களுக்கும்[மனைவிகள், பிள்ளைகள், மாணவர்கள் மற்றும் சிப்பாய்கள்], ஏழைகளுக்கும் இரக்கம் காட்ட வேண்டும். அவர்களின் தவறுக்காக அவர்களை தண்டிக்கக்கூடாது. அற்பமான காரனங்களுக்காக அவர்களை தாக்குவது அடிப்பது என்பன கூடாது. மற்றவர்களின் சொத்துகள், உயிர், கண்ணியம்,கற்பு என்பவற்றை மீறக்கக்கூடாது.

மற்றவர்களிடம் மற்றும் அரசாங்கத்திடம் இருந்து பெற்ற கடனை திருப்பி செலுத்தவேண்டும். இலஞ்சம் வாங்குவதும் கொடுப்பதும் சமனான பாவங்கள் ஹராமானது. இருந்தபோதிலும் கொடிய ஒருவனின் தனக்கு எதிரான அடக்குமுறையை தடுப்பதற்காக கொடுப்பது அல்லது இதைபோன்ற அருவருப்பான நிலைமைகளை தவிர்ப்பதற்காக கொடுப்பதும் இலஞ்சமாக கணிக்கப்படாது. இப்படியான நிலைமைகளில் இலஞ்சத்தை ஏற்றுக்கொள்வது ஹராமாகும். ஒவ்வொருவரும் தாங்கள் செய்த பிழைகள் தவறுகளை ஒவ்வொரு மணித்தியாலமும் நினைத்து பார்க்கவேண்டும்.

அல்லாஹு தஆலா அவரை தண்டிப்பதில் அவசரப்படுவதில்லை என்பதையும் அவரின் வாழ்வாதாரத்தை துண்டிக்கவில்லை என்பதையும் அவர் எப்போதும் மனதில் கொள்ள வேண்டும். ஷரியாவுடன் இணக்கமான ஒருவரின் பெற்றோரின் அல்லது அரசாங்கத்தின் கட்டளைகளுக்கு கீழ்ப்படிவது அவசியம். ஆனால் ஷரியாவுடன் இணக்கமற்ற கட்டளைகளை கூட நாம் பித்னாவை ஏற்படுத்துவோம் என்றிருந்தால் எதிர்க்கக்கூடாது. [**மக்தூபாத்** இல் மஃ'துமிய்ய என்ற நூலின் புத்தகத்தின் இரண்டாவது பாகத்தில் 123வது கடிதத்தை பார்க்கவும்.]

நம்பிக்கையைத் சரிசெய்து, ஃபிக்ஹ் தொடர்பான கட்டளைகளைச் செய்த பிறகு, அவருடைய எல்லா நேரத்தையும் அல்லாஹுத ஆலாவை நினைவில் வைத்துக் கொள்வதில் செலவிட வேண்டும். மார்க்கத்தின் பெரிய அறிஞர்கள் கூறிய மாதிரி அல்லாஹுத ஆலா வை ஒருவர் தொடர்ந்து நினைவில் நினைவுபடுத்த வேண்டும்,

அல்லாஹுத ஆலாவை நினைவு படுத்துவதிலிருந்து இதயத்தைத் தடுக்கும் எல்லா விஷயங்களிலும் விரோத மனப்பான்மையை ஏற்படுத்திக் கொள்ளவேண்டும். நீங்கள் ஷரீஆவை எவ்வளவு அதிகமாகப் பின்பற்றுகிறீர்களோ அவ்வளவுக்கு அல்லாஹுத ஆலாவை நினைவில் வைத்துக்கொள்வது மிகவும் சுவையாக இருக்கும். ஷாரியத்துக்குக் கீழ்ப்படிவதில் தயக்கம் அதிகரிக்கும் போது அந்த சுவை படிப்படியாக குறைகிறது, கடைசியில் முற்றிலும் போய்விடும்.

பெண்கள் மற்றும் ஆண்கள் ஒரே மாதிரியாக வெளியே செல்வதும், அல்லது பந்து விளையாட்டுகள் மற்றும் நீச்சல் போன்ற வெளிப்புற நடவடிக்கைகளில் அவர்களின் உடலை (அவ்ரத்தை) ஒழுங்காக

மறைக்காமல் ஈடுபடுவதும் இஸ்லாம் தடை செய்துள்ளது. (இஸ்லாம் ஒருவரின் உடலின் பாகங்கள் மற்ற மனிதருக்கு வெளிப்படுத்துவதை தடைசெய்கின்றது). மேலும் மனிதர்கள் தங்கள் அவ்ரத்தை வெளிக்காட்டிக்கொண்டு இருக்கும் இடங்களுக்கு செல்வதையும் தடைசெய்கின்றது. (ஹராம்) [ இஸ்லாமிய வாழ்க்கை நெறி ]. ஹராமானதில் ஈடுபடும்போது ஒருவர் தினசரி ஐந்து நேர தொழுகைக்காக ஒதுக்கப்பட்டுள்ளது நேரத்தை அதன் குறிப்பிட்ட காலத்திற்குள் செய்யாமல் வீணடிக்கப்படுகின்றது. இது பாவம் மட்டும் அல்ல அது அவரை நிராகரிப்பு நிலைக்கு இட்டுசெல்லக்கூடும்.

எந்தவொரு இசைக்கருவியையும் இசைப்பது ஹாராம், அத்துடன் இசையுடன் எந்த மத ரீதியான ஓதல்கள் உதாரணத்திற்கு குர்ஆனிலிருந்து (பந்திகளை) ஓதுதல், வாசித்தல், அல்லாஹ்வின் தூதருக்காக (மவ்லிது) ஓதுவது, தொழுகைக்காக அதான் (தொழுகைக்கு பரிந்துரைக்கப்பட்ட அழைப்பு) அதான் சொல்லுவது என்பனவும் ஹராம். மேலும், இசைக்கருவிகள் புல்லாங்குழல் சத்தமான ஒலிபெருக்கிகளை பாவித்தல் போன்றவற்றை அவ்வாறான மத ரீதியான நிகழ்சிகளுக்கு பயன்படுத்துவது ஹராம். மெல்லிசையுடன் கூறும் போது சில உயிரெழுத்துகள் நீட்டப்படுவதால் உண்மையான சொற்களைப் பாதிப்பதுடன் அதன் பொருட்கள் திரிவுபடக்கூடும். வஹ்ஹாபிகள் இந்த மவ்லித் போன்றவற்றை நபியவர்கள் மறைந்து விட்டார்கள், நீங்கள் கூறுவதை அவர் கேட்க முடியாது, என்ற காரணங்களை சொல்லி தடை செயவதற்கு முயற்சி செய்கிறார்கள். அவர்கள் அல்லாஹ்வை விட மற்றவர்களை புகழ்வது இணைவைப்பு என்கின்றார்கள்.

உண்மையில் அவர்கள் இவ்வாறு கூறுவதுதான் நிராகரிப்பு. ஒலிபெருக்கிகளை பாவிப்பது தொலைபேசியை பாவிப்பது போன்றதாகும். ஒலி பெருக்கிகள் மூலம் கேட்பது ஹராம் என்றால், அதை கல்வி போன்ற காரணங்களுக்காக பாவிப்பது ஆகுமானது. உதாரணத்திற்கு விஞ்ஞானத்தை கற்பிப்பதற்கு, , கலை, பொருளாதாரம் , மார்க்க அறிவு போற பிரயோசனமாண வற்றை போதிப்பதற்கு அனுமதிக்கப்பட்டது.

தார்மீக மற்றும் மதக் கோட்பாடுகளை பாதிக்கும் வகையில் இட்டுக்கட்டப்பட்ட ஊழல் வெளியீடுகளை அறிவிக்க ஒலிபெருக்கிகளைப் பயன்படுத்த அனுமதிக்கப்படவில்லை, அதான் கூறும்போது அதன் ஒலியைப் பெருக்கவும், மக்களின் தொழுகையின்போது அல்லது அத்தகைய நிகழ்ச்சிகளைக்கேட்பதற்கு அனுமதிக்கப்படவில்லை.

ஒலிபெருக்கியிலிருந்து வரும் அதான் சத்தம் மு'அதினின் குரல் சத்தமில்லை அது ஒலிபெருக்கியனால் உண்டாகப்ப்டா ஒலி. இதன் சத்தத்தை கேட்கும்போது நாங்கள் அதான் கூறப்படுகிறது என்பதை விட தொழுகைக்கான நேரம் என்று கூறவேண்டும். ஏனெனில் அது அதானின் பிரதியாகும்.

சில ஹதீது ஷரீப்கள் பின்வருமாறு: **“இறுதிநாள் நெருங்கும்போது குர் ஆனுல் கரீம் மிஸ்மார்ஸ் எனப்படும் கருவிகள் மூலம் ஓதப்படும்”**

**“ஒரு நேரம் வரும் அப்போது குர் ஆனுல் கரீம் மிஸ்மார்ஸ் எனப்படும் கருவிகள் மூலம் ஓதப்படும் அது அல்லாஹுூத்த ஆலா வை திருப்திப்படுத்துவதற்காக அல்ல ,ஆனால் இன்பத்துக்காக”**
**“அநேக மக்கள் குர் ஆனை ஓதுகிறார்கள். குர் ஆனுல் கரீம் அவர்களுக்கெதிராக சபிக்கின்றது”.**
**“ஒரு காலம் வரும் அந்த நேரம் முஅத்தின் களுக்கிடையில் அநேக கீழ்த்தரமான மக்கள் இருப்பார்கள்.”**
**“ஒரு காலம் வரும் அப்போது குர் ஆனுல் கரீம் மிஸ்மார்ஸ் எனப்படும் கருவிகள் மூலம் ஓதப்படும், அப்போது அல்லாஹுூத்தஆலா அவர்கள் மீது சாபமிடுவான்”.**

மிஸ்மார்ஸ் என்பது ஒருவகை இசைக்கருவி. விசிலைப்போன்றது. ஒலிபெருக்கியும் ஒருவகை மிஸ்மார்ஸ் தான். மு’அத்தின்கள் இந்த ஹதீதை பற்றி பயப்பட வேண்டும், ஒலிபெருக்கிகள் பாவிப்பதை தவிர்க்க வேண்டும். அறிவு குறைந்த மார்க்கவாதிகள் இருக்கிறார்கள் அவர்கள் ஒலி பெருக்கி பிரயோசனமானது என்றும் அவற்றை பாவிப்பதால் நீண்ட தூரத்துக்கு ஒலியை அனுப்பமுடியும் என்றும் கூறுகின்றனர். எங்கள் நபியவர்கள் அறிவுறுத்தியுள்ளார்கள்: **வணக்கங்களை என்னிடம் இருந்துபார்த்த மாதிரியும் என்னுடைய அஷ் ஹாபுகள் எப்படி செய்தார்களோ அதே மாதிரியும் செய்யுங்கள்! அந்த வணக்கங்களை மாற்றங்கள் செய்பவர்கள் அஹ்லுல் பித்’அத் என அழைக்கப்படுவார்கள்.** ( பித் ‘அ த், வழிகேடுகளுடைய மக்கள்). **பித் ‘அத், வழிகேடுகளுடைய மக்கள் நிச்சயமாக நரகம் செல்வார்கள். அவர்களின் எந்த அமலும் ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது.**” அதனால், மார்க்கத்தில் பிர யோசனமான மாற்றங்களை செய்யவேண்டும் என்ற வாதம் ஏற்றுக்கொள்ள முடியாது.

இப்படியான வாதங்கள் இஸ்லாத்தின் எதிரிகளால் தொற்றுவ்க்கப்பட்டவை. இஸ்லாமிய நடைமுறைகளை எதாவது மாற்றங்கள் தேவையா என்பதை தீர்மானிப்பது இஸ்லாமிய அறிஞர்களின் வேலை. இந்த மேதகு அறிஞர்கள் முஜ்’தஹிதுகள் என அழைக்கப்படுவர். முஜ்’தஹிதுகள் அவர்கள் விரும்பியவாறு மாற்றங்களை ஏற்படுத்தமாட்டார்கள். மாற்றங்களும், திருத்தங்களும் பித்’ஆ வா என்பதை அவர்கள் அறிவார்கள். அதானை ஒலி பெருக்கியில் (மிஸ்மார்) கூறுவது பித்’ஆ என்பது ஏகோபித்த முடிவு. அல்லாஹ்வை விரும்பும் பாதை இதயத்தின் மூலம்தான். படைப்பிலே இதயம் ஆனது கண்ணாடியைப்போன்று மிக தெளிவானது. வணக்க வழிபாடுகள் இதயத்தை தூய்மையாக்கி அதில் ஒளியை உண்டாக்கும். பாவம் இதயத்தில் இருளை உண்டாக்கி ஆன்மீக அறிவுகளை (“பாயித்”; நுட்பமான ஆன்மீக தகவல்கள்) பெறும் தன்மையை இழந்துவிடுவதுடன் தூய அன்பினால் உண்டாகும் “நூர்” ( ஒளி, ஒளி வட்டம்) ஐயும் இழந்து விடும். ஒரு சாலிகான(பக்தியுள்ள) மனிதர் இந்த இழப்பை உணர்ந்து துக்கமடைவார். அவர்கள் பாவங்கள் செய்வதை விரும்பாதவர்கள் ஆனால், அதிகம் அதிகமாக வணக்கங்களை செய்பவர்கள். அவர்கள் ஐந்து நேர தொழுகைகளை தவிர அவர்கள் மற்றைய தொழுகைகளையும் செய்வார்கள். பாவங்கள் செய்வது நப்சுக்கு மிக இன்பகரமாகவும் உபயோகமானதாகவும் தெரியும். எல்லா விதமான பித்’ஆக்களும் பாவங்களும் நப்சுக்கு உரமளிக்கும். ஆனால் அது அல்லாஹுூத்த ஆலாவுக்கு

எதிரானதாகவும் அதன் இருப்பை பலமுள்ளதாகவும் செய்யும். இதற்கு ஒரு உதாரணம், ஒலிபெருக்கியில் அதான் சொல்வது.

சிறுவர் பிராயம் அறிவை பெற்றுக்கொள்ளக்கூடிய வயது, இந்த மலரும் பருவம் தாண்டினால், முஸ்லிம் சிறுவர்கள் அறியாமாயில் வீழ்ந்து விடுவார்கள். அது மார்க்கமில்லாத எதிர்காலத்துக்கு வழி காட்டும். இந்தப்பேரழிவின் தாக்கங்களை மௌனமாக அவதானிக்கும்போது இந்தப்பாவதிற்கு பெரிய பங்குதாரிகள் மார்க்கத்துக்கு பொறுப்பான அதிகாரிகளாகும். ஒரு மனிதன் ஹலால் என்றால் என்ன ஹராம் என்றால் என்ன என்பதை அறியாதபோது அல்லது அவற்றை அறிந்த பிறகு அவற்றை கவனியாமல் வாழ்ந்தால் அவர் நிராகரிப்பவர் ஆவார். அவருக்கும் தேவாலயங்களுக்கு செல்பவர்கள் அல்லது சிலையை வணங்குபவர்களுக்கும் வித்தியாசம் இல்லை. மனிதனின் பெரிய விரோதி அவனுடைய நப்ஸ்தான். அது எப்பொழுதும் அவனுக்கு ஆபத்தானதைதான் செய்ய விரும்பும். நப்ஸின் விருப்பங்கள் ஷஹ்வா(காமவெறி) என்று அழைக்கப்படும். நப்ஸின் இந்த சரீர ஆசைகள் பெரிய இன்பத்தை அவனுக்கு கொடுக்கின்றது. அதை விரும்பிய அளவு செய்வது பாவம் இல்லை ஆனால் அதை மேலதிகமாகவும் எல்லை கடந்தும் செய்வது பாவமானதாகும்.

எமது முஸ்லிம் சிறார்களை இஸ்லாமிய கல்வியை பெறுவதிலிருந்து திசை திருப்புவதற்காக இஸ்லாத்தின் எதிரிகள் அவர்களுக்கு பந்து விளையாட்டு போன்ற உடற்பயிற்சி நடவடிக்கைகளில் ஈடுபடுத்துகின்றார்கள். அவ்ரத்தை வெளிக்காட்டு வதும், மற்றவர்களின் அவ்ரத்தை பார்ப்பதும் நப்சுக்கு விருப்பமான பொழுதுபோக்குகள் ஆதலால் பந்து விளையாட்டிற்கான மோகம் சிறுவர்களிடையே அதிகரித்துள்ளது. முஸ்லிம் பெற்றோர்கள் இதையிட்டு கவனமாக இருப்பதோடு அவர்களின் ஆண், பெண் மக்களுக்கு திருமணத்தை உரிய நேரத்தில் விரைவாகவே செய்து வைக்க வேண்டும். அவர்கள் ஆண் பெண் கலந்து குழுக்களாக வெளியில் செல்வதை தடை செய்வதுடன் அவர்கள் பந்து விளையாட்டில் சேர்வதை தவிர்க்க வேண்டும் ( ஏனெனில் இந்த விளையாட்டில் அவர்கள் அவரத் வெளியாவது தவிர்க்க முடியாதது.) அவர்களை ஒழுங்கான சாலிகான முஸ்லிம் ஆசிரியரிடம் மார்க்க கல்வியை பெறுவதற்கு அனுப்பி வைக்க வேண்டும்.

# ஹுசைன் ஹில்மி இஸிக்

## ரஹ்மதுல்லாஹி அலைஹி

ஹுசைன் ஹில்மி இஸிக் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் ஹகீகத் கிதாபேவி பிரசுரங்களின் வெளியிட்டவர். இஸ்தான்புளில் உள்ள அயுப் சுல்தான் என்ற இடத்தில் ஹிஜ்ரி 1329 (1911AD)இல் பிறந்தார்கள்.

அவர்கள் வெளியிட்ட நூல்களின் எண்ணிக்கை 144. அவற்றில் அரபியில் 60ம், பெர்சியன் மொழியில் 25ம் , துருக்கிய மொழியில் 14, மீதி பிரெஞ்சு, ஜேர்மன்,இங்கிலீஷ், ரசியன் ஆகிய மொழிகளில் வெளியிடப்பட்டன.

ஹுசைன் ஹில்மி இஸிக் ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்கள் மிகப் பெரிய அறிஞர் செய்யித் மிகச்சிறந்த மார்க்க அறிஞர், தஸவ்வுபின் ஆழ்ந்த ஒழுக்கமுள்ளவர் சீடர்களை முற்றாக வழி நடத்தும் ஆற்றல் கொண்ட ஞானத்தின் மகிமைகளை கொண்ட அப்துல் ஹக்கீம் அர்வாசி ரஹ்மதுல்லாஹி அலைஹி அவர்களினால் வழிகாட்டப்பட்டவர். மிகத்திறமமைகொண்டவர் பெரிய மார்க்க அறிஞர் இவர்கள் தான் பிறந்த அயுப் சுல்தான் என்ற இடத்திலேயே 8வது ஷா'பான் 1422 இல் (அக்டோபர் 26 2001) இல் மறைந்து அங்கேயே அடக்கம் செய்யப்பட்டார்கள்.

To: ஹகீகத் புக் ஸ்டோர்
அன்புக்குரிய இஸ்லாமிய சகோதரனே!

"அஸ்ஸலாமு அழைக்கும் வ ரஹ்மாதுல்லாஹி வ பரகாதுஹு".

எல்லா புகழும் அல்லாஹ்வுக்கே உரியது. சந்தியும் சலாமும் இஸ்லாத்தின் நபி சல்லள்ளாஹு அலைஹி வசல்லம் மீதில் உண்டாகுவதாக. அல்லாஹு தா ஆலா உங்களை பொருந்திக் கொள்வானாக.
மக்களை நேரான பாதையில் மீட்டு எடுப்பதற்காக நீங்கள் ஈடுபட்டுள்ள இந்த நற்செயல்களுக்கு உங்களுக்கு நன்றி கூறுவதற்காகவே நான் இந்த கடிதத்தை எழுதுகிறேன். நான் உங்களிடம் இருந்து மிப்பெறுமதியான: ENDLESS BLISS IV, BELIF AND ISLAM , THE SUNNI PATH எனும் நூல்களை பெற்றுக்கொண்டேன். நான் களா கத்ர் பற்றி கேள்வி கேட்டு சரியாக 6 நாட்களில் இந்த நூற்கள் என்னிடம் வந்து சேர்ந்தன. இதற்கு நான் எப்படி எந்த வார்த்தையை கொண்டு நன்றி சொல்வதென்று தெரியவில்லை. உண்மையில் நான் எனது நன்றியை இனிமேல் எனது வார்தையைகொண்டு

நிறுத்தப்போவதில்லை. எனது எளிய, பலவீனமான மனதிற்காக உங்களிடம் மன்னிப்பு கோருகின்றேன்.

முதலாவது தடவையில் நான் Endless Bliss III கிடைத்தவுடன் நன்றி தெரிவித்திருந்தேன் அதற்கானதும் மற்ற ஹகீகத் புக் ஸ்டோரின் மற்ற நூல்களினதும் விலையையும் கேட்டிருந்தேன். நீங்கள் எப்படியான மனிதர்! அதற்கான பணத்தினை என்னிடம் கேட்காமல் இன்னும் பல நூல்களை அனுப்பியுள்ளீர்கள். எனது மனதை குளிரவைத்து ,
நான் ஒரு முஸ்லிம் என்பதை உணர வைத்து இஸ்லாத்தின் எதிரிகளிடம் இருந்து பாதுகாக்கும் உங்களின் நல்ல உள்ளத்தினை பற்றி என்ன சொல்வது என்று எனக்கு புரியவில்லை. அல்லாஹு த ஆலா உங்களை பொருந்திக் கொள்ளட்டும், உங்களுக்கு இரக்கம் காட்டட்டும், அல்லாஹ் இதற்குரிய நன்மைகளை மிக அதிகமாகவே தரட்டும் இன்னும் அந்த மேலான முடிவடையாத இன்பத்தையும் தர வேண்டும் என்று பிரார்த்திப்பதைவிட வேறு வார்த்தைகளே இல்லை.

இப்போது பெறப்பட்ட 'முடிவில்லாத பேரின்பம் IV' இல் மற்றவர்களுடன் சேர்ந்து எனது கவனத்தை செலுத்துகையில், நீங்கள் இஸ்லாத்தை அதன் முழுமையான தூய்மையில் முன்வைக்கிறீர்கள் என்பதை என்னால் தீர்மானிக்க முடியும். மேலும் எனது பெரும்பாலான கேள்விகளுக்கு இது பதில்களை வழங்கியுள்ளது என்று நல்ல அதிகாரத்துடன் சொல்வதில் நான் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன். இந்த புத்தகம் முஸ்லிம்களின் நடைமுறை நம்பிக்கையையும் கடமையையும் கற்பிக்கும் ஒரு தனித்துவமான புத்தகம். வெளியே செல்லும் போது அது என் நண்பராகிவிட்டது, தனியாக இருக்கும்போது அது என் துணை, கற்கும்போது என் ஆசிரியர், பிரார்த்திக் கும்போது என் வழிகாட்டி. எல்லா நூற்களும் மிகவும் பெறுமதி வாய்ந்தவை. ஒருவர் ஆடம்பர, செழிப்பான மற்றும் நல்ல வாழ்க்கைக்கு தன்னை விடைகொடுக்கக்கூடாது , ஆனால் கடினமாக பாடுபட வேண்டும், இஸ்லாமிய அறிவில் ஆழமாக கற்றுக் கொள்ள வேண்டும், உண்மையான மார்க்கத்தின் செய்தியை எல்லா வயதினருக்கும் தெரிவிக்க வேண்டும் என்பதை உணர்ந்து கொண்டேன்.

இருப்பினும், எனது தந்தை ஒரு நல்ல நடைமுறை முஸ்லீம் அல்ல என்ற கசப்பான உண்மையை உங்களுக்குத் தெரிவிக்க நான் மிகவும் வருந்துகிறேன். பல ஆண்டுகளுக்கு முன் இஸ்லாமிய மதத்தை நான் கற்றுக்கொள்வதற்கு இது தடையாக இருந்தது. நான் பல ஆண்டுகளாக ஒடுக்கப்பட்டவர்களின் ஒருவனாக இருந்துள்ளேன், எங்கள் வீட்டில் ஒரு இடத்திலும் அமைதி இருக்கவில்லை , எல்லா நேரங்களிலும், நாட்களிலும், ஆண்டுகளிலும் எனது திறமைக்கு ஏற்றவாறு விஷயங்களை ஒழுங்கு படுத்துவதற்கும், இந்த சூழ்நிலையிலிருந்து விலகிச் செல்வதற்கும் என் முழு சிந்தனையையும் செலவிட்டிருக்கிறேன். இந்த நேரத்தில்தான் என் வயதில் ஒரு இளைஞன் என் வாழ்க்கையில் வந்தான். நாங்கள் மிகவும் நெருக்கமாக இருந்திருக்கிறோம். நாங்கள் பொதுவாக எங்கள் தனிப்பட்ட விவகாரங்களை ஒருவருக்கொருவர் கலந்துரையாடுவோம். எனது பிரச்சினை பற்றி உரையாடியபின் உங்கள் வெளியீட்டிற்கு எழுதுமாறு அவன் எனக்கு அறிவுறுத்தினான்.

பல ஆண்டுகளாக, என்னை ஒரு முஸ்லீமாக மாற்றுவதைப் பற்றி சிந்திக்க நான் தீவிரமாக அமர்ந்திருக்கிறேன். புனித குர்ஆனையும் அதன் உத்தரவுகளையும் தடைகளையும் உண்மையாகவும் தெளிவாகவும் ஏற்றுக்கொள்வதற்கும் அவற்றை முழுமையாக நடைமுறைக்குக்

கொண்டுவருவதற்கும் ஒரு உண்மையுள்ள முஸ்லீமாக இருப்பது எப்படி என்பதை நான் ஆராய்ந்தேன்.

உலகின் இந்த பகுதி மக்கள் மிகவும் ஊழல் மிக்கவர்கள், மதத்தின் விளையாட்டை உருவாக்கும், மதத்தில் வர்த்தகம் செய்யும், மற்றும் மதத்தை வியாபாரமாக மாற்றும் பல மதவெறி குழுக்கள் உள்ளன. முஸ்லீம் தலைவர்கள் என்று கூறுபவர்களில் சிலர் இஸ்லாத்திலிருந்து விலகிச் சென்றுள்ளனர். பலர் மதத்தை ஒரு இலாபகரமான வணிகமாக மாற்றியுள்ளனர், அதில் இருந்து அவர்கள் மில்லியன் கணக்கான நைராவை (நைஜீரிய நாணயக் குறிப்பு) பெறுகிறார்கள். உண்மையில் ஒருவர் மிகவும் கவனமாக இருக்க முடியாது.

மதத் தலைவர்கள் நம்பிக்கையை வெறும் வாய் வார்த்தைகளாகக் குறைத்துள்ளனர், இது அலங்கரிக்கக்கூடிய அழகான சொல்லாட்சிகளால் கைதட்டல்களை ஈர்க்கும். உங்கள் வெளியீட்டில் என்னை இணைத்தபின், எனக்கு வேறு யாரும் தேவையில்லை என்பதையும், இந்த உலகில் ஹத்ரத் ஹில்மி யிஸிக் தவிர வேறு எதுவும் தேவையில்லை என்பதையும் நான் இப்போது உணர்ந்துள்ளேன்.

உண்மையான மற்றும் சரியான அறிவைத் தேடத் தவறினால் மறுமையில் எனக்கு வருத்தப்பட வேண்டியது அதிகம் இருக்கும் என்பதை நான் புரிந்துகொண்டேன். நான் இஸ்லாத்தை கற்றுக் கொள்ளவோ, பயிற்சி செய்யவோ, சேவை செய்யவோ இல்லையென்றால் என் வழக்கை நியாயப்படுத்த என் அல்லாஹ்விடம் நான் என்ன சொல்ல வேண்டும்?

இஸ்லாத்தின் அன்புள்ள சகோதரர்களே, நான் எனது மனதை தேற்றிக்கொண்டேன், இஸ்லாம் மதத்தை மட்டும் கற்றுக் கொள்ளத் தயாராக இருக்கிறேன். மக்களை அவர்கள் அழிவுக்கு இட்டுச் செல்லும்போது உதவியற்றவர்களைப் பார்த்து கைகளை மடித்துகொண்டு உட்காந்திருப்பதற்கு நான் விரும்பவில்லை. எனவே துருக்கிக்கு வருவதற்கான எனது கோரிக்கையை நீங்கள் சாதகமாகக் கருதினால் நான் மிகவும் மகிழ்ச்சியடைவேன். உங்கள் நடவடிக்கைகள் அனைத்திலும் உங்களுடன் இருப்பேன் மற்றும் இஸ்லாத்திற்கான போராட்டங்கள் ஆகியவற்றின் அனைத்து துறைகளிலும் நான் உங்களுடன் இருக்க விரும்புகிறேன், ஏனெனில் இது எனது செயல்பாடும் மற்றும் போராட்டங்களும் ஆகும். உங்கள் வழிகாட்டுதலின் கீழ் மற்றும் உங்கள் உதவியுடன் சரியான தீனைக் கற்றுக் கொள்ளவும், என்னை ஹனபி மதுஹபுக்கு ஏற்ப மாற்றிக் கொள்ளவும் நான் விரும்புகின்றேன்.

எனது கோரிக்கை ஏற்றுக்கொள்ளப்பட்டால், எனது போக்குவரத்து ஏற்பாடுகளை நான் எவ்வாறு செய்ய வேண்டும் என்பது குறித்த விவரங்களை நீங்கள் எனக்குத் தருமாறு வேண்டுகிறேன்.

இதற்கிடையில், எனக்கு இன்னும் எந்தவிதமான ஏற்பாடுகளும் இல்லாததால், எனது போக்குவரத்து கட்டணத்தை சம்பாதிக்க சில வருடங்கள் வேலை செய்ய விரும்புகிறேன்.

எனது புகைப்படத்தின் நகலை இணைத்து, எனது கடைசி கடிதத்தில் களா மற்றும் கத்ர் குறித்து சில கேள்விகளைக் கேட்டேன் என்று மீண்டும் சொல்ல விரும்புகிறேன். மகிழ்ச்சியுடன், முடிவில்லாத பேரின்பம் IV எனது புதிர்களுக்கு ஒரு பதிலை வழங்கியுள்ளது.

உங்கள் மதிப்புமிக்க புத்தகங்களை நீங்கள் தொடர்ந்து எனக்கு அனுப்புமாறு வேண்டிகொள்கிறேன். இஸ்லாத்தின் எதிரிகளின் ஊழல் நடவடிக்கைகள் மற்றும் புத்தகங்களுக்கு எதிராக எதிர்த்துப் போராடுவதற்கும் என்னை பாதுகாப்பதற்கும் நான் உங்கள் ஆதரவை நாடுகிறேன். நீங்கள் எங்கிருந்தாலும் அல்லாஹ் உங்களுக்கு நல்லதை வழங்குவானாக! ஆமின், வஸ்ஸலாம்.

இஸ்லாத்தில் உங்கள் சகோதரன்,
அலாபி

c / o முஹம்மது ஷேக்,
பி.ஓ. பாக்ஸ் 1071
ஒக்போமோசோ, ஓயோஸ்டேட்
நைஜீரியா

## சொற்களின் பொருள்

தசவ்வுஃப் தொடர்பான உள்ளீடுகளை அஹ்மத் அல்-ஃபாரூக்கி அஸ்-சிர்ஹிந்தி 'ரஹ்மாதுல்லாஹி தஆலா அலைஹி அவர்களின் மக்துபாத் எனும் நூலில் பார்க்கவும்.

**ஆபித்**: அதிகம்' இபாதா (வணக்க வழிபாடு) செய்பவர்.

**அஹ்ல் அல்-பைத்**: - நபியின் ''அலைஹிஸ்ஸலாம் அவர்களின் உடனடி உறவினர்கள் (பெரும்பாலான இஸ்லாமிய அறிஞர்களின் கூற்றுப்படி,)' அலி ரலியல்லாஹு தஆலா அன்ஹ: முதல் உறவினர் மற்றும் மருமகன்; ஃபாத்திமா ரலியல்லாஹு த ஆலா அன்ஹா: மகள்; ஹசன், ஹுசைன் ரலியல்லாஹு தஆலா அன்ஹுமா பேரன்மார்

**அ'இம்மத் 'அல் மதாஹிப்**: மதுஹபுகளின் இமாம்கள்

**ஆலிம்:** இஸ்லாத்தின் முஸ்லிம் அறிஞர்.

**அள்ளாஹு த'ஆலா**: - எல்லா வகையான மேன்மையும் அல்லாஹ்வுக்கு சொந்தமானது.

**அன்சார்**: மக்காவைக் கைப்பற்றுவதற்கு முன்னர் இஸ்லாத்தை ஆதரித்த மதீனர்கள்.

**அக்சா**: ஒரு நாணயம், பணத்தின் அலகு.

**அரபாத்**: மக்காவிலிருந்து வடக்கே 24கிலோமீட்டர் தொலைவில் அமைந்துள்ள திறந்தவெளி.

**அர்ஷ்**: ஏழு வானம் மற்றும் குர்ஸியின் எல்லையின் முடிவு,
**குர்ஸி** இது ஏழாவது வானம் இல்லாமல் மற்றும் 'அர்ஷுக்குள்' உள்ளது.

**அஸ்ர் அஸ்-ச'ஆதா**:நபி 'அலைஹிஸ்ஸலாம்' மற்றும் நான்கு கலீபாக்கள் 'ரலியல்லாஹு த ஆலா அன்ஹும்' அவர்களின் செழிப்புமிகு சகாப்தம்.

**அவ்லியா**: வலியுல்லாஹ் இன் பன்மை .

**அவ்காப்f:** (வக்ப்f என்பதன் பன்மை) புனிதமான அல்லாஹ்வுக்காக ஒதுக்கப்பட்டவை. Endless Bliss 5அம் பாகம் 44 அத்தியாயத்தின் பிற்பகுதியைப் பார்க்கவும்

**ஆயத் கரீம்**: அல்குர்ஆன் அல்கரீமின் வசனம்.

**அzஸிமா**: ஒரு வணக்கம் அல்லது செயலை செய்வதற்கான கடினமான வழி.

**Bபஸ்மலா**: அரபு சொற்றொடர் "பிஸ்மில்லாஹிர்ரஹ்மானிர்ரஹீம்" அருளாளன் அன்புடையவனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்.

**Bபித்'அத்**: ஒரு செயல், நம்பிக்கை அல்லது சொல் இஸ்லாத்தில் முந்தி இருக்காதது புதிதாக கண்டுபிடிக்கப்பட்டது.

**Bபாத்தில்**: தவறானது, பிழை, வீணானது.

**திக்ர்**: அல்லாஹ்வை நினைவில் வைத்திருப்பதற்கான, மனதில் வைத்து, ஒவ்வொரு கணமும் நினைப்பதற்கான சொல்வதற்கான சொற்றொடர்.

**திர்கம்**: மூன்று கிராம் எடை அலகு.

**எஃfபெண்டி**:ஒட்டோமான் அரசு அரசியலில் உள்ளவர்களுக்கும் குறிப்பாக மத அறிஞர்களுக்கும் வழங்கிய கௌரவ பட்டம்; முகவரியின் ஒரு வடிவம், அதாவது "உங்கள் சிறந்த ஆளுமை".

**fபக்கீஹ்**: (fபுக்கஹாவின் பன்மை): இஸ்லாமிய fபிக்ஹு அறிவியலில் தேர்ச்சி பெற்ற ஒரு இஸ்லாமிய அறிஞர் 'பக்கீஹ்' என்று அழைக்கப்படுகிறார், மேலும் இது இஸ்லாமிய நடைமுறைகள், வழிபாட்டு நடவடிக்கைகள், சமூக தொடர்பு கள், இஸ்லாத்தின் தண்டனைக் குறியீடு, வணிக தொடர்புகள், இஸ்லாமிய நீதித்துறை, சிவில் மற்றும் கூட்டு உரிமைகள் போன்றவற்றைக் கையாள்கிறது.

**fபர்ளு**: ஒரு வணக்கம் அல்லது செயல் குர்ஆனுல்-கரீமில் அல்லாஹுதஆலாவால் கட்டளையிடப்பட்டது.

**fபர்ளு 'அய்ன்**: ஒவ்வொரு முஸ்லிமுக்கும் fபர்ளு, கட்டாயம்.

**fபர்ளு கிஃபியா**: ஆகக்குறைந்தபட்சம் ஒரு முஸ்லீமாவது செய்ய வேண்டிய fபர்ளு.

**fபாத்திஹா**: குர்ஆன் அல்-கெரமின் 114 சூராக்களில் முதலாவது, ஏழு ஆயத்களை கொண்டுள்ள சூரா.

**fபத்வா**: i) ஒரு முஜ்தாஹித்தின் இஜ்திஹாது; ii) ஃபிக் புத்தகங்களிலிருந்து அவற்றில் கூறப்படாத ஒன்று அனுமதிக்கப்படுகிறதா இல்லையா என்ற (ஒரு முfப்தியின் முடிவு; iii) மார்க்க சம்பந்தமான கேள்விகளுக்கு இஸ்லாமிய அறிஞர்களின் பதில்;).

**fபிக்ஹு:** முஸ்லிம்கள் எதை செய்ய வேண்டும், செய்யக்கூடாது என்பதைக் கையாளும் சட்ட அறிவு; (செயல்கள், இபாதத் என்பன).

**fபித்னா,fபசாத்:**முஸ்லிம்களுக்கும்இஸ்லாத்திற்கும்தீங்கு விளைவிக்கும் அறிக்கைகள் மற்றும் செயல்களை பரவலாக பரப்புதல்.

**fபுகஹாஹ்**: (fபகீஹ் என்பதன் பன்மை).

**gகபான் fபாஹிஷ்**: நடைமுறையிலுள்ள விலைகளை விட அதிக விலை கொடுத்து வாங்குவதன் மூலம் மிகவும் ஏமாற்றப்படுவது.

**gகாஸா**: முஸ்லிமல்லாதவர்களை இஸ்லாத்திற்கு மாற்றுவதர்க்காக அவர்களுக்கு எதிராக செய்யப்படும் ஒரு வகையான ஜிஹாத், இந்த வகையான ஜிஹாத்தை ஒரு நாட்டின் அரசாங்கத்தால் மட்டுமே கொண்டு செல்ல முடியும். தனிப்பட்ட முஸ்லிம்கள் அல்லது சமூகங்கள் அல்லது முஸ்லிம்களின் குழுக்கள் இந்த வகையான ஜிஹாத் செய்ய உரிமை இல்லை.

**gகாஸி**: gகாஸாவில் ஈடுபட்டுள்ள முஸ்லிம்.

**ஹதீத் ஷரீப்**: i) நபி 'அலைஹிஸ்-சலாம்அவர்களின் சொல். அனைத்து ஹதீஸ்களும் ஒட்டுமொத்தமாக அல்-ஹதீத் அஸ் -ஷரீஃப்:; ii) 'இல்ம் அல்-ஹதீத்; iii) ஹதீஸ் ஷெரீப் புத்தகங்கள். iv) அல்-ஹதீத் அல்-குத்ஸி அஸ்-சஹீ, அல்-ஹசன்: பல வகையான ஹதீஸ்கள் (இதற்காக Endless Bliss, பாகம் 2 ஐ பார்க்கவும்.

**ஹத்ரத்**: இஸ்லாமிய அறிஞர்களின் பெயர்களுக்கு முன் பயன்படுத்தப்படும் மரியாதைக்குரிய தலைப்பு.

**ஹஜ்**: மக்காவுக்கு புனித யாத்திரை.

**ஹலால்**: இஸ்லாத்தில் அனுமதிக்கப்பட்ட செயல்கள், நடத்தைகள் பொருட்கள் ,

**ஹனஃபி**: ஹனபி மதுஹபை சேர்ந்த முஸ்லிம்.

**ஹன்பலி**: ஹன்பலி மதுஹபை சேர்ந்த முஸ்லிம்

**ஹராம்**: இஸ்லாத்தால் தடைசெய்யப்பட்ட செயல், பொருட்கள்.

**ஹசன்**: (ஹதீத், பார்க்கவும்).

**ஹிஜ்ரி:** மக்காவிலிருந்து மதீனாவிவிற்கு நபி'அலைஹிஸ்-சலாம்' குடிபெயர்ந்தது; அல்-ஹிஜ்ரா.

**ஹிஜாஸ்**: அரேபிய தீபகற்பத்தில் உள்ள பகுதிமக்கா மற்றும் மதீனா அமைந்துள்ள செங்கடலில் கரை யோர பிரதேசம்.

**ஹுஜ்ரத் அஸ்-சஆதா** (**அல்-முஅத்தாரா**): நபி 'அலைஹிஸ்-சலாம்' மற்றும் அவரது இரண்டு கலீஃபாக்களின் கல்லறைகள் இருக்கும் அறை.

'**இபாதா**: வணக்கம், வழிபாடு, செயல்,மறுமையில்

தவாப் (நன்மை) வழங்கப்படும்.

**ஈத்**: ஆண்டுதோறும் இரண்டு இஸ்லாமிய பெருநாட்கள்.

**இஜ்திஹாத்**: ஒரு முஜ்தஹித் மூலம் ஆராய்ந்து எடுக்கப்படும் முடிவு. குர் ஆனின் ஒரு ஆயத்தில் அல்லது ஹதீதில் மறைவாக கூறப்பட்ட விஷயம் ஒன்றை ஆராய்ந்து தீர்வொன்றை பெற்றுக்கொள்ள முயற்சி செய்வது.

**இல்ம்** : அறிவு, அறிவியல்; **இல்முல் ஹால்** : (புத்தகங்கள்) இஸ்லாமிய போதனைகள் (ஒரு மதுஹபின்) ஒவ்வொரு முஸ்லிமும் கற்றுக் கொள்ள உத்தரவிடப்பட்டுள்ளது; '

**இல்முல் உசூல்**l: முறைசார் அறிவியல், f பிக்ஹு மற்றும் கலாம் பற்றிய அறிவு..

**இமாம்**: i) ஆழமான அறிவு பெற்ற ஆலிம் ii) ஜமாஅத்தின் தலைவர்; iii) கலீஃப் (கலீஃபா).

**ஈமான்** : நம்பிக்கை, இஸ்லாத்தின் நம்பிக்கைகள்; கலாம், இ'திகாத்.

**ஜாஹிலிய்யா**: அஞ்ஞானத்தின் சகாப்தம், அதாவது இஸ்லாத்திற்கு முந்தைய அரேபியா.

**ஜமா’அ** : சமூகம்; ஒரு மசூதியில் முஸ்லிம்களின் அவை (இமாம் தவிர); தோழர்கள்;

**ஜாரியா** போரில் சுவீகரிக்கப்பட்ட முஸ்லீம் அல்லாத பெண் அடிமை ஒரு சகோதரியைப் போல நடத்தப்படுபவர்.

**ஜிஹாத்**: முஸ்லிமல்லாதவர்களுக்கு (அல்லது நஃப்ஸுக்கு)எதிராக அவர்களை (அதை) இஸ்லாமாக மாற்றுவதற்கான போர்.

**ஜும்ஆ**: (நமஸ்) வெள்ளிக்கிழமை

**க’பா (துல்-முஅzஸ்ஸாமா**): மக்காவில் உள்ள பெரிய மசூதியின் பெரிய அறை.

**கலாம்**: ஈமான் பற்றிய அறிவு; இல்முல் கலாம் .

**கலிமத் அஷ்-ஷாஹாதா**: "அஷ்ஹது.." என்று தொடங்கும் சொற்றொடர் இஸ்லாத்தின் ஐந்து அடிப்படைகளில் முதலாவது; ஒருவரின் இஸ்லாத்தின் மீதான நம்பிக்கையை அறிவித்தல்.

**கராமத்**: உரையில் விளக்கப்பட்டுள்ளது.

**கலீபாf**: (குலfபா என்பது பன்மை ’) கலீஃப்.

**காரிஜி**: அஹ்லு பைதுக்களுக்கு எதிரான வழி தவறிய கூட்டத்தினர்.

**குத்பா**: ஜும்ஆ நாளில் தொழுகைக்கு முன்னர் இமாம் நிகழ்த்தும் பிரசங்கம். இது உலகம் முழுவதும் அரபியில் சொல்லப்பட வேண்டும் (வேறொரு மொழியில் செய்தால் பாவம்).

**மதுஹப்**: (பன்மை மதாஹிப்) குறிப்பாக ஃபிக்ஹ் இ’திகாத்துடைய ஒரு இமாம் கற்பித்தவை அனைத்தும்.

**மதீனத்துள் முனவ்வரா**: மதீனாவின் ஒளிரும் நகரம்.

**மஹ்ஸர்**: கடைசி தீர்ப்பு நாளில் ஒன்று கூட்டப்படும் இடம்.

**மக்கத் அல்-முகர்ரமா**: கண்ணியத்துக்குரிய நகரமான மக்கா.

**மக்றூஹ்**: (செயல், விஷயம்) முறையற்றது, விரும்பாதது மற்றும் நபி(ஸல்) அவர்களால் தவிர்க்கப்பட்டது.

**மக்றூஹ் தஹ்ரீமா**; அதிக அழுத்தத்துடன் தடைசெய்யப்பட்டுள்ளது; ஹராத்துக்கு நன்கு நெருங்கிய ஒன்று.

**மாலிகீ**: மாலிகீ மதுகபில் உள்ள ஒரு முஸ்லிம்.

**ம’ரிஃபா**: அல்லாஹ்வின் தாத், (சாராம்சம்) மற்றும் சிபத்து (பண்புகள்) பற்றிய அறிவு. அவ்லியாக்களின் இதயங்களுக்கு விளங்கப்பட்டது.

**மர்வா:** மஸ்ஜிதல்-ஹறமுக்கு அருகிலுள்ள இரண்டு மலைகளில் ஒன்று.

**மஸ்ஜித்**: மசூதி; மஸ்ஜிதல்-ஹராம்: மக்காவில் உள்ள பெரிய மசூதி; அல்-மஸ்ஜிதுன்நபி: மதீனாவில் உள்ளது நபிகள் நாயகத்தின் காலத்தில் கட்டப்பட்டது, பின்னர் பல முறை விரிவுபடுத்தப்பட்டது, அதில் அவரது புனித அடக்கஸ் தலம் உள்ளது.

**மவ்து :** ஹதீதின் ஒரு வகை. அறிஞரால் வகுக்கப்பட்ட சஹீஹ் ஆக இருப்பதற் குரிய நிபந்தனைகளில் ஒன்றை பூர்த்தி செய்யாத ஹதீத்

**மீலாதி** : கிறிஸ்தவ சகாப்தத்தின்; கிறகோரியன் நாட்காட்டி.

**மினா:** மக்காவிலிருந்து வடக்கே ஆறு கிலோமீட்டர் தொலைவில் உள்ள ஒரு கிராமம்.

**முபாஹ்**: கட்டளையிடப்படாத அல்லது தடைசெய்யப்படாத செயல் அல்லது பொருள். ஆனால் அனுமதிக்கப்படுகிறது.

**முஃப்சித்** : செயலை ரத்து செய்யும் விடயம் (குறிப்பாகதொழுகை ).

**முஃப்தி** : ஒரு பெரிய ஆலிம். ஃபத்வாவை வெளியிட அங்கீகாரம் பெற்றவர்..

**முஹாஜிரூன்** : மக்கா வெற்றிக்கு முன்னர் இஸ்லாத்தை ஏற்றுக்கொண்ட மக்காவை சேர்ந்த மக்கள்.

**முஜத்தித்**: இஸ்லாத்தை வலுப்படுத்துபவர், புத்தூக்கம் கொடுப்பவர். .

**மு'ஃஜிஸா**: நபிமார்களுக்கு விசேடமாக கொடுக்கப்பட்ட அதிசயங்கள். அல்லாஹு தஆலா அவர்களுக்காக நிகழ்த்தியது. உரையில் விரிவாக விளக்கப் பட்டுள்ளது.

**முகல்லித்**: தக்லிதை நடைமுறைப்படுத்தும் முஸ்லிம்; ஒரு இமாமின் மத்ஹபை பின்பற்றுபவர்.

**முஸ்தஹப்**: செயல் அல்லது பொருள் நன்மைக்குரியது., விடுபட்டால் பாவமில்லை, ஆனால், பிடிக்கவில்லை என்றால் அது அவநம்பிக்கை. (பாவம்)

**மு'தசிலா**: இஸ்லாத்தில் உள்ள 72 வழி கெட்ட கூட்டங்களில் ஒன்று

**முவாஜஹாத் அஸ்-சஆ'தா**: கிப்லா சுவருக்கு முன்னால் உள்ள இடம் [இதற்கு நபிஅலைஹி ஸ்ஸலாம் அவர்களின் புனித தலைப்பக்கம் உள்ள சுவர்., அங்கு செல்லும் பார்வையாளர் சன்னதியை எதிர்கொள்கிறார்.

**முஸ்தலிபா** : மக்கா நகரத்துக்கும் அராபத்துக்கும் இடையிலான பகுதி.

**நஃப்ஸ்**: மனிதனில் உள்ள சக்தி, அவனை மத ரீதியாக தீங்கு செய்ய விரும்புவது

**நஜாஸ்**: மத ரீதியாக தூய்மையற்ற விஷயம்,. முடிவில்லா பேரின்பத்தின் நான்காவது பாசிக்கிளில் விரிவாக விளக்கப்பட்டுள்ளது.

**நா-மஹ்ரம்**: திருமணத்திற்கு தடைசெய்யப்பட்ட எதிர் பாலின உறவினர் (ஹராம் இல்லை என்ற அளவுகளுக்குள் இல்லை).

**நிகாஹ்**: (நிச்சயதார்த்த செயல்) இஸ்லாத்தில் திருமணம். முடிவில்லாத பேரின்பத்தின் ஐந்தாவது பாசிக்கலின் பன்னிரண்டாம் அத்தியாயத்தைப் பார்க்கவும்.

**பாஷா**: ஒட்டோமான் மாநிலத்தால் அரசியல்வாதிகள், ஆளுநர்கள் மற்றும் குறிப்பாக உயர் பதவியில் உள்ள அதிகாரிகளுக்கு (இப்போது பொது ஆரட்மிரல்) வழங்கப்படும் கௌரவ பட்டம்.

**காதி**: முஸ்லிம் நீதிபதி; காதி.

**கிப்லா**: தொழுகையின் பொது முன்னோக்கும் திசை. இது க'பா முஅஸ்ஸமா வை முன்னோக்கியது.

**குரைஷ்**: நபிகள் நாயகத்தின் ''அலைஹிஸ்-ஸலாம் '. அவர்களின் அரபு சமூகம்

**குர்ஆன் அல்கரீம்**: புனித குர்ஆன்.

**ரகா'அ**: தொழுகையில் தொடர்ச்சியான செயல்: மற்றும் நின்று, குனிந்து, சிரம் பணிந்து (உட்கார்ந்து) செய்யும் செயல்கள், இதில் குறைந்தது இரண்டு மற்றும் அதிகபட்சம் நான்கு ரக்கா'ஆக்கள் உள்ளன.

**ரமலான்**: முஸ்லீம் நாட்காட்டியில் புனித மாதம்.

**ரசூலுல்லாஹ்**: முஹம்மது அலைஹிஸ்ஸலாம் அல்லாஹுௗதாவின் தூதர்.

**ரவ்தத்-அல்-முதஹ்ஹரா**: நபி'அலைஹிஸ்-ஸலாம் அவார்களின் கபுருக்கும் மிம்பருக்கும் இடையேயான இடைவெளி

**ருக் ஷா** : ஒரு மார்க்கவிடயத்தை , செயலை செய்வதற்கான எழிய வழி.;

**சஃfபா** : மஸ்ஜிதல்-ஹராமுக்கு அருகிலுள்ள இரண்டு மலைகளில் ஒன்று.

**சஹாபி**: நபி ''அலைஹிஸ்-ஸலாம்' யை ஒரு முறையாவது பார்த்த தோழர் (கள்).

**ஸஹீஹ்:** i) மதரீதியாக சட்டபூர்வமானது,செல்லுபடியாகும்; இஸ்லாத்திற்கு ஒத்துப்போகிறது; ii) ஹதீதின் அறிஞர்கள் விதித்த நிபந்தனைகளுக்கு ஏற்ப உண்மையானது.

**ஸலாத்** : i) தொழுகை ; ii) குறைந்தது இரண்டு அக்காக்களின் சடங்கு பிரார்த்தனை; பாரசீக மொழியில் நமாஸ்

**சலாவத்**: சிறப்பு பிரார்த்தனைகள் இதில் நபி 'அலைஹிஸ்-சலாம்' மீது உயர் பதவிகள் ஆசீர்வாதங்கள் கேட்கப்படுகின்றன.

**சாலிஹ்:** பக்தியுள்ளவர், பாவங்களிலிருந்து விலகியவர், (எதிர்: fபாசிக் ); வலியைப் பார்க்கவும்.

**ஷாஃபி**: ஷாஃபி மதுஹபை பின்பற்றும் ஒரு முஸ்லிம்

**ஷெய்க் அல்-இஸ்லாம்**: ஒரு இஸ்லாமிய அரசின் மத விவகார அலுவலகத்தின் தலைவர்.

**ஷிஆ** : இஸ்லாத்தில் உள்ள சுன்னி முஸ்லிம் அல்லாத பிரிவினர் .

**ஷிர்க்**: பல தெய்வக்கொள்கைகளை ஏற்படுத்தும் (அறிக்கைகள் , செயல்கள்) அல்லாஹ்வுடன் ஒரு கூட்டாளரை சேர்ப்பதை குறிப்பிடுகிறது.

**சுலகா**: ஸாலிஹ் என்பதன் பன்மை

**சுன்னா**: (செயல், விஷயம்) இது அல்லாஹுௗ தஆலாவால் கட்டளையிடப்படவில்லை என்றாலும், நபி (ஸல்) அவர்களால் விரும்பப்பட்டு செய்யப்பட்ட ஒரு வழிபாட்டுச் செயலாகும்.

(தவாப் உள்ளது, ஆனால் விடுபட்டால் பாவமில்லை) இது தொடர்ந்து விடுபட்டால் பாவத்தையும், பிடிக்கவில்லை என்றால் அவநம்பிக்கையையும் ஏற்படுத்துகிறது.

**சூரா** : குர்ஆனல்-கரீமின் ஒரு அத்தியாயம்.

**தப அத் தாபிஈன்** : நபி அலைஹிஸ்-சலாத்தை அல்லது ஒரு சஹாபியைப் பார்க்காத அறிஞர்கள், ஆனால் தாபிஈனைப் பார்த்தவர்கள் எனவே அவர்களின் வாரிசுகள்.

**தா'ஆ**: அல்லாஹுுதா விரும்பிய செயல்கள், ஆனால் அவை அவனால் விரும்ப ப்படுகின்றன என்பதை அறியத் தேவையில்லாமல் செய்யப்படலாம்.

**தாபிஊன் (அல்-இஸாம்)**:நபி அலைஹிஸ்ஸலாமை பார்க்காதவர்கள் ஆனால் சஹாபாதுல்-கிராம் ஒருவரை பார்த்த பெரும்பாளான முஸ்லிம்கள்; அவர்களின் வாரிசுகளும்.

**த'தில் அர்கான்**: தொழுகையில் உள்ள பல்வேறு செயல்களின் போது மற்றும் இடையில் உடலை சிறிது நேரம் அசைவில்லாமல் வைத்திருத்தல் அமைதியாக இருப்பது (எண்ட்லெஸ் பிளிஸ், III அத்தியாயங்கள் 14- 16ஐப் பார்க்கவும்

**தஃப்ஸீர்**: i) புத்தகம், ii) அறிவியல் ('இல்மத்- தஃப்ஸர்), iii) குர்ஆன் அல்-கரீமின் விளக்கம்.

**தக்லீத்**: நான்கு மதுஹபுகளில் ஒன்றைப் பின்பற்றுவது.

**தக்வா**: அல்லாஹு தஆலாவுக்கு அஞ்சுவது; தீங்குகளைத் தவிர்ப்பது; ' அzஸிமாக்களை நடைமுறைப்படுத்துவது (வாரா' மற்றும் ஜுஹ்த் பார்க்கவும்).

**தசாவ்வுஃப்**: அறிவின் ஆன்மீக கிளை மற்றும் (தன்னை ஃபிக்குஹுுடைய நடைமுறைகளை பின்பற்றிய பிறகு ஈமானை பலப்படுத்தும் நபி 'அலைஹிஸலம்' அவர்களின் நடைமுறைகள். இது (சரி'ஆ) ஃபிக்ஹ் நடைமுறையை எளிதாக்குகிறது மற்றும் ஒருவர் இல்முத் தசவ்வுfப் மரிஃபாவை அடைய காரணமாகிறது; '

**தவாfப்**: ஹஜ்ஜின் போது க'பத்துல் மு அஸ்ஸமாவை சுற்றுவது 'இபாதா'.

**தவக்குல்** : எல்லாவற்றையும் அல்லாஹூத் த ஆலாவிடம் மிருந்து பிரத்தியேகமாக எதிர்பார்க்கிறதும் நம்பிக்கை வைக்கிறதும் ஆகும். அதற்கு தேவையான வற்றை செய்துவிட்டு எதிர் பார்ப்பது. செய்யாமல் அதற்கு முன் தவக்குல் கவனிக்கப்படாதது.

**தவ்ஹீத்**: (நம்பிக்கை, அல்லாஹூத ஆலா ஒருவன் என்பதை நம்புதல்.

**த'ஸீர்**: இஸ்லாத்தில் விவரிக்கப்பட்டுள்ள ஒரு வகையான தண்டனை;

**தவாப்**: அல்லாஹுுதாவால் மறுமையில் வழங்குவதாக வாக்குறுதியளிக்கப்பட்ட வெகுமதி.

**உலமா**: ஆலிம் என்பதன் பன்மை , அதாவது இஸ்லாமிய அறிஞர்.

**உம்மா**: ஒரு நபியின் சமூகம், விசுவாசிகளின் சமூகம்

**உம்மா** (தல்-முஹம்மதியா): முஸ்லிம் உம்மா.

**உசூல்** : i) ஒரு இஸ்லாமிய அறிவியலின் முறை அல்லது அடிப்படைகள்; ii) அடிப்படை இஸ்லாமிய அறிவியலின் முறைகள், இல்முல் உசூல் ; iii) ஈமான், கலாம்.

**வாஜிப்** : செயல் அல்லது விடயம் நபி 'அலிஹிசாலம்' அவர்களால் ஒருபோதும் தவிர்க்கப்படாதது, ஆகவே ஃபர்ளு போன்றது கட்டாயம் தவிர்க்க ப்படக்கூடாது.

**வலி**: (பன்மை;அவ்லியா') அல்லாஹுதஆலாவால் நேசிக்கப்பட்டு பாதுகாக்க ப்படுபவர்;

**வாரா** ': (ஹராம்களைத் தவிர்த்த பிறகு) சந்தேகத்திற்குரிய விஷயங்களிலிருந்து
விலகுதல் (முஷ்தபிஹாத்).

**zசாஹித்**: zசுஹுத் உள்ள மனிதன்; சந்நியாசி.

**சக்காத்**: (ஆண்டுதோறும் செலுத்த வேண்டிய கடமை) குறிப்பிட்ட அளவு, குறிப்பிட்ட வகையான மக்களுக்கு, குறிக்கப்பட்ட சொத்து வகைகலிலிருந்து கொடுக்கப்பட வேண்டிய ஏழை வரி. இதை கொடுப்பதன் மூலம் மீதமுள்ள சொத்து சுத்திகரிக்கப்பட்டு அருள்பாலிக்கப்படும். அதைக் கொடுக்கும் ஒரு முஸ்லிம் தன்னை ஒரு துன்பகரமானவர் என்பதிலிருந்து பாதுகாக்கப்படுகிறார். தயவுசெய்து முடிவற்ற பேரின்பத்தின் ஐந்தாவது பாசிக்கலின் முதல் அத்தியாயத்தைக் காண்க.

**zசுஹுத்**: உலக விஷயங்களில் ஒருவரின் இதயத்தை ஈடுபடுத்தாதவர். முபாக்களிடமிருந்து கூட விலகியிருப்பவர்